# காவிரி

(கட்டுரைத் தொகுப்பு)


புலவர் கா. கோவிந்தன்



எழிலகம்

46, செல்வ விநாயகர் கோயில் தெரு,

திருவத்திபுரம் (செய்யாறு)

604407

# நூல் விவர அட்டவணை

நூலின் பெயர் : காவிரி
(கட்டுரைத் தொகுப்பு)

ஆசிரியர் : புலவர் கா. கோவிந்தன்

முதற் பதிப்பு : ஏப்ரல், 1990

இரண்டாம் பதிப்பு : செப்டம்பர், 1997

உரிமை : பதிப்பகத்தாருக்கு

வெளியீடு : எழிலகம்
46, செல்வ வினாயகர் கோயில் தெரு,
திருவத்திபுரம் (செய்யாறு)
திருவண்ணாமலை மாவட்டம்
604407
தொ. எண். : 04182, 22255

சென்னை முகவரி : 17/12, பீட்டர்ஸ் சாலைக் குடியிருப்பு
இராயப்பேட்டை, சென்னை-14.
தொ. எண் : 8528340

---

## விலை ரூ. 28-00

---

அச்சிட்டோர் வெற்றி அச்சகம்
91, டாக்டர் பெசன்ட் சாலை,
இராயப்பேட்டை, சென்னை-14.

# முன்னுரை

தமிழ் மொழி இனிமை வாய்ந்தது. "இனிமையால் இயன்ற இளமகளிர்" என்ற பொருள்பட வரும் "தமிழ் தழீஇய சாயலவர்" என்ற தொடரில் வரும் "தமிழ்" என்ற சொல்லே, இனிமை எனும் பொருள் தருவதாகும் எனக் கூறித் தமிழ் மொழிக்குப் பெருந்தொண்டு புரிந் துள்ளார் சீவக சிந்தாமணி என்னும் பெருங்காப்பியப் பேராசிரியர் திருத்தக்க தேவர்.

இனிய சொற்களைத் தேர்ந்து, இனிமையாகச் சொல்லாட விரும்பியவர் தமிழர்; தாம் கூற விரும்பும் ஒவ்வொரு கருத்தும், இனிமையுடையவாதல் வேண்டும்; இனிக்கும் வகையில் உரைக்கப் பெறுதல் வேண்டும் எனவும் விரும்பினார்கள். அவ்வாறே உரைத்தும் வந்தார்கள். செந்தமிழ் இலக்கியங்கள் அனைத்தும் இச்சிறப்புடையவாகும்.

"உள்ளத்தில் உண்மையொளி உண்டாயின், வாக்கி னிலே ஒளி உண்டாகும்" என்றார் ஒரு பெரியார்; தமிழர் வாக்கு இனிமை வாய்ந்தது. இது உண்மை என்பதைப் பழந்தமிழ்ப் பாக்கள் காட்டும் படப்பிடிப்பினைக் காணும் வாய்ப்பினைப்பெற்றார் அனைவரும் உணர்வர்.

பல நூறு ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த நம் பழம்பெரும் மூதாதையர்தம் பண்பாட்டுப் பெருமை யினை, இன்றைய தமிழரும் பிறரும் அறிந்துகொள்ளுதல் வேண்டும் என்ற அவாவின் விளைவாக அக்காலப் புலவர்கள் ஆயிரமாயிரம் பாக்களைப் பாடிச் சென் றார்கள். ஆனால், அவர்கள் பாடிச்சென்ற அப்பாக்களின் களஞ்சியத்தைக் காக்கத் தவறி விட்டனர், விழிப்புணர்வு அற்ற நம்மவர் சிலர்; என்றாலும், விழிப்புணர்வோடு

இருந்த மூதாதையர் சிலர், அழிந்தன போக, அழியா திருந்த அப்பழம் பாக்களை எல்லாம், அரிதின் முயன்று தேடிக் கொண்டார்கள்.

அவ்வாறு தேடிப்பெற்ற அப்பாக்களை ஊன்றிப் படித்த புலமைசால் பெரியார்கள் பலரும் ஒன்றுகூடி இருந்தும், அப்பாக்களில் பொதிந்து கிடக்கும் பொருள் வளம், அப்பாக்களின் அடி அளவு ஆகியவற்றை அளவு கோலாகக் கொண்டு, அப்பாக்களைப் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு என்ற தலைப்புக் களில் தொகுத்து நமக்கு அளித்துச் சென்றுள்ளனர்.

இவற்றையெல்லாம் உணராத பள்ளிப் பருவம், செய்யாறு உயர்நிலைப்பள்ளியில் பயின்று கொண்டிருந்த போது எங்கள் பள்ளிக்குத் தமிழாசிரியராய் வந்து சேர்ந் தார் சைவசித்தாந்த கலாநிதி ஔவை சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள். ஒரு நாள், வகுப்பறையில் தமிழ்ப் பாட நூலில் இடம் பெற்றிருந்த அரச்சந்தி புராணப் பாடல் ஒன்றில் வரும் "அவமே புறம் அளவுத்தனம்" என்ற தொடருக்குச் சொல்லிலக்கணம் கூறுமாறு மாணவர்களாகிய எங்களைக் கேட்டார். இலக்கண வகுப்பு என்றால், கொடுத்திருக்கும் பாட நூலில் ஒரு பகுதியை மனப்பாடம் செய்து ஒப்புவிப்பது தவிர்த்து வேறு முறையாக எங்களுக்குச் சொல்லாவது, இலக்கண மாவது என்பது ஒன்றும் புரியவில்லை. இறுதியாக ஆசிரியர் ஔவை அவர்கள், "இதற்கு இலக்கணம் இடவழுவமைதி தனித்தன்மைப் பன்மை" என்பதுதான் என்றார்கள். எங்களுக்கு மயக்கமே வந்து விட்டது. அதுவரை, வகுப்பில் தமிழ்ப் பாடம் எடுத்த எந்தத் தமிழாசிரியரும் எந்நிலையிலும் கூறாத சொற் றொடர் அது. "இடமாவது வழுவாது, அமைதியாவது தனித்தன்மைப் பன்மையாவது" என்பன குறித்து ஏதும் புரியாமல் விழித்தோம்.

அந்நிலையில், "என்னிடம் தமிழ் கற்றுக் கொள்ள விரும்பும் மாணவர்கள் எழுந்து நில்லுங்கள்" என்றார் ஔவை. எல்லா மாணவர்களும் எழுந்து நின்றோம். ஆசிரியர், "அப்படியானால் மாதம் ஐந்து ரூபாய் சம்பளம் தர வேண்டும்" என்றார்; ஒரு நால்வர் தவிர்த்து ஏனையோர் அமர்ந்து கொண்டனர்.

அந்நால்வருள் அடியேனும் ஒருவன்; மாலையில் ஆசிரியர் வீட்டிற்குச் சென்றோம்; ஐந்து ரூபாய் கேட்டது, மாணவர்களுக்குத் தமிழ் பயில வேண்டும் என்பதில் உள்ள ஆர்வத்தை அறிந்து கொள்ள; சம்பளம் எதுவும் வேண்டாம் என்று கூறித் தம்மிடம் இருந்த திரு. உலகநாதம் பிள்ளை அவர்கள் எழுதிய, வள்ளல் பாரியின் வரலாறு உரைக்கும் "கன்றும் கனி உதவும்" என்ற நூலைக் கொடுத்து, அந்நூல் முழுவதையும் மனப் பாடம் செய்து ஒப்புவிக்குமாறு பணித்தார்கள். அது தான் நான் படித்த முதல் தமிழ் நூல்; அதிலிருந்து கார் நாற்பது, களவழி நாற்பது, திருக்குறள் எனத் தொடங்கியது என் தமிழ்ப் படிப்பு.

1934இல் பள்ளியிறுதி வகுப்பை முடித்தேன். அப் போது ஆசிரியர் ஔவை அவர்கள் துணையால் தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் தலைவர், தமிழவேள். உமா மகேசுவரனார் தொடர்பு ஏற்பட்டது. அவர் அறிவுரை ஏற்று, "காவிரி" என்ற தலைப்பிட்ட கட்டுரையினை எழுதி அனுப்ப, அது தமிழ்ச் சங்க வெளியீடாகிய தமிழ்ப் பொழிலில் 1935இல் வெளிவந்தது. என் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை; அம்மகிழ்ச்சி உந்த மேலும் சில கட்டுரைகளைத் தொடர்ந்து எழுதி வந்தேன்.

பின்னர், தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகத் தலைவர், பவளவிழாக் கொண்டாடிய பெருந்தகையாளர் திரு.வ. சுப்பையாப் பிள்ளை அவர்கள் தமிழ் நூல்களுக்குச் சிறப்பளிக்க, "நற்றிணை மாநாடு," "அகநானூற்று மாநாடு" எனப் பல மாநாடுகளை நடத்தி

வந்தார்கள். 22-2-1942இல் சென்னையில், பேராசிரியர் தெ. பொ. மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் தலைமையில் நடைபெற்ற "நற்றிணை மாநாட்டில்" "பாலை" என்ற தலைப்பில் ஒரு சொற்பொழிவு ஆற்றினேன். அன்று முதல் அவர் தொடர்பு ஏற்படவே, அவர் வெளியிட்டு வந்த, "செந்தமிழ்ச் செல்வி" என்ற திங்கள் இதழில் சில கட்டுரைகளை எழுதி வந்தேன்; அவ்வாறு "தமிழ்ப் பொழில்", "செந்தமிழ்ச் செல்வி" வெளியீடுகளில் வந்த கட்டுரைகளின் தொகுப்பே இந்நூல்; 1935இல் நான் எழுதிய முதல் கட்டுரையின் பெயராகிய "காவிரி" என்பதையே இந்நூலின் பெயராக அமைத்துள்ளேன்.

பவள விழாக் கண்ட திரு. சுப்பையாப் பிள்ளை அவர்கள் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் பதிப்பாகவும் என் அருமை நண்பர், திரு. பழநியப்பன் அவர்கள் தம்முடைய "மலர் நிலையம்" வள்ளுவர் பண்ணை வெளியீடாகவும் வந்துள்ள என் நூல்களுக்குத் தமிழகம் தந்த ஆதரவினை, எழிலகம் முதல் வெளியீடாக வரும் "காவிரி" என்ற இந்நூலுக்கும் தருமாறு வேண்டுகின்றேன்; அதே நிலையில் எனக்குத் தமிழறிவூட்டிய பெருந்தகை ஔவை து. துரைசாமிப்பிள்ளை அவர்களுக்கும், எழுத்துலகிற்கு அறிமுகம் ஆகாத என்னையும் மதித்து, புலவர் வரிசை, அரசர் வரிசை என்ற பெயரால் 22 நூல்களை வெளியிட்டு, எழுத்துலகிற்கு என்னை அறிமுகம் செய்வித்த, திரு. வ. சு. பிள்ளை அவர்களுக்கும், அவரைத் தொடர்ந்து, "தமிழர் வரலாறு" என்ற நூலை வெளியிட முன் வந்திருக்கும் அவர் மருகர், திரு. முத்துக் குமாரசாமி அவர்களுக்கும், "மலர் நிலையம்", வள்ளுவர் பண்ணை உரிமையாளர் திரு. பழநியப்பன் அவர்களுக்கும், நன்றிப் பெருக்கோடு கூடிய என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

கா. கோவிந்தன்

# பொருளடக்கம்

# காவிரி

"தெய்வக் காவிரி" (சிலம். 10. கட்டுரை. 8). "சோழர் தங்குலக்கொடி". "தண்டமிழ்ப் பாவை" "காவிரிப் பாவை" (மணி. பதி- 23, 25, 12.) என்று சான்றோர்களால் வழங்கப் பெறும் காவிரியாறு, சூரபன்மனால் துன்புறுத்தப்பட்டு வருந்திய தேவர்கோன் நுதல்விழிநாட்டத் திறையோனைப் பூசித்தற் பொருட்டு, ஆக்கிய பூம்பொழிலினை, அவன் வேண்டுகோட்கிரங்கி, வளமுறச் செய்வான் விரும்பிய,முன்னாலுந் துணைக்கரத்தோன், நெடுங்கடலைக் குடங்கையால் முகந்துண்ட குறுமுனிவன் கமண்டலத்தைக் கவிழ்ப்ப, அதினின்றும் பெருக்கெடுத்து வந்தது என்பது ஒரு சாரார் கொள்கை. தன் புதல்வர் இருவரும், வணிகர் மகள், விசாகைக்கும், பார்ப்பனி மருதிக்கும் தீது செய்ய முயன்றார்கள் என்பதனைக் கேட்டு, அவர்களை வாள் கொண்டெற்றி வீழ்த்திய ககந்தனின் தந்தை, காந்தமன் என்பான், அகத்தியனை வேண்டியதன் பயனாக, அவன் கமண்டலத்தினின்றும் போந்தது என்பது மற்று ஒரு சாரார் கொள்கை. இதனை "கஞ்ச வேட்கையிற் காந்தமன் வேண்ட, அமர முனிவன் அகத்தியன் தனாது; கரகங் கவிழ்த்த காவிரிப் பாவை," (மணி. பதி. 10-12) என்று வரும் சொற்றொடர் வலியுறுத்துதல் காண்க.

இவ்விருவர் கொள்கைகளிலும், காவிரி, அமர முனிவன் அகத்தியன் தனது கரகத்தினின்றும் போந்தது என்பது மறுபட்டில தாதலினாலும், "குறுமுனி குண்டகைப் பழம்புணர் வகையே" (திவாகரம்) என்றும், "ஆதிமா தவமுனி யகத்தியன் தரு, பூதநீர்க் கமண்டலம் பொழிந்த காவிரி" (பெரிய. நாட்டு.2) என்றும் கூறுதலினாலும், காவிரி குறுமுனிவன் கமண்டலத்தினின்றும் போந்தது என்பது பெறப்படும்.

காவிரி, மேற்குத் தொடர்ச்சி மலையில், மைசூர் நாட்டின் மேற்கு எல்லைக்கண் உள்ள குடகு (Coorg) நாட்டில் பிரம்மகிரி என்னும் மலையில், கடல் மட்டத்திற்குச் சற்றேறக்குறைய ஐய்யாயிரம் அடிகட்குமேல் தலைகாவிரி என்னுமிடத்தில் உற்பத்தியாகின்றது. இதனை, "குடா அது, பொன்படு நெடுவரைப் புயலேறு சிலைப்பிற், பூவிரி புதுநீர்க் காவிரி" (புறம். 166) என்றும், "குடமலைப் பிறந்த கொழும் பஃறார மொடு, கடல் வளனெதிரக் கயவாய் நெரிக்குங் காவிரி" (சிலப்.10: 106-108) என்றும், "குடமலைப் பிறந்த தண்பெருங் காவிரி" (மலைபடு.527)என்றும் வரும் ஆன்றோர் கூற்றுக்களான் அறிக.

காவிரி, குடகுமலையில் உற்பத்தியாகி, சிறிது ஒழுகி, முப்பது அடி சதுரமும், மூன்று அடி ஆழமுமுள்ள பள்ளம் ஒன்றில் வீழ்ந்து, அதினின்றும் வழிந்தோடி வருகின்றது. புரட்டாசித் திங்களின் பிற்பகுதியும், ஐப்பசித் திங்களின் முற்பகுதியும் கூடிய முப்பது நாள்களிலும், குடகரும், மைசூர் நாட்டினரும், பிறரும் ஆங்குப் போந்து ஒன்று கூடுவர். பாட்டும், பண்ணும் எங்கும் முழங்கும். கார் காலம் கழிய, பயிர்களும், காடுகளும் வளர்ந்து பூத்து நிற்கும் தோற்றமும், முகிலற்று விளங்கும் வானின் தோற்றமும், அழகு நிறைந்து அவர்களுக்கு மிக்க இனிமை

யைப் பயக்கும். இதனை, "தங்குலக் கோதிய தகைசாலணி யினர், இருள்படப் பொதுளிய சுருளிருங் குஞ்சி, மருள் படப் பரப்பிய வொலியன் மாலையர், வடஞ்சுமந் தோங் கிய வளரிள வனமுலைக், கருங்கய னெடுங்கட் காரிகை யாரொடு, இருங்குயி லால வினவண் டியாழ்செய, அரும்பவிழ் வேனில் வந்தது வாரார், காதலர் என்னு மேதகு சிறப்பின், மாதர்ப்பாணி வரியொடு தோன்றக், கோல்வளை மாதே கோலங் கொள்ளாய், காலங் காணாய் கடிதிடித் துரறிக் காரோ வந்தது காதலரேறிய, தேரோ வந்தது செய்வினை முடித்தெனக் காஅர்க்குர வையொடு கருங்கயனெடுங்கட், கோற்றொடி மாதரொடு குடகந்தோன்ற" (சிலப். 26: 107—121)* எனவரும் அடிகளாற்றெளிக.

அவணின்றும் போந்தகாவிரி,பலமலைகளின் இடையே சிற்றாறுகள்பல தன்பால் வந்தடைய, மூன்று காவதங் கடந்து மைசூர் நாட்டின் சமநிலத்தை அடைந்து, ஆங்கிலேயரால், பன்முறையும் துரத்தப்பட்டு இறுதியில், இறந்து வீழ்ந்த திப்புசுல்தானுடைய தலைநகராகிய ஸ்ரீரங்கப்பட்டணத்தை,ஆற்றிடைக்குறை யாக்குகின்றது. அவ்விடத்திலோர் அழகியபொழிலின்நடுவண்,அழகும்க்கு அமைந்த மகம்மதியர்கோயில் ஒன்று, மைசூர் நாட்டின் பேரரசர்களான, ஐதர் அலி, அவன் மனைவி, அவன்

---

* In the famous Jambudwipa
There are many splendid kingdoms:
But, as high above all Mountains
Thrones the snowy Mahameru,
And as in the flowering forest
Blooms the Champaca the sweetest,
So is kodagu, a pearl kingdam.
Live in it, My friend, and prosper!

மகன் திப்புசுல்தான் ஆகிய இவர்களின் கல்லறைகள் மூன்றும், பார்ப்பார் கண்கள் பரவசமடையும் நிலையில் தன்னகத்தே அமைந்து விளங்க, விளங்குகின்றது.

இங்கிருந்து நான்கு காவதம் வரையில் காவிரி, சம நிலங்களில் பல ஊர்களிடை பல நீர்நிலைகளை நிரப்பிக் கொண்டு ஓடி, இருபிரிவாகப் பிரிந்து, சிவசமுத்திரம் என்னும் இடத்தை, இரண்டாவது ஆற்றிடைக்குறை யாக்குகின்றது. அவ்வாற்றிடைக் குறைக்குச் செல்வான் வேண்டி, இந்தியர்களால் கட்டப்பெற்ற, சேது (bridge) தமிழர்களின் சிற்ப வன்மை இற்று, என்பதைத் தெரிவிக் கின்றது. பல கற்களையும், பாறைகளையும் ஆற்றிடை யிட்டு, அதன்மேல் பக்கத்திற்கு நூறு கம்பங்களாக இருநூறு கம்பங்களை நாட்டி, அவைகளின் மேல் கனத்த கல் தூலங்களையிட்டு, அருந்திறல் அரவமொன்று வளைந்து வளைந்து செல்வதேபோல, வழி ஒன்று செய் யப்பட்டுள்ளது.

இச் சேதுவினின்றும் அரைமைல் துலைவில், காவிரி உயர்ந்த மலையினின்றும் கீழே விழுகின்றது. இது சிவ சமுத்திரம் நீர் வீழ்ச்சி எனப் பெயர் பெறும்.

இங்கிருந்து வந்து காவதம் வரையில் கிழக்குமுகமாக, பலமலைகள், குகைகள், காடுகள் இவற்றினிடை, தன் இரு கரைகளிலும், புள்ளி மான் கன்றுகள் பல துள்ளவும், புலி போன்ற கொடிய விலங்குகள் பல திரியவும், ஓடு கின்றது. ஈண்டு இதன் இரு கரைகளும், இருநூற் றைம்பது அடி உயர முள்ளதாக இருத்தலின், எத்துணை தூரம் நோக்கினும், ஒரு சிறு கிராமமாவது, மக்கள் நட மாட்டமாவது, அவர்கள் செல்லுதற்கேற்ற வழிகளா வது ஒன்றும் காணப் பெறவில்லை.

இத்தகைய நிலங்களைக் கடந்து, காவிரி,பலசிற்றூர் களையும், விளை நிலங்களையும் மெல்லக்கடந்து, ஒரு காலத்தில் மக்களும், விளைபொருளும் மிக்கு, புகழ் வாய்ந்த, காவேரி புரத்துக் கணவாயை அடைகின்றது. இக்கணவாயின் தலைப்பக்கம் பழமை வாய்ந்த கோயில் ஒன்று இருந்து, வழிப்போவார் பலர்க்கும் தங்குமிடமாக அமைந்துள்ளது. மலைநாட்டிற்குச் செல்ல வேண்டியோர் இக்கணவாய் மூலமாய்த்தான் சேறல்வேண்டும்.

காவிரி, தன் மலைநாட்டுப் பிரயாணத்தை ஈண்டு தவிர்ந்து செல்லுழி, இதன் நடுவண் சிறிய ஆற்றிடைக் குறைகள் பல உண்டாகின்றன. ஆற்றில் நீர்குறைந்து, இருப்புழி மாந்தர் பலர், அந்திவானின் அழகையும், மன்னவர் கன்னியராய் மங்கள மங்கையராய், நல்ல வாழ்வினராய், திங்கள் நிறைந்து வரும் மைந்தர் வயிற்றி னராய் சேய்இழையார் நடைபோல் அசைந்து வரும், இளந்தென்றலின் இன்பத்தையும் நுகர்வான் வேண்டி, மயில்பெடையைப்புல்லி யால, மணல் மேல் மடஅன்னங் கள்பல மல்க, பெடைவண்டுகள் பண்செய, குயில் பெடையோடு பாட சிறப்புற்று விளங்கும் இவ்வாற்றி டைக் குறைகளுக்குச் செல்வர்.

காவிரி இன்னணம் நான்கு காவதம் கடந்து செல் லுழி பவானி (a) என்னுமிடத்தில், (b) யெனப் பெயரிய நீல கிரியினின்றும் வரும் மற்றும் ஒரு சிற்றாறு இதனுடன் கலக்கின்றது. இவணின்றும் மைல்கள் சில கடந்த பின்றை ஈரோட்டிற் கருகில் தென்னிந்திய இருப் புப் பாதை ஒன்று, இதனைக் கடக்கின்றது.

---

(a) 1924-ஆம் ஆண்டில் வந்த வெள்ளப் பெருக்கி னால் இவ்வூரின் பல பாகங்கள் சிதைவுற்றன.

(b) இதனைப் பவானியாறு என்றும் வழங்குவர்.

இவ்விடத்தினின்றும் காவிரி, ஐந்து காவதம் ஓடக் கரூர்க்கருகில் ஆனைமலையினின்றும் போந்த அமராவதி என்னும் ஆற்றினை உடன் சேர்த்துக் கொண்டு ஒருமைல் அகலமுடையதாகிறது.

பின்னர், காவிரி காவதம் சென்று இரு பிரிவிற்றாகி ஸ்ரீரங்கத்தை மூன்றாவது ஆற்றிடைக்குறை யாக்கு கின்றது. ஈண்டு இவ்வாற்றிடைக் குறைக்குத் தென் பால் உள்ள பிரிவு, காவிரியெனவும், வடபால் உள்ளது கொள்ளிடம் எனவும் பெயர் பெறும். உயரிடத்தில் ஓடும் காவிரியின் நீர் அனைத்தும், கொள்ளிடத்தில் போகாத வாறு, இவ்விரண்டும் பிரியுமிடத்தில் கொள்ளி டத்தில், ஏழுஅடி உயரமும், எண்ணூறு அடி நீளமும் உள்ள, கற்சிறை (அணை) ஒன்று கட்டப் பெற்றுள்ளது.

இவ்வாற்றிடைக் குறைக்குச் செல்லுமாறு, அவ்விரு பிரிவிலும், இரண்டு சேதுக்கள் கட்டப் பெற்றுள்ளன. இத் துருத்தி முற்றிலும், மா பலா போன்ற கனிநிறை மரங்களும், கோங்கம், வேங்கை போன்ற மலர் நிறை மரங்களும், நெல், கரும்பு, சோளம் போன்ற விளைநிலங் களும் நிறைந்து விளங்கும். இதனிடை இருபத்தைந்து அடிஉயரமும் நான்கடி அகலமும் உள்ள ஏழுமதில்கள், ஒவ்வொன்றினுக்கும் இடை முன்னூற்று முப்பத்தாறு அடி இடைவெளியுடன், தாமரைமலரின் இதழ்கள் போன்று, அமைந்து விளங்குகின்றன. இவ்வெயில்களின் நடுவண், தாமரைப் பொகுட்டெனா நிற்பது, மூவுலகை ஈரடியால் அளந்துயர்ந்த முகுந்தன் கோயில். இக்கோயி லின் உள்ளே நீலமேகம் நெடும் பொற் குன்றத்திற் படிந்தது போல, ஆயிரமாக விரித்தெழுந்த தலையினை யும் அருந்திறலையுமுடைய பாம்பணைப் பள்ளிமீது, தேவரும் பிறரும் போற்ற, கிடந்தருளும் நெடுமாலின்

காட்சியைக் காணுதற் பொருட்டு மக்கள் பலர் இவ் வாற்றிடைக் குறைக்குச் செல்வர்.

இத்துருத்தியின் கிழக்கு முனையில், வெள்ளப் பெருக்கு மிக்குவருங்கால் மேட்டுப் பூமியில் பாயவேண்டி யன போக, எஞ்சிய நீரைக் கொள்ளிடத்தில் சேர்ப் பித்தற் பொருட்டு, சிவ சமுத்திரத்தில் கட்டியாங்கு, தமிழர்களால் கட்டப்பெற்ற மற்றுமொரு கற்சிறை ஒன்று, காவிரியில் கட்டப் பெற்றுள்ளது.

இக் கற்சிறையினின்றும் கொள்ளிடம், பல ஊர் களைக் கடந்து சென்று கடைசியில் சிதம்பரத்தின்அருகில் கடலுடன் கலக்கின்றது. காவிரி, ஆறென எண்ணத் தரும் கால்வாய்கள் பல, தன்னினின்றும் பிரிந்து, தென் னிந்தியாவின் நெற்களஞ்சியம் எனப்பெயர்பெறும், தஞ் சாவூர் நாட்டில்பாய்ந்து அதனை வளமுறச் செய்ய, தான் அந் நாட்டினைக் கடந்து ஓடி கும்பகோணத்தையும் கடந்து, இரண்டல்லது மூன்று மைல் வரையிலும் சென்று சில பல சிற்றாறுகளாகப் பிரிந்து இறுதியில் கடலுடன் சேர்கின்றது.

இனி, புனிறுதீர் குழவிக் கிலிற்று முலை போலச் சுரந்து வரும் காவிரி, வான் பொய்ப்பினும் தான் பொய் யாது நீர் மிக்கு வருதலின் இதன்கண், அந்தம் அறியா அருங்கலங்கள்பல என்றும்நின்று நிலவுதலோ டமையாது, இது, தான் பிறந்த இடத்திலுள்ள பொருள்கள் பல வற்றையும் கொண்டு வருகின்றது. இதனை, "வசையில் புகழ் வயங்குவெண்மீன், திசை திரிந்து தெற்கேகினும், தற்பாடிய தளியுணவிற் புட்டேம்பப் புயன்மாறி, வான் பொய்ப்பினும் தான் பொய்யா, மலைத் தலைய கடற் காவிரி" (பட்டி. 1—6.) என்றும், "இலங்கு கதிர் வெள்ளி தென்புலம் படரினும், அந்தண் காவிரி வந்து கவர்பூட்ட" (புறம். 35) என்றும்,"கங்கைப்பேர் யாற்றினும் காவிரிப்புன

வினும்,தங்கிய நீர்ப்படை தகவோ வுடைத்து'' (சிலப். 25; 120; 121.) என்றும், ''அந்தம் அறியாத அருங்கல முந்திக் கந்தங் கமழ் காவிரி'' (சம். தேவா.) என்றும், ''பூவிரி புது நீர்க் காவிரி'' (புறம். 166) என்றும், ''மருங்கு வண்டு சிறந்தார்ப்ப மணிப்பூ வாடை யதுபோர்த்து'' (சிலப். கானல்.) என்றும், ''மந்தமா யிழிமதக் களிற்றிள மருப் பொடு பொருப்பின் நல்ல, சந்தமார் அகிலொடு சாதியின் பலங்களும் தகையமோதி உந்துமா காவிரி'' கறியுமா மிள கொடு கதலியின் பலங்களும் கலந்து நுந்தி, எறியுமா காவிரி'' (சம். தே.) என்றும்,''விளங்குமா முத்தினோ டின மணி யிடறி யிருகரைப்பெருமரம் பீழ்ந்து கொண்டெற் றிக் கலங்குமா காவிரி'' (அப்பர். தே.) என்றும் வருவன வற்றாலறிக.

காவிரியின்நீர் கங்கைநீர் என்றும், இதில் ஐப்பசித் திங்களில் கங்கைநீர் வருகின்ற தென்றும், அதுகாலை இதில் மூழ்கின் புண்ணிய முண்டா மென்றும் கருதி மக்கள் பலர், மாயவரத்தில் மூழ்குவதை இன்றும் நாம் காண்கின் றோம். காவிரி நீர் கங்கைநீர் என்பதனை, ''காவிரிநீர் கங்கை நீராதலின்'' (சிலப். 10; 106—108 உரை) என அடியார்க்கு நல்லாரும், தொல்காப்பியப் பாயிரத்தில் ''கங்கையா ருழைச் சென்று காவிரி யாரை வாங்கி'' என நச்சினார்க்கினியரும் கூறுமாற்றானறிக.

காவிரி, கங்கை உண்மையால் உண்டாய வடதிசைப் பெருமையையும், தென்திசைச் சிறுமையையும் நீக்குவான் வேண்டி உண்டாயது என்ப. இதனை,''வருநற்கங்கை வட திசைப் பெருமையும், தென்திசைச் சிறுமையும் நீக்கிய குறுமுனி, குண்டிகைப் பழம்புணர் காவிரி'' (திவாகரம்.) என வருதலான் அறிக.

—தமிழ்ப் பொழில் 1935-36 பக்கம் : 444

———

# பெருங்காற்றும், மின்னலும், இடியும்

பெருங்காற்றும், மின்னலும், இடியும் வெயிற்காலத்து யாவரும் கண்டதிசயிக்கும், கானல், பூகம்பம், சூறாவளி போன்ற இயற்கைத் தோற்றங்களின் பாற்படும். பெரு வலியும், பெருஞ்செயலு முடையவாய் உலகிடைத் தோன்றும் இவற்றிற்குத் தோற்றக் காரணமும், தோற்றத் திற்குரிய முறைமையும் உண்டென்பதை, உலகிடையுல வும் ஒவ்வொருபொருட்கும் தோற்றக் காரணம் உண்டு என்பதைத் துணிந்த யாவரும் உணர்வர்.

சூடுமிகுந்த நாடுகளில், மழைதோன்றும் பொழுதெல் லாம், மின்னலும், இடியும் உடன் தோன்றுதல் இயற்கை. தென்னமரிக்காவில், பூ நடுவரையின் (Equator) அருகி லுள்ள ஊர்களில் நுண்ணியஒலி (Sound) யினையும் விரைவில் உணரும் பொறி (Machine or tool) யுடையார் யாவரும், தம்மைச்சூழ்ந்து நிற்கும் காற்றிடையே, எஞ் ஞான்றும் இடியோசை யுண்மையை யுணர்வர்' என பாசிங்கால்ட் (Boussingault) என்பார் கூறுகின்றனர்.

ஆப்பிரிக்காவில் உள்ள அபிஸீனியா நாட்டில் தாம் வதிந்த நான்கு ஆண்டைய எல்லைக்குள், ஏறக்குறைய 1900 இடியோடு கூடிய புயல் நிகழக் கண்டதாகவும், அவைதானும், கோடை காலத்தே, நாட்காலத்து நண்

பகல் கழிந்த பின்றையே நிகழ்ந்ததென்றும், அவைகளில், நள்ளிரவு முற்பக லாகிய இருபோதினும் கண்டன இருபத்திரண்டே என்றும், டி. அப்பாடி (D Appadie) என்பவர் கூறுகின்றனர்.

குளிர்ந்த நாடுகளில், இவற்றின் நிகழ்ச்சி மிக அரிது. ஸ்பிட்ஸ்பர்க்கன் (Spitsbergen 78. O. N. 15 OE.) என்னும் தீவின்கண் வதிந்த நால்வர்,தாம் வாழ்ந்த ஆறாண்டையு எல்லையில் ஒரு முறையே இடியோசை கேட்டனராம். ஆப்பிரிக்காவில் உள்ள கேப்காலனி, நேட்டால் என்ற இருநாட்டினும், நேட்டால் நீர் வளமிக்கதாகலின், கேப்காலனியில் நிகழும் இடியினும், அதன்கண் நிகழ்தல் மிகக்குறைவு என்று சர் ஜான் ஹர்ஷல் (Sri John Hershel) கூறுகின்றனர்.

இதுகாறும் கூறியவாற்றால், பெருங்காற்றும் மின்னலும் இடியும் சூடுமிகுந்த நாடுகளில், கோடைகாலத்தே, நாட்காலத்து நண்பகல் கழிந்த பின்றையே நிகழும் என்பதும், குளிர் நாடுகளில், அவற்றின் நிகழ்ச்சி மிக அரிது என்பதும் கூறப்பட்டன.

1752-ஆம் ஆண்டில் (Frank!in) பிராங்க்லின் என்பவர், புயல் வீசும் காலத்தில் ஒரு காற்றாடியில் இருப்பாணி ஒன்றைக் கட்டி வானத்தே பறக்கவிட, அதன்கண் ஒளியுடைப் பொறிகள் பல இருக்கக் கண்டு அவற்றையாராய்ந்து அவை மின்சாரப் பொறிகள் எனத்துணிந்தனர். மின்னலுக்குரிய ஒளியும் வலியும், மின்சார காரியமென்ற உண்மையைப், பிராங்க்லின் துணிந்த ஓராண்டிற்குப் பின்னர், இதனைப்பல புலவர் பெருமக்கள் ஆராயத் தொடங்கினர். அட்ரியாடிக் கடற்கரைக்கண் நிற்கும் டுயினோ என்னும் பேரகத்திருந்து (Duino castle), பலர்

இவ்வுண்மையை ஆராய்ந்து வந்தனர். ஆங்கே, நெடிய இருப்புப் பாரை ஒன்றை நிறுத்தி கூரிய மழுவேந்திய ஒருவனை அவண் நியமித்து மின்னெழும் பொழுது அம் மழு நுனியைப் பாரையின் முடியிற்பட நிறுத்துமாறு பணித்தனர். அவன், இடிமின்னுக்களின் பயனாக, அவற்றின் கண் தீப்பொறி பறக்கக் கண்டு, காணுந்தோறும் தன் கைம் மணியை இயக்குவன். இங்ஙன் புயலிடைப் பெறப் படும் வளி மின்சாரத்தைப் (Atmospherical electricity) பெரிதும், ஆராய்ந்துகண்ட பேராசியர், **கிராஸ்** (Prof Crosse) என்பவராவர்.

கட்புலன் செறியத் தோன்றுங்கால், பற்பல கதிர் களாகப் பிரிந்து பாய்ந்து எழும் மின்னுக்கள், வளியிற் செறிந்துள்ள அணுக்களின் வழியே வெளிப்போதருவன வாம். அவ்வளியணுக்கள் ஒரு நெறியினவன்றிக் கோணி வளைந்து கிடத்தலின், மின்னலும் முறுக்குண்டு மிளிரும் பூங்கொடி போலத் தோன்றுவதாயிற்று. மழையினம், இமைப்பது போலவும், அங்காப்பது போலவும் தோன்றும் அகனிலை மின்னல்கள், மிக்க சேய்மைக்கண் உடலும் புயன் மின்னலின் நிழலெனை அறிக.

முழவொலி போல உருண்டோடும் முழக்கினை யுடைய இடியேற்றொலி, முகிலனஞ் செய்யும் எதிரொலி (Echo) யாகும். இதன் வன்மை மென்மைகள், எதிரொலி செய்யும் எழிலித்திரளின் இயல்பின் அமைந்தன. சுவிட்சர்லாந்திலுள்ள ஒரு மலைக்குவட்டுமிசை சென்ற இருவர், தாம் நின்றவிடத்தே வலிய முகிலினம் தழுவி மறைத்துக் கோடல்கண்டு, தம் கையகத்திருந்த துப்பாக்கியை வெடித்தனர். வெடித்தார்க்கு, அவ்வெடி யொலி முகிற்குழாங்களால் எதிரொலிக்கப்பட, பேரிடி யேற்றின்பெருமுழக்கென முழங்கி, அம்மலையகமெங்கும் விதிர்ப்புறச் செய்ததாம். பின்னர், அவர், துப்பாக்கி

வெடிகளைக் கிளப்பிய வண்ணமே இறங்கி வந்தனர்: வரவர, வெடியோசையின் எதிரொலியும் குறைந்து வரலாயிற்று.

நிலப்பரப்பின் மேல் இயங்கும் வளியில், குளிர்ந் தனவும், வெப்பவுமாகிய காற்றுக்கள் தம்மிற் கலந்து இயங்குங்கால், மின்னும், இடியும் தோன்றுகின்றன. வேனிற்காலத்து வெயிலவிர்பகலில், தட்பமும், வெப்பமு முடைய, காற்றுக்கள் தம்மொடு தாம் தாக்குண்டு இயங்குகையில், தண்கால், வெப்பமுற்று, நெகிழ்ந்து பரந்தோடும் சுடுகாலுள் நுழைந்து,வழி செய்து விரைந்து போதர முயலுகின்றுழி வெம்மையும், தண்மையும் முரணுவனவாய், இம்மின்னலும், இடியும் எழுகின்றன.

இயற்கையில் நிகழும் ஒவ்வொரு பெருஞ் செயற்கும், முன்னம் உணர்த்தும் முன்னிலைகள் பல உள. புயல் நிகழ்வதற்கு முன்னர், வளி நிலை காட்டி (Barometer) தன் கண் நிற்கும் பாதரசவுயர்வு குறைந்து காட்டுமென்று, பிரஞ்சுக்காரர் முன்னரேயுணர்ந்துளர்.

மின்னலும், இடியும் மக்கள் வாழும் கட்டிடங்களைத் தாக்கி யழிக்காவகை **இடிகவர் பொறிகளும், மின்னுக்கவர் குற்றியும்** அறிஞர்கள் ஆக்கியுளர். கடற்கட் செல்லும், கலங்களினும் இக்கருவிகள் இருத்தலின், மின்னுப்பொழி மேகம், மேல் வந்து நிற்கிலென்? கடுந்திறல் இடியேறு கடுத்துப் போந்து இடிக்கிலன்? அறிவுத் துணையால் ஆவன செய்து கொண்டேமுக்கு அவற்றால் ஆம் தீங் கொன்று மில்லையென்க.

—தமிழ்ப் பொழில் 1936-37 பக்கம் : 141

# தொல்காப்பியப்
# பொருளதிகாரப் பதிப்பாராய்ச்சி

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழகராதி பதிப்பாசிரியர், திரு. S. **வையாபுரி பிள்ளை**, B.A.,B.L. அவர்களால், பரிசோதிக்கப்பட்டு திரு. S. **கனக சபாபதி பிள்ளை**யவர்களால் வெளியிடப் பெற்ற தொல்காப்பியப் பொருளதிகார முதற்பாகம், பயிலும் பலர்க்கும் பேருபகாரமாக விளங்குகின்றது. அதனை, ஊன்றிப் படித்து வருங்கால், அதனுட் பொருந்தாப் பாடங்கள் சில விளங்குவதைக் கண்டேன். அப்பாடங்களை அவ்வாறே கொள்ளின், உண்மைப் பொருள் காண வியலாது, குன்று முட்டிய குரீஇப் போலவும், குறிச்சிபுக்க மான் போலவும், பயில்வோர் இடற்படுவர் ஆதலின், உண்மைப் பாடங்களை வெளியிடின், அவர்க்கு நன்மை பயக்கும் என்று கருதி இதனை எழுதலானேன்.

சேனாவரையர் போன்ற பேராசிரியர்களும், முக்குணவயத்தான் முறை மறந்தறைவர் எனின், நம்போன்றார் இவ்வாறு மயங்குதல் வியப்பேயன்று. பெருங்கல்வியும், பேரறிவும், ஒருங்கே வாய்ந்த நுண்மாணுழைபுலத் தமிழ் மாண் புலவராய அவர், அதுபற்றி இகழவும் படார்; அதனால் அவர் புலமை நலம் கெடவும் மாட்டாது. யானும் அக்குணவயத்தான் மாறுபடக் கூறவும் கூடுமாதலின், யான் கூறுவதே மெய்ம்மையுரை யென்

கின்றேன் அல்லேன்; அறிவுடைப் பெருமக்கள் ஆராய்ந்து உண்மைப் பொருள் கூறின், அதனை அன்போடும் ஏற்றுக் கொள்வதோடன்றி, அவர்க்கு எழுமையும் கடப்பாடுடையேன் என்பதை மிகப் பணிவாகத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

"முதல்கரு வுரிப்பொரு ளென்ற மூன்றே
நுவலுங் காலை முறைசிறந் தனவே;
பாடலுட் பயின்றவை நாடுங் காலை."

—தொல், பொருள்; அகம்: 3

என்ற சூத்திரத்தின் கீழ், முல்லைக்கு முதலுங் கருவும் வந்து உரிப்பொருளாற் சிறப்பெய்தி முடிந்ததற்கு மேற்கோளாக.

"முல்லை வைந்நுனை தோன்ற வில்லமொடு
பைங்காற் கொன்றை மென்பிணி யவிழ
இரும்புதிரித் தன்ன மாயிரு மருப்பிற்
பரலவ லடைய விரலை தெறிப்ப
மலர்ந்த ஞாலம் புலம்புபுறங் கொடுப்பக்
கருவி வானங் கதழுறை சிதறிக்
கார்செய் தன்றே கவின்பெறு கானங்;
குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி
நரம்பார்ப் பன்ன வாங்குவள் பரியப்
பூத்த பொங்கர்த் **துணையொடு வதியும்,**
**தாதுண் பறவை** பேதுற லஞ்சி
மணிநா **வார்த்த** மாணவினைத் தேர
னுதுக்கரண் டோன்றுங் குறும்பொறை நாடன்
கறங்கிசை விழவி னுறந்தைக் குணாது
நெடும்பெருங் குன்றத் தமன்ற காந்தட்
போதவி ழலரி நாறு
மாய்தொடி யரிவைநின் மாணலம் படர்ந்தே."

—அகம். 4

என்ற செய்யுள் நச்சினார்க்கினியரால் காட்டப் பட்டுள்ளது.

அச்செய்யுள், "கார்ப்பருவத் தொடக்கத்தே மீண்டு வருவல்" எனக் கூறிப்பிரிந்து சென்ற தலைவன், அப் பருவம் எய்தவும் வாராததினால் வருந்திய தலைவிக்குத் தோழி, அப்பருவம் வந்தமையைக் காட்டி அவர் வருவார் நிற்பாரல்லர் என வற்புறுத்தியதாகத் துறை கூறுகின்றது. அச்செய்யுளின் பொருள் கண்டன்றி அதனை ஆராய்தல் இயலாதாகலின் அதற்கு ஓர் உரையொன்று ஈண்டுத் தருவல்,

முல்லை வைந்துனை....................படர்ந்தே."

என்றது, தோழி தலை மகளைப் பருவங்காட்டி வற்புறுத் தியது, எனத் துறைப் பெயர் பெற்றது. "குறித்த காலம் வந்தது, அவரும் வந்தார் என ஆற்றுவித்தது" என்பர் நச்சினார்க்கினியார். (தொ. பொ. 3)

உரைப்பாடம் :— விழவின் உறந்தைக் குணாது குன்றத்து அலரின் நாளும் அரிவை! உதுக்காண்; தோன்ற அவிழ, தெறிப்ப, புறக்கொடுப்ப, வானம் கானத்தில் சிதற, கார்செய்தன்று; (அதனால்) நாடன், பறவை பேதுறல் அஞ்சி, ஆர்த்ததேரன், புரவி வள்பரிய நின் நலம் படர்ந்து தோன்றும் என்பது.

உரை :— பலராமனும், பலகாலும் புகழுதற்குரிய சிறப்பு வாய்ந்த விழவினையுடைய, உறையூர்க்குக் கீழ்ப் பக்கத்ததாகிய நெடிய பெரிய சிராப்பள்ளி மலையின் கண், மிக்கிருக்கின்ற காந்தட்போதுகள் மலர்ந்த அல ரினைப்போல மணம் வீசும், ஆராய்ந்து அணிந்த தொடி யினையுடைய அரிவையே! உவ்விடத்தே பார். முல்லை

யினது கூரிய மொட்டுக்கள் தோன்றவும், தேற்றாமரத்தின் மொட்டுக்களோடு, பசிய அடி மரத்தினையுடைய கொன்றையின் மெல்லிய மொட்டுக்கள் கட்டவிழ்ந்து மலரவும், இரும்பை முருக்கினாலொத்த, கரிய பெரிய மருப்பினையுடைய மான், பரல்படு குழிகள்தோறும் துள்ளியோடவும், இடமகன்ற ஞாலம், நீர் பெறாததினால் உண்டாய வருத்தம் நீங்கவும், திருவில், மின், இடி போன்ற தொகுதி கொண்ட மேகம், அழகுபெற்ற கானகத்தில், விரைந்த மழைத்துளிகளைப் பெய்து கார்ப் பருவம் செய்தது: ஆதலின் சிறு மலை நாடானாகிய நம் தலைவன், பூக்கள் நிறைந்த புதரின்கண் தத்தம் துணையொடுவதிந்து தாது தேர்ந்து உண்ணும் வண்டுகள், தன் தேரிற்கட்டிய மணியொலி கேட்டு வெருவுமென்றஞ்சி, அம்மணிநா அசைந்துஒலியாவண்ணம், கட்டியமாட்சியினையுடைய, வினை மேற்சென்ற தேரினையுடையவனாய், வளைந்த தலையாட்டத்தாற் பொலிந்த கொய்யப்பட்ட உளை மயிரினையுடைய குதிரையினது.வளைந்த வாய்வார் நரம்பு ஆர்த்ததுபோல் ஒலிப்ப, மிக்க விரைவாக நினது உயர்ந்த நலத்தை நினைந்து தோன்றுவான்; நீ வருந்தற்க. எ-று.

ஒடு, அதனோடியைந்த ஒருவினைக்கிளவி; பிணியவிழ்த்தல் வினை, இல்லம், கொன்றையென்ற இரண்டற்கும் ஒத்தலின், இல்லம், முதலிற் கூறும் சினையறிகிளவி. இரும்பு திரித்தாலன்ன என்றும், நாம் பார்த்தாலன்ன என்றும் வரற்பாலன, "இரும்பு திரித்தன்ன;" என்றும், "நாம் பார்த்தன்ன" என்றும் வந்தன; "துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத் திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று" (குறள். 22) என்புழிப்போல மா, கருமை; இரு, பெருமை. அவலடையஅவல்தோறும், கருவி வானம்; தொகுதி கொண்ட மேகம். "கருவி

தொகுதி" (தொல். சொல். 354) கதழ் விரைந்த மழைத் துளி, "கதழ்வும் துணைவும் விரைவின் பொருள்" (தொல். சொல் 315) என்பது விதி. குரங்குவளைப் பொலிந்த கொய்சுவற் புரவியென்பது குறுஞ்சீர்' வண்ணம்; இதில் "பொலிந்த ' என்னும் "செய்த என்னும் பெயரெச்சத்திற்கு முடிபாகிய புரவியை இடைவரும் சொற்கள் விசேடித்து நின்றன" என்பர் நச்சினார்க் கினியர். (தொல். சொல். 455.)

இல்லம் : தேற்றாமரம், "இல்லின படுகாழ்" என்பர் பிறரும் (பெருங். 35: 125) இதனைத் தேறு என்று நூல்களுள் வழங்குப. இக்காலத்தில் தேற்றாமரம் என உரைநடையில் பயின்று வரும். பிணியவிழ: அரும்புகள் முறுக்குண்டு இருத்தலின், அதனைப் பிணி, தளை, பொதி என்ற சொற்களாய் வழங்குதற்கேற்ப, "பிணி விடும் முருக்கிதழ்" (கலி. 33) என்றும், "தளையவிழ்கோதை" (சிந். 65) என்றும், "பொதியவிழ் வைகறை" (கலி. 52) என்றும் விடுதல், அவிழ்தல், என்ற சொற்களை, மலர்தல் என்ற பொருளில் ஆள்ப. வினைத்தேரன்: வினைமேற் சென்ற தேரன்; நல்ல வேலைப்பாடமைந்த தேரன் எனினுமாம். மாண்பாவது, வண்டின் கூட்ட இன்பத் திற்குக் கேடு வருதற்கஞ்சி மணிநாக்கை அசையாமல் கட்டியதாம். "பூத்த பொங்கர்" என்றதனால் பசிப்பிணி தீர நுகரும், பொருளை அது குறைவறக் கொடுப்ப உண்டு மகிழ்ந்து வதியும் எனவே, யாமும் இல்லறம் நிகழ்த்து தற்கும், நுகர்தற்கும், ஏற்ற பொருள்களைக் குறைவறப் பெற்றுப் பின் இன்பம் நுகர்தல் வேண்டுமாதலின், அப் பொருள் பெறச் சென்ற நம் தலைவர், சிறிது காலம் கடந்துவரினும் நீ ஆற்றியிருத்தல் வேண்டும் என்று கூறி னாளாம், "போதவிழ் அலரின் நாறும் அரிவை" என்றத னால், அவர் புணர்ந்த காலத்துப் புதுமணம் நாறும்

அரிவையெனவே, அவர் பிரிந்தது சேய்த்தன்று என்பதும் கூறினாள். இனி, பேராசிரியர், இச்செய்யுளை, நோக் கென்னும் உறுப்படங்கிய செய்யுளிற்காக மேற்கோளாகக் காட்டி, விழுமியதோர் உரையும் வகுக்கின்றார் அதனைப் பொருளதிகார4 16-ஆம் சூத்திரத்துட் காண்க

கார்ப்பருவம் எய்தினமையைத் தெளித்தற்பொருட்டு கார்ப் பருவ நிகழ்ச்சிகளைப் பலவாக எடுத்துக் காட்டு வாள், தலைவன் இத்தகையன் ஆதலின், வாராது நிற்பா னல்லன் வருவன் என்பதை வற்புறுத்துதற்காக, "துணை யொடு வதியும். தாதுண் பறவை பேதுறலஞ்சி, மணிநா வார்த்த மாண்வினைத்தோன்" என்று கூறினாள்.

முன்பே நெஞ்சகத் தன்புடைய நம் தலைவர், தாம் வருகின்ற வழியில், வண்டுகள் தம்முள் கூடி நுகரும் இன்பத்திற்கு இடையூறு செய்யக் கருதாராய், தேரிற் கட்டிய மணிநா அசையாவண்ணம் யாத்து வருகின்றார்; அத்தகையார் நின்னைப் பிரிந்து நெடுநாள் உறையார் விரைவில் வருவார் என்று வற்புறுத்தியவாறு காண்க; இவ்வாறு கூறுதல் மரபாதலை,"அன்புறு தருந விறைச்சி யுட் சுட்டலும், வன்புறையாகும் வருந்தியபொழுதே' (தொல். பொருண். 231) என்ற சூத்திரத்தாலும் அதற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரையானும் உணர்க.

இனி இப்பதிப்பில் கொண்டாங்கு, "**துணையொடு வதிந்த** தாதுண் பறவை" எனக் கொள்ளின், இறந்த காலப் பெயரெச்சமாய், முன்னொரு காலத்துத் துணையொடு வதிந்த வண்டு எனப் பொருள்படுதலின், தலைவன் வருவுழி வதியவில்லையெனப் பொருள்பட்டு செய்யுளின் இயற்கை நலம் கெட்டு, வற்புறுத்து தற்கேற்ற தோர் சொல்லின்றாகி விடுதல் காண்க. ஆதலின்,

அதனைத் "துணையொடு **வதியும்**" என்றேனும் "துணையொடு **வதிந்து**" என்றேனும் கொள்ளின், பொருந்தும் என்க. செய்யுள் இலக்கண வரம்பிகவாமையும் காண்க. இனி, பேராசிரியர்,

"மாத்திரை முதலா வடிநிலை காறு
நோக்குதற் காரண நோக்கெனப் படுமே"
— (தொல். பொருள் 416)

என்ற சூத்திரத்தின்கீழ், நோக்கென்னும் உறுப்பமைந்த பாட்டிற்கு உதாரணமாக, இதனைக் காட்டி இதற்கு ஓர் அரிய உரையும் வகுப்பாராயினர். இரண்டாம் பதிப்பை ஆராய்ந்து திருத்திய, **பிரம்மஸ்ரீ வே. துரைசாமி ஐயர்** அவர்கள், பேராசிரியர் எழுதிய உரையாகிய "**துணையொடு வதியும் தாதுண் பறவை**" எனவே, பிரிவஞ்சி, என்ற வாறு என்ற வாக்கியத்தைத் தடித்த எழுத்தால் பதிப்பித்து, அதற்கு முற்பக்கத்திலேயே," **துணையோடு வதிந்த தாதுண் 'பறவை'** எனப் பதிப்பாராயினர். இச்சிறு ஆராய்ச்சியும் செய்ய ஆற்றல் வாய்க்கப்பெறாத ஐயர் அவர்கள் போன்றார், தொல்காப்பியம் போன்ற பேரிலக்கியங்களைப் பதிப்பிப்பதற்கு எவ்வாற்றானும் உரியரல்லர் என்க.

மஹாமஹோபாத்யாய, பிரம்மஸ்ரீ டாக்டர் **உ.வே. சாமிநாதையரவர்களும்,** சிந்தாமணி 892, 893-ஆம் செய்யுட்களின் உரையுள் "துணையொடு வதிந்த, தாதுண் பறவை" என்றே பதித்தார் எனின், அதுவும் குற்றமாம் என்க.

இனி. பேராசிரியரும் **வதியும்** என்றே கொண்டார் ஆதலானும்,பொருள் நெறியிலும் பொருந்துவது அதுவே

யாமாதலானும், **வதிந்த** என்பது பிழைபடு பாடமாதல் அறிக. இனி துணையொடு **வதியும்** என்புழியும், வதியும் இயல்பினவாயினும், அவன் வருவுழி வதிந்தனவோ? அன்றோ? என்னும் ஐயம் நிகழ்தலின், **வதியும்** என்பதைக் காட்டினும் **வதிந்து** என்பதே நேரிய பாடமாதல் அறிக.

இனி, "மணிநா **வார்த்த**" என்றவிடத்து, ஆர்த்த என்பது சப்தித்த என்றும் பொருள்படுதலானும், திரு. வே. சாமிநாதையர் அவர்களும், "**யாத்த**" என்றே கொண்டார் ஆதலானும், இருபொருள்படும் அப்பாடம், கொள்ளுதலினும், அகநானூற்றினுள் காட்டப்பெற்ற **யாத்த** என்ற பாடத்தைக் கோடல் நேரிதாம் என்க.

2. இனி, "மாயோன் மேய காடுறை யுலகமும்" (தொல் பொருள் 5) என்ற சூத்திரத்தின்கீழ், பக்கம் 21-ல், "இனி, முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்ற முறை யென்னை யெனின், **இவ்வொழுக்கமெல்லாம் இல்லறம் பற்றிய ஒழுக்கமாதலின், கற்பொடு பொருந்திக் கணவன் சொற்பிழையாது இல்லிருந்து நல்லறஞ் செய்தல் மகளிரது இயற்கை முல்லையாதலின், அது முற்கூறப் பட்டது.**" என்ற வாக்கியம் ஒன்று அமைந்துள்ளது. இதனுள், "கற்பொடு பொருந்திக் கணவன் சொற்பிழை யாது இல்லிருந்து நல்லறஞ் செய்தல் மகளிரது இயற்கை முல்லையாதலின் அது முற்கூறப்பட்டது." என்னும் சொற்றொடர் அமைதி பெறவில்லையாதலின், பொருளும் இனிது விளங்கவில்லை யாதலானும், அதனை, "**கற்பொடு பொருந்திக் கணவன் சொற்பிழையாது இல்லிருந்து நல்லறஞ்செய்தல் மகளிரது இயற்கை.**" என வாக்கியத்தை,முடித்து, "**அது முல்லையாதலின் முற்கூறப் பட்டது**" என மாற்றிப் பொருள் கொள்ளின் நன்றென நான் கருதுகின்றேன்.

3. இனி, பக்கம் 37-ல் "முடிவுநிலைப் பகுதிக்கண் முன்னணப்படுமெனவே, அத்துணை யாக்கமின்றி ஒழிந்த **மருதமும், நெய்தலும்** முடியா நிலமாய் அத்துணை **முன்னப்படாதாயிற்றுப்** பாலைக் கென்பதாம்" என்ற வாக்கியம் ஒன்று உள்ளது. அதில், "மருதமும், நெய்தலும்..........முன்னப்படாதாயிற்று என்ற தொடருள் ஒருமை, பன்மை மயக்கம் உண்மையின், அத்தொடரை "**மருதமும் நெய்தலும்................முன்னப்படாவாயிற்று**" எனத் திருத்திக் கொள்க.

4. இனி, "திணைமயக் குறுதலுங் கடிநிலை யிலவே
நிலனொருங்கு மயங்குத லின்றென மொழிப
புலனன் குணர்ந்த புலமை யோரே,"
—தொல் பொருள். 12

என்ற சூத்திரத்தின்கீழ், நெய்தற்கண் மருதம் மயங்கியதற்கு உதாரணமாக,

"கண்டிகு மல்லமோ கொண்க நின் கேளே
யொள்ளிழை யுயர்மணல் வீழ்ந்தென
வெள்ளாங் குருகை வினவு வோனே." —ஐங் 122
"கண்டிகு மல்லமோ கொண்க நின் கேளே
உறாஅ வறுமுலை மடாஅ
வுண்ணாப் பாவை யூட்டு வோளே." —ஐங்குறு 128

என்று இரண்டு செய்யுள்களையும் மேற்கோளாகக் காட்டி, 'இவை பெதும்பைப் பருவத்தாள் ஒரு தலைவியொடு வேட்கை நிகழ்தமையைத் **தலைவி கூறித்** தலைவன் குறிப்புணர்ந்தது,' என அதன் துறையைப் பதிப்பித்து, பிழை திருத்தத்தில், "**தலைவி கூறி,**" என்பதைத் "**தோழி கூறித்,**" எனத் திருத்தி உள்ளார்கள்,

இம் முதற் செய்யுளே,
"கிழவோள் பிறன்குண மிவையெனக் கூறிக்
கிழவோன் குறிப்பினை யுணர்தற்கு முரியள்"
—தொல் பொருள் 234

என்ற சூத்திரத்தின்கீழ், தலைவி வேறொரு தலைவியுடைய குணங்கள் இத்தன்மையவென்று தலைவற்குக் கூறி, அவள்மாட்டு இவன் எத்தன்மையனாயிருக்கின்றான் என்று தலைவன் குறிப்பினையறியக் கருதியதற்கு உதாரணமாகக் காட்டியிருப்பதையும் அறியாது, ஓரிடத்தே ஒரு துறை பற்றி மேற்கோள் காட்டிய ஒரு செய்யுளையே, காட்டிய அவரே, வேறோர் இடத்தே அச்செய்யுளையே வேறு ஒரு துறைக்கு மேற்கோளாகக் காட்டார் என்பதையும் உணராது, "தோழி கூறுங்கால், தலைவியரைக் கூறப்பெறாள் என்பதூஉம், பரத்தையரைக் கூறின், அவர்க்கு முதுக்குறைமை கூறிக் கூறுவளென்பதுஉங் கொள்க." என நச்சினார்க்கினியர் கூறியதனையும் உணராது, தோழிக்கு, இத்தகைய கூற்றுக்கள் உண்டா இன்றா என்பதையும் ஆராயாது, மெய்ப்பாடத்தையும், பொய்ப்பாடமாகப் பிறழ உணர்ந்து, மெய்ப்பாடத்தை நீக்கிப் பொய்ப் பாடத்தைப் பதிப்பித்தது, அவர்க்கு ஆழ்ந்த பொருளிலக்கணப் பயிற்சி இன்மையினைக் காட்டுகிறது.

இனி, ஐங்குறு நூற்றுப் பழைய உரைகாரர், "பரத்தை தலைமகற்குச் சொல்லியது; பெதும்பைப் பருவத்தாள், ஒரு பரத்தையோடுகூடி மறைந்து ஒழுங்கா நின்றானென்பதறிந்து தலைவி புலந்துழி, "இத்தவறு என்மாட்டில்லை; நீ, இப்புலவியை நீக்க வேண்டும்" என்று தோழிக்குத் தலைமகன் கூறும் புலவியை நீக்கக்கருதிய தோழி, அவளிளமை கூறி நகையாடிச் சொல்லியதூஉ

உமாம்''என்று துறை வடிப்பாராயினர். அவர் கூற்றுப்படி, இது, பரத்தை கூற்றாகவாவது, தோழி கூற்றாகவாவது இருத்தல் வேண்டுமேயன்றி, தலைவி கூற்றன்று யென்பது பெறப்பட்டது.

தலைவன், வேறொரு தலைவி பாலேனும், பரத்தை பாலேனும், வைத்திருக்கும் உள்ள முடைமையினை அறிதல் தலைவிக்கேயுரித்து. பரத்தைக்கின்று என்பது, "கிழவோள் பிறள் குணம்" (தொ. பொ.234) என்பதனாற் பெறப்பட்டதாகலானும், தோழி கூற்றன்று என்பது மேலே பெறப்பட்டது ஆதலானும், இப்பத்திற்கு முந்தியபத்தாகிய தோழிக்குரைத்த பத்தில் "இற்செறிப் பாரெனக் கேட்ட தலைமகள் வரையாது வந்தொழுகுந் தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல் லியது" என்பன போன்ற தலைமகள் கூற்றுக்களே நிகழ் தலானும், அடுத்த பத்தாகிய, பாணர்க்குரைத்த பத் திலும், "வாயில் வேண்டிவந்த பாணன் தலைமகள் காதன்மை கூறினானாகத், தலைமகள் வாயில் மறுப்பாள் அவற்குக் கூறியது" என்பது போன்ற, தலைமகள் கூற்றுக் களே நிகழ்தலானும், இடையில் உள்ள இப்பத்தில் உள் ளனவும், தலைவி கூற்றுக்களாகவே இருந்தல் வேண்டு மாதலானும், ஐங்குறு நூற்றுப்பழைய உரை கூறும் துறை குற்றமாதல் அறிக. அதைப்பின்பற்றி, "தலைவி கூறி" என்ற மெய்ப்பாடத்தைத் "தோழி கூறி" என்று மாற்றி யதும் குற்றமாம் என்க.

"கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய் மற்றாங்கே,
யெடுப்பதூஉம் எல்லாம் மழை."

என்புழி, கெடுப்பதூஉம் என்பதற்கு, முன், பின் குறள் களில் மழையின்மையினையே கூறியதனால், மிக்க மழை

பெய்தலினால் கேடுளவாகவும், "மழை பெய்யாது நின்று கெடுப்பதூஉம்" எனப் பொருள் கூறியதும் காண்க.

நூல் பதிப்பிக்க விரும்பிவோர் தாம் பதிப்பிக்க விரும்பிய நூலைத் தக்க ஆசிரியர் ஒருவர் பால் முறை படக் கற்றல் வேண்டும். கற்று வருங்கால், பாடங்கள் பல மாறுபடத் தோன்றும். தோன்றிய அவைகளின் முன்னும் பின்னும் நோக்கியும், வேறு ஏடுகொண்டு ஒப்பு நோக்கியும், பொருளுடன் ஆராய்ந்தும், பொருந்தும் பாடங்களைக் கொள்ளுதல் வேண்டும். இவ்வாறு, பல காலும், ஆராய்ந்து சேமித்து வைத்த குறிப்புக்களை, யுறு துணையாகக் கொண்டு நூல் பதிப்பித்தல் வேண்டும். அவ்வாறு ஒன்றும் செய்யாது முற்பதிப்பில் கண்டவற்றுள் சிலவற்றைத் தாம் வேண்டியவாறே திருத்திக் கொண்டும், பயனற்ற குறிப்புக்கள் சிலவற்றைக் குறித்துக் கொண்டும் பதிப்பிப்பதனால் கெடுவன இவ்வளவு என்பது, இவ் வெடுத்துக் காட்டான் இனிது விளங்கும். இதனால் அன்றோ, "படித்தவன் பாட்டைக் கெடுத்தான், எழுதினவன் ஏட்டைக் கெடுத்தான்" என்று வழங்குவா ராயினர்.

—தமிழ்ப் பொழில் 1937-38 பக்கம் : 161

# மணக்குடவரும் பரிமேலழகரும்

உலகிடை வாழும் மக்கள் பலராலும் வழங்கப்பெற்று வரும் மொழிகள் பலவற்றுள்ளும், உயர்தனிச் செம்மொழியாய் விளங்குவது தமிழ்மொழியொன்றேயாம் என்பதும், "திறமான புலமையெனில், வெளி நாட்டோர் அதை வணக்கம் செய்தல் வேண்டும்" எனக்கூறிய அனுபவ ஞானியும், கவிவாணரும் ஆகிய பாரதியாரின் கூற்றுக் கிணங்க எந்நாட்டினரும், எம்மதத்தினரும், எம்மொழியினரும் "எல்லாப்பொருளும் இதன்பால் உள; இல்லாத எப்பொருளும் இல்லை" எனக்கூறி, போற்றும் பண்புடையதும், அமிழ்தினுமினிய நம் தெய்வத் தமிழ்நூலில் தலைசிறந்து என்றும் நின்று நிலவுவதும், அகப்பொருள் புறப்பொருள் எனச் செந்தமிழ்ச் சான்றோரால் தொகுத்துக் கூறப்படும் அறமுதற் பொருள்களைத் திறம்பெற உணர்த்துவதும் ஆய நூல், தெய்வப் புலமைத் திருவள்ளுவனார் இயற்றிய திருக்குறள் என்னும் பெருநூல் ஒன்றேயாம் என்பதும் பன்மொழிப் புலவர் பலர்க்கும் ஒப்பமுடிந்த உண்மையாகும்.

ஒப்புயர்வற்ற இவ்வுயர்தனிச் செந்தமிழ் நூலினை இயற்றிய ஆசிரியர் வள்ளுவப் பெருந்தகையார், வடவேங்கடம் தென்குமரியாயிடைத் தமிழ்கூறு நல்லுலகத்து வழங்கிய உலக வழக்குகளையும், நூல் வழக்குகளையும்

ஆராய்ந்த பின்னரே இந்நூலினை இயற்றினாராவர். அதற்கு "நல்லாற்றான் நாடியருள் ஆள்க; பல்லாற்றாற் றேரினும் அஃதே துணை" (குறள் 242) "யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை, யெனைத்தோன்றும் வாய்மை யின் அல்லபிற" (குறள் 300) "பகுத்துண்டு பல்லுயிரோம்பு தல் நூலோர் தொகுத்தவற்றுள் எல்லாந்தலை" (குறள் 322) என்ற அசிரியர் கூற்றுக்களே போதிய சான்றாதல் அறிக.

இனி, இச்செந்தமிழ் நூலிற்கு உரைகண்டார் பதின்மர் என்ப, அப்பதின்மர் பெயரையும்,

> "தருமர், மணக்குடவர், தாமத்தர், நச்சர்,
> பரிமேலழகர், பருதி,— திருமலையர்,
> மல்லர், கவிப்பெருமாள், காளிங்கர், வள்ளுவனூற்
> கெல்லையுரை யெழுதினோர்"
>
> —பழைய வெண்பா.

என்ற செய்யுளால் அறிக. அவ்வுரைகளுள், தமிழ்நாடு, செய்த தவக்குறைவால், ஒழிந்தனபோக, எஞ்சிநின்றன மணக்குடவர் பரிமேலழகர் என்பார் இயற்றிய உரைகள் இரண்டேயாம். இவ்விரண்டினுள், இச்செய்யுள் முறையே நோக்கின், மணக் குடவர் உரை இரண்டாவதாகவும், அழகர் உரை ஐந்தாவதாகவும் விளங்குகின்றன. இவற்றுள், ஒப்புயர்வற்று, ஆயுந்தோறும்இன்பம் தந்து ஆசிரியர் கருத்தைத் தெள்ளிதின் விள்ளுரச் செய்வது, தெள்ளு பரிமேலழகன் செய்த உரை ஒன்றேயாம். அழகர், தான் உரை கூறுதற்கு முன்னர், தமக்கு முன்னிருந்த உரைகளைப் பன்முறையும் ஊன்றிப் படித்து, உண்மைப் பொருள்கண்டு உரை கூறியிருப்பது போன்றே யன்றோ, அவர்பின் வதிந்த ஆசிரியர்களும் உரை வகுத்திருப்பர்? அவ்வழி வகுத்த

அவர்தம் உரைகள், அழகர் உரையினும் சிறந்து விளங்கும் என்பதில் எட்டுணையும் ஐயமின்றறே? எனினும், நாம் செய்த தவக்குறைவால், நம்மொழி செய்த தவக்குறைவால், நம் நாடு செய்த தவக்குறைவால், அவைகள் கிட்டாவாயின; கழிந்தன உள்ளி கருத்தழிவதால் யாது பயன்? "Let the dead past bury its dead" என்பர் ஆங்கிலப் புலவரும். யாம்செய்ததுஎற்றென்று இரங்குவ செய்யாது, மற்றன்ன [செய்யாமையன்றோ நாம் செயற்பாலன ஆதலின், இறையருளாற் கிட்டிய இவ்விரு உரைகளையேனும் போற்றுமுகத்தால் அவற்றைச் சிறிது ஆராய்வல்:

பாயிரம், பொதுவும் சிறப்பும் என இரண்டாம். நூல். நூலாசிரியன், நுவலும்திறன், மாணவன், கொள்ளுந்திறன் என்ற ஐந்தினையும் தெரிவிப்பது பொதுப்பாயிரமாம். ஆக்கியோன், அதன் முதனூல், நூல்வழங்கும் எல்லை இவை கேட்டற் பின்னர் இதுகேட்கற் பாற்று என்னும் யாப்பு, கேட்போர், நுதலிய பொருள், அந்நூல் கேட்டலால் உண்டாம் பலன் என்ற எட்டினையும் உணர்த்துவது சிறப்புப் பாயிரமாம்.

கூறப்பட்ட இவை இரண்டனுள், ஒன்றையேனும் பாயிரம் எனத் தலைப் பெயர்பெற்ற, கடவுள் வாழ்த்து வான்சிறப்பு, நீர்த்தார் பெருமை, அறன் வலியுறுத்தல் என்ற நான்கனுள் ஒன்றேனும் கூறிற்றில்லை ஆதலானும், பரிமேலழகரும், தாம் கூறிய உரைப்பாயிர இறுதியில் "இல்லறத்தின் இலக்கணங்கூறி அதனை (இல்லறத்தை) முதற்கண் கூறுவான் தொடங்கி, எடுத்துக்கொண்ட இலக்கிய மினிது முடிதற்பொருட்டுக் கடவுள் வாழ்த்துக் கூறுகின்றார்" என்று கடவுள் வாழ்த்து என்றே கூறினார் ஆதலானும், மணக்குடவரும் பாயிரம் என்பது பற்றி ஒன்றும் கூறினாரில்லை யாதலானும், திருக்குறளுக்குப்

பாயிரம், இப்பொழுது கூறப்படும் கடவுள் வாழ்த்து முதலியன பாயிரம் அன்று என என்பதும் "ஆயிரத்து முன்னூற்று முப்பது அருங்குறளும் பாயிரத்தினோடு பகர்ந்ததற்பின்" என்று கூறியதினால் பாயிரம் என ஒன்று இருந்தது என்பதும், ஆயிரத்து முன்னூற்று முப்பதில் கடவுள் வாழ்த்து முதலியனவும் அடங்கி விட்டமையின், "குறளோடு பாயிரமும்" என ஒடு கொடுத்துக் கூறினமையின், பாயிரம் என்பது குறளின் வேறு என்பதும், அது இப்பொழுது மறைந்துவிட்டது என்பதும் பெறப்பட்டது. இனி, இச்செய்யுளைப் பாடினார் அழகர் காலத்திற்குப் பிற்பட்டவர் எனக் கொள்ளின், அழகர் கூறிய உரைப்பாயிரத்தையே அவர், பாயிரம் எனக் கொண்டார் எனக்கொள்ளினும் இழுக்கில்லை யென்க.

பாயிரம் இல்லா நூலுக்கும், உரையெழுதுவார் பாயிரம் எழுதி உரையெழுதுதல் வேண்டுமாதலின், அழகர் உரைப்பாயிரம் வரைவாராயினர். சிறப்பு வகையால், கடவுளெனக் கருதப்படும் முனிவரும், பிறரும் பார்ப்பாரும், ஆனிரையும், மழையும், வேந்தரும் உலகும் என்ற இவரை வாழ்த்துதலும் கடவுள் வாழ்த்தாமாதலின், நீத்தார் பெருமையும், வான் சிறப்பும், அறன் வலியுறுத்தலும் கடவுள் வாழத்தாயிற்று என்க.

## கடவுள் வாழ்த்து

கடவுள் வாழ்த்து என்பதற்கு மணக்குடவர், 'கடவுளை வாழ்த்துதல்'' என்று சாதாரணமாகப் பொருள் கூறினார். அழகியார், "சத்துவ முதலிய மூன்று குணங்களுக்கும் அதிகாரிகள் மால் முதலிய மூவராதலானும் அம்மூன்று குணங்கள் ஏதுவாக அறிமுதற் பொருள்கள்

உளவாமாதலானும், அம்மூன்று பொருளுக்கும், அம் மூவரும் உரிமையுடையராதலானும், அம்மூன்று பொரு ளையும் கூறுவார், அம்மூவரையும் வணங்குதல் முறையா கலின், இஃது ஏற்புடைக் கடவுளை வாழ்த்துதல்" என்று விளக்க உரை வகுத்தார்.

இனி, முதற்கடவுளது உண்மை கூறும் "அகரமுதல்" என்று தொடங்கும் குறளை முதலிலும், நூலறிவான் கடவுளுண்மை கண்டான் அவனைத் தொழுதல் வேண்டு மாதலின் அதனைக் கூறும் "கற்றதனா லாயபயன்" என்னும் குறளை அதன் பின்னும், அவ்வாறு தொழுதான் வீடடைவான் ஆதலின், அதனைக் கூறும் "மலர்மிசை யேகினான்" என்னும் குறளை அதன் பின்னும், அவ்வாறு வீடடைதலாவது, "அவலக் கவலைக் கையாற்றி னீங்கிப் புண்ணிய பாவமென்னும் இரண்டினையும் சாராமல், சாதலும் பிறத்தலுமில்லாதொரு தன்மையெய்து தலாகலான், 'மனத்துக்கண் மாசிலனாதல் அறம்' என்ப தற்கேற்ப, முதற்கண் மனக்கவலையறின் வருத்தம் ஒன்றும் இல்லை யாதலின், அது கெடுதலைக் கூறும், "தனக்குவமை யில்லாதான்" என்னும் குறளை அதன் பின்னும், மனக் கவலையறின், அறத்தின் பிறவாய, காமமும், பொருளும் பற்றிவரும் அவலம் கெடுமாதலின், அது கெடுதலைக் கூறும் "அறவாழி அந்தணன்" என்னும் குறளை அதன்பின்னும், புண்ணியத்திடத்து விருப்பும், பாவத்திடத்து வெறுப்பும் நீங்கினாலன்றி, அவற்றை விடமுடியாதாகலான், அது செய்தலைக்கூறும், "வேண்டு தல், வேண்டாமை" யென்னும் குறளை அதன் பின்னும், அப்புண்ணிய பாவங்கள் காரணமாக வரும் நல்வினை, தீவினைகளுள் நல்வினையும் பிறத்தற் கேதுவாமாகலின், அவ்விரண்டினையும் நீக்க வேண்டுமாகலின், அவை கெடு தலைக் கூறும் "இருள்சேர் இருவினையும்" என்னும்

குறளை அதன்பின்னும், இம்முறை. இவையனைத்தினை யும் கெடுத்தான், புலனடக்கி வீடுபெறுவான் ஆதலின் அதனைக் கூறும் "பொறிவாயில் ஐந்தவித்தான்" என்னும் குறளை அதன் பின்னும், மேற்கூறியதனையே வற்புறுத்து முகத்தால் அவ்வாறு செய்தார் வீடடைவர் என்றும், செய்யாதார், பிறந்து பிறந்து உழல்வர் என்றும் கூறும் "பிறவிப் பெருங்கடல்" என்னும் குறளை அதன் பின்னும், இத்தகைய பேற்றினைத் தரும் இறைவனால் கொடுத்த இவ்வுடலால் அவனுக்குத் தொண்டு செய்தல் வேண்டுமாதலின், அதனைக் கூறும் "கோளில் பொறி" என்னும் குறளை அதன் பின்னும் வைத்து மணக்குடவர் உரை கூறியுள்ள முறையும், முதல் இரண்டு குறள்களை யும் இக்காரணம்பற்றி இம்முறையே வைத்து, இறைவனை மனத்தால் நினைத்தும், வாக்கால் அவன் புகழைக் கூறி யும், மெய்யால் அவன் கூறிய நெறி வழிநின்றும், வழிடுவார் வீடடைவர் ஆதலின் அவைகளை முறையே கூறும், "மலர்மிசை யேகினான்," "வேண்டுதல் வேண்டாமை," "இருள்சேர் இருவினை," "பொறிவாயில் ஐந்து" என்னும் குறள்களை முறையே ஒன்றன்பின் ஒன்று வைத்தும், அவ்வாறு செய்யார் படும் இன்னல்களை முறையே கூறும், "தனக்குவமையில்லாதான்," "அற வாழி யந்தணன்," "கோளில் பொறி" என்னும் குறள் களை, அவைகளின் பின் முறையே வைத்தும், அவ்விரு வரடையும் பயன்களையும் வற்புறுத்து முகத்தால் ஒருங்கே தொகுத்துக் கூறும் "பிறவிப் பெருங்கடல்" என் னும் குறளை இறுதியாகவும் வைத்துப் பரிமேலழகர் உரை கூறியுள்ள முறையும், மிகவும் போற்றத் தக்கதே யாம்.

1. அகர முதல வெழுத்தெல்லா மாதி
   பகவன் முதற்றே யுலகு

மணக்குடவர் உரை:—எழுத்துக்களெல்லாம் அகர மாகிய எழுத்தைத் தமக்கு முதலாக உடையன; அவ்வண் ணமே உலகம் ஆதியாகிய பகவனைத் தனக்கு முதலாக வுடைத்து என்றவாறு.

பரிமேலழகர் உரை :-எழுத்துக்களெல்லாம் அகர மாகிய முதலையுடையன: அதுபோல உலகம் ஆதிபகவ னாகிய முதலையுடைத்து என்றவாறு.

ஈண்டு மணக்குடவர், "அகர முதல", "பகவன் முதற்று" என்ற இரண்டனையும் வேற்றுமைத் தொகை யாகக் கொண்டு பொருள் கூறியுள்ளார். பரிமேலழகர் பண்புத்தொகை யெனக்கொண்டு பொருள்கூறியுள்ளார். அழகர் கருத்துப்படி, அகரமும், பகவனும், விசேடணமாக வும், முதல் என்பது விசேடியமாகவும் பெறப்படு கின்றன. விசேடணம் விசேடியத்தை விசேடித்தா லாவது, அவ்விசேடகுணமில்லாத இனப்பொருளினீக்கி அவ்விசேடகுணமுடையதனை வரைந்து சுட்டுதலாம். வெண்தாமரையென்பதில், வெண்மை விசேடணம், தாமரை விசேடியம். வெண்மை தாமரையை விசேடித்த லாவது, பல நிறத்தாமரையினின்றும் வெண்மைப் பண் புடையதனை வேறு பிரித்துக்காட்டலாம். அதே போன்று, அகரமாகிய முதல் எனவும், ஆதி பகவானாகிய முதலெனவும் பொருள் கூறின், பல முதலினின்றும், அகர மாகிய முதலையும், ஆதிபகவனாகிய முதலையும் வேறு பிரித்துக் காட்டுதல் பெறப்பட்டது. படவே பல முத லுண்மை பெறப்பட்டு, இறைவன்தன் முதல்வனாம் தன் மைக்கும்,அகரம் தனிமுதலாம் தன்மைக்கும்மாசுண்டாம் ஆதலாலும்அவ்வாறு கூறுதல்ஆசிரியர் வள்ளுவனார்க்கும் கருத்தன்றாமாதலானும் முதலாம் தன்மைக்கும் மாசுண் டாம் ஆதலாலும், அழகர் உரை பொருத்த முடைத்

தன்றாம் என்று கூறுவாறும் உளராலோ எனின்; அவர் அறியார்; என்னை, அவ்விசேடணங்களைச், செந்தாமரை போன்ற பிறிதின் இயைபுநீக்கிய விசேடணங்களாகக் கோடாது, செஞ்ஞாயிறு, வெண்திங்கள், போன்ற இயை பின்மை நீக்கிய விசேடணங்களாகக் கொள்ளின்பொருத்த மின்றாதல் யாண்டைதென்க†.

இனி, காணப்பட்ட பொருளைக் கொண்டு, காணப் படாத பொருளின் உண்மையை விளக்கவேண்டுதல் மரபாதலின், காணப்பட்ட உலகைக்கொண்டு, காணப் படாத கடவுளின் உண்மையைக் கூறுவார், "பகவன் முதற்றே உலகு" என உலகின் மேலேற்றிக் கூறினாரா யினும், அவ்வாறு கூறின், உலகம் பகவனை முதல்வனாகக் கொண்டமையான், அவற்கு முதன்மை உண்டாயிற்று; இன்றேல் இன்றாம் என்றும் பொருள்படுதல் நோக்கி, "அவ்வாறு கூறினாராயினும், உலகிற்கு முதல் ஆதிபகவன், என்பது கருத்தாகக் கொள்க" என்று பரிமேலழகர் கூறிய உரைத்திட்பம், யாவரானும் போற்றற்குரியஒன்றேயாம்.

2. "கற்றதனாலாய பயன் என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்"

இக்குறளின் விசேடவுரையில்,

எழுத்தறியத் தீருமிழி தகைமை; தீர்ந்தான்
மொழித் திறத்தில் முட்டறுப்பானாகும்—
மொழித்திறத்தில்,
முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்"

---

† இக்குறிப்பு கூறினார் திரு. R. வேங்கடாசலம் பிள்ளையவர்கள், தமிழாசிரியர், அரசர்கல்லூரி, ஐயாறு.]

என்ற செய்யுளை உட்கொண்டவராய் "சொல்லினானே பொருள் அறியப் படுமாதலான், அதனைக்கற்கவே மெய் யுணர்ந்து வீடு பெறலாகும்; மீண்டும் வணக்கம் கூறியது எற்றுக்கென்றாற்கு, இஃது, அதனாற் பயனிது என்பதூ உம், வேறு வேறு பயனில்லையென்பதூஉம் கூறிற்று" என்று மணக்குடவர் கூறியதனை, பரிமேலழகர், "ஆகம அறிவிற்குப்பயன், அவன் தாளைத் தொழுது பிறவியறுத்த லென்பது இதனாற் கூறப்பட்டது" எனச் சுருங்கிய வாய்பாட்டாற் கூறினார்.

3. மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
 நிலமிசை நீடு வாழ்வார்"*

இக்குறளில் மலர் என்பதற்கு, "மலர் எனப்பொதுப்படக் கூறிய அதனான், மலர் எல்லாவற்றினும் சிறந்ததாகிய, உள்ளக் கமலம் என்றும், நிலம் என்பதற்கும் அவ்வாறே பொதுப்படக் கூறிய அதனான் எல்லாநிலத்தினும் சிறந்ததாகிய வீட்டுலகம்" என்றும்பரிமேலழகர் பொருள் கூறியது எல்லாரானும் போற்றற்குறியதேயாம். திருக் கோவையாரின் முதல் செய்யுளில், கோங்கம் என்பதற்கு அடை கொடாதது கொண்டு,பேராசிரியர் கூறிய உரையும் ஈண்டு நோக்கற்பாலது. பரிமேலழகர், இவ்வாறு பொருள் கொண்டதை அறியமாட்டாது, "அவர் மிசைநிலம் என மாற்றி, மேலுலகம் எனப்பொருள் கொண்டார்" என்று பின் வந்த தண்டபாணி தேசிகர் மயங்குவாராயினர். உள்ளத்தை மலர் எனக்கூறுதலை, "தாளென்னும் புண்டரீகம் அகமலரில் வைத்துப் போற்றும் பொற் பினான்" (பெரி, பெருமிழலை, 3) என்று வருதலானும் அறிக. இனி, இதற்கு மணக்குடவர், நிலம் எனப் பொதுப் படக் கூறிய அதனான், இவ் உலகின் கண்ணும் மேலுலகின் கண்ணும் என்று கொள்ளப்படும் என்று பொருள் கொள்வர். "ஏகினான" என்று இறந்தகால வாய்

பாட்டாற் கூறியது கொண்டு "அன்பால் நினைவாரது உள்ளக் கமலத்தில் அவர்நினைந்த வடிவொடு விரைந்து சேரலின், ஏகினான் என இறந்த காலத்தாற் கூறினார்" என்று உரைவகுத்த திட்பம், அறிஞர் அனைவரானும் போற்றற்குரியதேயாம்.

4. வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்
யாண்டும் இடும்பை யிலர்"

என்பது மணக்குடவர் கொண்ட பாடம்.

" வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்கு
யாண்டு மிடும்பை யில"

என்பது பரிமேலழகர் கொண்ட பாடம். இப்பாட பேதத்தால் பொருட் சிதைவு ஒன்றுமில்லை யெனினும், "சேர்ந்தார்......நீடுவாழ்வார்" (குறள், 3). "நெறிநின்றார் நீடுவார்வார்" (குறள், 6) "அடிசேர்ந்தார் நீந்துவர் அடிசேராதார் நீந்தார்" (10) "வணங்காத்தலை குணமிலவே" (9) என்று அல்வழித் தொடராகவே, நான்கு குறள்களைக் கூறியுள்ளாராதலானும், "தாள்சேர்ந்தார்க் கல்லால்......மாற்றலரிது" (குறள் 7) "தாள் சேர்ந்தார்க் கல்லால் பிறவாழி நீந்தலரிது" (8) என, நான்காம் வேற்றுமை உருபு விரியக்கூறும் இரண்டிடங்களிலும், "சேர்ந்தார்க் கல்லால்" "சேர்ந்தார்க் கல்லால்" என வற்புறுத்துதற் பொருட்டு "அல்லால்" என்றதையுடன் சேர்த்துக் கூறியவர், ஈண்டு அவ்வாறு கூறாமையானும், மணக்குடவர் கொண்டபாடமே கொள்ளத்தக்க பாடம் என்று கருதுகின்றேன்; ஆன்றோர்கள் ஆராய்ந்து உண்மை துணிவார்களாக.

இனி, "வேண்டுதல் வேண்டாமை" என்பதற்கு "இன்பமும், வெகுளியும் இல்லாதான்" என்று பொருள்

கூறி, விளக்கஉரையில், "பொருளும் காமமும் ஆகாவென்ற தற்கு 'வேண்டுதல் வேண்டாமையிலான் என்று பெயரிட்டார்.'' என்று கூறினார் மணக்குடவர். உரையிற்கூறிய இன்பமும், விசேடவுரையிற் கூறிய பொருளும், காமமும் ஒருவனால் விழையப்படுதலின், வேண்டுதல் என்பதற்கு இன்பம் எனக்கூறியதாற் குற்றமில்லை. இன்பத்திற்கு மறுதலை துன்பம் ஆதலானும், துன்பம் ஒருவனால் இயற்கையாகவே வெறுக்கப்படுகின்றதாதலானும், யாவரானும் வெறுக்கத் தக்கதேயாயினும், இயல்பாக வெகுளியை வெறுப்பார் யாவரும் இன்மையானும், வேண்டாமை யென்பதற் "வெகுளி" யெனப்பொருள் கூறியது குற்ற முடைத்தாம் என்க. இது நோக்கியே பரிமேலழகர் ''ஒரு **பொருளையும்** விழைதலும் வெறுத்தலும் இல்லாதவன்'' என்றுஒரு பொருளையும் குறிக்காது செல்வராயினர்.

5. ''இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு''

இதற்கு இருவர் கூறும் உரையும் ஒன்றேயாம். மணக்குடவர் உரையில் "......தலைவனது **ஆகிய** மெய்ப் பொருள் சேர்ந்த புகழ்ச்சிச்சொற்களைப் பொருந்தினார் மாட்டு" என்று ஒரு தொடர் உள்ளது. அதில் **ஆகிய** என்ற சொல், ஏடெழுதினோரால் தவறாகச் சேர்க்கப் பட்டிருத்தல் வேண்டும்.

இனி, இக்குறளிற்கு "இருவினையும் சேராத இறைவன் புகழ்புரிந்தார் மாட்டுப் பொருள் சேரும் (புரியார் மாட்டு இருள் சேரும்)' என்று பொருள் கூறுவாருமுளர். இதனால், இருள்சேர், பொருள்சேர் எனவரும் முதனிலை யுரிச்சொற்கள் இரண்டும், முற்றாதலும், சேரா என்பது ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சமாதலும் பெற்றாம்.

முதனிலையுரிச்சொற்கள் முற்றுப்பொருளவாதல் யாண்டும் இன்மை யானும், சேரா என்ற ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம், ஈறுபுணர்ந்து கெட்டது போன்றே அதனால் விசேடிக்கப்பட்ட இறைவனும் இருவினைகளையும் ஒருகாலத்துப் புணர்ந்து நின்று, இதுபோது அவற்றின் நீங்கியுள்ளான் என்று பொருள்பட்டு, இறைவன்தன் இயல்பாகவே பாசங்களின் நீங்கற்றன்மைக்கு இழுக்குண்டாம் ஆதலானும் அவர் உரை பொருந்துமாறு இல்லையென்க.

6 "பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின் றார் நீடுவாழ் வார்"

இக் குறளிற்கு இருவர் கூறும் உரையும் ஒன்றே. மணக்குடவர் நீடுவாழ்வார் என்பதை எழுவாயாகவும், நெறிநின்றார் என்பதைப்பயனிலையாகவும் கொண்டார். அழகியார், அவ்வாறின்றி மாற்றிப் பொருள் கொண்டார். நீடுவாழ்வார் என்பதற்குப் "பிறப்பின்றி எக்காலத்தும் ஒரு தன்மையராய் வாழ்வார்" என்றார் அழகியார். "இன்பமுண்டேல்,துன்பமுண்டாம் ஆதலின்" அவ்விரண்டும் இல்லையென்பார் ஒரு தன்மையராய் வாழ்வார் என்றார். பிறப்பின்றி எனவே, பிணி, மூப்பு, இறப்புக்களும் இல்லையென்பது பெறப்பட்டது. படவே. "எக்காலத்தும்" என்றல் வேண்டா கூறலாம் என்க. இனி, "தோற்றமுண்டேல் மரணமுண்டாம்" எனவே தோற்றமின்றேல் மரணமின்றாம்என்பது பெறப்பட்டது. இதையுட் கொண்டே மணக்குடவர், "இது சாவில்லையென்றது"என்றனர். நீடுவாழ்வார் என்பதற்கு"அழிவின்றி வாழ்வார்" என அழகியார் பொருள் கூறியதூஉம் காண்க. (குறள் 3)

## நெறிநின்றார் நீடுவாழ்தலாமாறு

இறைவன் ஐந்தவித்தான் எனவே, அவா வற்றவனா தல் பெறப்பட்டது. அவாவற்ற இறைவனைச் சார்ந்த வரும் அவாவற்றவரேயாவர். (அஃதாமாறு அடுத்த குறளின்கண் விளக்குவாம்) செல்வம் என்பது "சிந்தை யின் நிறைவே; அல்கா நல்குரவு அவாவெனப்படுமே" என்பர் ஆதலின், அவாவற்றார், நிறைந்த சிந்தையினரா தலும், செல்வமுற்றாராதலும் பெறப்பட்டன. அத்தகை யார்க்குக் கவலையின்றாம். (அஃதறுதலைக்கூறும் "தனக்குவமையில்லான்" என்ற குறளை இதன்பின் வைத்ததும் ஈண்டு நோக்கற்பாலது) கவலையுற்றவர் உடல், அக்கவலையானே, நலங்குன்றிக்கெடுதல் கண்கூடு. இக்காலத்தும், உடல் நலம் குன்றியிருப்பாரைக்காணின், "பாவம் கவலையதிகமாயிற்று" என்றும், உடல் நலம் நன்கு வாய்க்கப் பெற்றாரைக் காணின் "கவலையற்ற சீவன்" என்றும், மக்கள் கூறுவதும் அறிதற்பாலது. ஆத லின், கவலையற்றவர், உடல்நலங்குன்றாது வாழ்வார் என்பது பெறப்பட்டதூஉம் காண்க.

7 "தனக்குவமை யில்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லான்
மனக்கவலை மாற்ற லரிது"

இக்குறளிற்கு இருவர் உரைக்கும் உரைகளும் ஒன்றே எனினும், விசேடவுரையில் அழகியார், "தாள் சேராதார் பிறவிக்கேதுவாகிய, காம,வெகுளி, மயக்கங்களை மாற்ற மாட்டாமையின் பிறந்து அவற்றான் வருந்துன்பங்களுள் அழுந்துவரென்பதாம்" என்றனர். மணக்குடவர், "வீடு பெறலாவது அவலக்கவலைக் கையாற்றினீங்கி, புண்ணிய பாவமென்னும் இரண்டினையும் சாராமற்சாதலும்பிறத்

தலும் இல்லாததொரு தன்மையை எய்துதல்''என்றார். அது பெறுமென்பார் முற்படக்கவலை கெடுதல் வேண்டு மாகலானும், அதன்பின்னர் மற்றவை கெடுதல் ஒருதலை யாகலானும், அடுத்த குறளால் காமமுதலியன கெடு தலைக் கூறுகின்றார் ஆகலானும், அழகியார், "தான் சேராதார், பிறவிக் கேதுவாகிய, காம, வெகுளி மயக்கங் களை மாற்றமாட்டாமையின்'' என இக்குறளுரையில் கொண்டு கூட்டல் பொருந்தாதாம் என்க.

இனி, உவமையில்லாதான் தாள் சேர்ந்தார் கவலை யற்றார் ஆதல் வருமாறு :-இறைவன், உவமையில்லா தான் எனவே, ஒப்பாரும், மிக்காரும் இல்லாதான் என்பது பெறப்பட்டது. ஒப்பாரும், மிக்காரும் உளராய வழியே கவலையுண்டாம்; அவர்இலர் எனவே, இறைவன் கவலையற்றவனாதல் தெளியப்பட்டது. "பாலோடளாய நீர்பாலாகுமல்லது, நீராய் நிறந்தெரிந்து தோன்றாதது'' போல, கவலையற்ற இறைவனைச் சார்ந்தவரும். கவலையற்றவரேயாயினார். "நிலத்தியல்பால் நீர் திரிந் தற்றாகும் மாந்தர்க், கினத்தியல்பதாகும் அறிவு'' என்பது வள்ளுவர் வாக்கன்றோ? எனவே, அவனைச் சாராதார் "மனக்கவலை மாற்றலரிது'' என்றார்.

8. "அறவாழி யந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லாற் பிறவாழி நீந்த லரிது''

மாணார்க்குஉணர்வு பெருகல்வேண்டி, அறவாழியெனவே, அதன் பிற என்றது, பொருள் இன்பக் கடல்களை என வெளிப்படக் கூறாது மணக்குடவர் உய்த்துணர வைத்ததை, அழகியார் விரித்துரைத்தார். "துன்பக் கடலிடைத் தோணித் தொழில் பூண்ட தொண்டர் தம்மை, இன்பக் கரைமுகத்தேற்றும் திறத்தன...............

ஐயாறன் அடித்தலமே"* (நாவரசர். ஐயாறு. 4 : 92 : 6) என்று நாவரசப் பெருந்தகையார் கூறுமாறும் உணர்க. அழகியார் இக்குறளை, ஏகதேச உருவக அணியாகக் கொண்டார். மணக்குடவர் அவ்வாறு கொண்டிலர்.

9 "கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத் தான்
தாளை வணங்காத் தலை"

**மணக்குடவர் உரை** :-அறிவில்லாத பொறிகளை யுடைய பாவைகள் போல, ஒருகுணமும் உடையனவல்ல, எட்டுக்குணத்தினை யுடையவன் திருவடியினை வணங்காத தலையினை யுடைய உடம்புகள், உயிருண்டாகில் வணங்குமென்றிழித்து உடம்புகள் என்றார். என்பது.

**பரிமேலழகர் உரை** :-தத்தமக்கேற்ற புலன்களைக் கொள்கையில்லாத பொறிகள் போலப், பயன்படுதல் உடையவல்ல; எண்வகைப்பட்ட குணங்களையுடையானது தாள்களை வணங்காத தலைகள், என்பது.

இக்குறளிற்கு, இருவர் உரையும், பொருள் அளவில் பொருந்துமாயினும், சொல்லளவில் பொருந்துதல்இல. அழகியார்,"கோளில் பொறி","தலை" என்பவைகளுக்கு முறையே 'தத்தமக்கேற்ற புலன்களைக் கொள்கையில்லாத பொறிகள் என்றும், தலைகள் என்றும் இயற்பெயராகவே கூறியுள்ளார். மணக்குடவர், அவைகளுக்கு முறையே, அறிவில்லாத பொறிகளையுடைய பாவைகள்

---

* Footprints that perhaps another,
Sailing O'er life's solemn main
A forlorn and shipwrecked brother,
Seeing, shall take heart again.—H. W. Longfellow.

என்றும், தலையினையுடைய உடம்புகள் என்றும், ஆகு பெயராகக் கொண்டு பொருள் கூறியுள்ளார்.

ஒரு சொல் இயற்பெயராகவே நின்று பொருளை விளக்குவதாக,அதனை ஆகுபெயராகக்கொண்டு பொருள் கூறல் குற்றமாம் எனின்? அறியாது கூறினாய்; என்னை? ஒருசொல் இயற்பெயராகவே நின்று பொருளை விளக்கு வதாகவும், அதனை, ஆகுபெயராகக் கொண்டு பொருள் கூறல், கேட்பார் பொருளை எளிதில் உணர்தற்கன்றே?

ஈண்டும், தன் தொழிலைச் செய்யமாட்டாத உறுப் புகள் போல பயனுடையவல்லஎன்று கூறுவதினும்,பாவை யின் உறுப்புகள் போல பயன்படுதல் உடையவல்ல என்றல், பொருளை எளிதில் விளக்குதலின், மணக்குடவர் அவற்றை ஆகுபெயராகக் கொண்டு பொருள் கூறியது குற்றமாதல் யாண்டைய தென்க.

10 "பிறவிப் பெருங்கடல் நீத்துவர் நீந்தார்
இறைவனடி சேராதவர்"

இது மணக்குடவர் கொண்ட பாடம்.

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்

இது அழகியார் கொண்ட பாடம்;

இரண்டிடத்தும் தளை கெடுதல் இன்மையின் இரண்டும் பொருந்துவனவேயாம்.

இக்குறளிற்கு இருவர் கூறும் உரையும் ஒன்றே.

—தமிழ்ப் பொழில் 1937-38 பக்கம் : 261: 1938-39 பக்கம் : 59

# "இளங்கோவும், இறைமகனும்."

"சேரன் செங்குட்டுவன்" நூலாசிரியர், உயர்திரு. மு. இராகவையங்காரவர்கள், தமது நூலின் 5-ஆம் அதிகாரமாகிய, செங்குட்டுவனது வடநாட்டியாத்திரையின், இரண்டாம் அங்கமாகிய, காட்சிக்காதையின், முதற்பத்தியின், இரண்டாவது அடிக்குறிப்பில்," 'இளங்கோ வேண்மாளுடனிருந்தருளி' எனவரும் மூலத்துக்கு அரும்பத உரையாசிரியர், 'இளங்கோ வேண்மாள் என்பது பெயர்; நன்னன் வேண்மாள், உதியன் வேண்மாள் என்பதுபோல; வேண்மாளுடனிருந்து இளங்கோவை அருளிப் பாடிட்டு என்றுமாம்' என்றெழுதினார். இதனால், தம்பி இளங்கோவடிகளுடனும், மனைவி வேண்மாளுடனும் செங்குட்டுவன் இருந்தான் என்று அத்தொடருக்கு உரை கூறுவதும், அவ்வுரையாசிரியர் கருத்தாதல் விளங்கும். இளங்கோவடிகள் தம் தமையனுடன் தங்கியிருந்தவரென்பது, பதிகத்தாலும் தெரியவருதலாற் பிற்கூறியதும் பொருந்துவதேயாம்" என்று எழுதியுள்ளார்கள்.

இவர்தம் கூற்றினால், "இளங்கோவேண்மாள் உடனிருந்தருளி" என்ற அடிக்கு, இளங்கோவும், வேண்மாளும், இறைமகனும் ஒருங்கிருந்தனர் என்பது பொருளாகும் என்பதும், அடிகள், குறவர், குன்றத்து நிகழ்ந்தன குட்டுவதற்குக் கூறுழி, தாமும் அவனுடன் இருந்ததாகக் காட்சிக் காதையினும், பதிகத்திலும் கூறியுள்ளார்

என்பதும், அரும்பத உரையாசிரியர்க்கும் அதுவே கருத்து என்பதும் இவர் உட்கோளாதல் பெற்றாம்.

அடிகள், அரசு துறந்திருந்த குணவாயிற் கோட்டம், திருக்குணவாசல் எனப் பெயர் பெற்று, வஞ்சி நகரின் கீழ்த்திசைக்கண் ணுள்ளதொரு ஊரில் உள்ள அருகன் கோயிலாம் ஆதலானும், இலவந்திகைச் சோலையென் பது வஞ்சிநகர்க்கு அண்மையில் உள்ளதும், அரசனும், உரிமையும் ஆடுவதுமாய காவற்சோலையாம் ஆதலா னும், அரசு துறந்து, குணவாயில் கோட்டத்து இருப்பவர் அரசனும்,உரிமையும்ஆடும், காவற்சோலையில் அவருடன் இருந்தார் என்றல் நிரம்பாதாகலானும், மனைவியுடன் மலைவளம் காணச் செல்லும் தன் உடன் பிறந்தானுடன் அரசமுனியாகிய அடிகள் சென்றார் என்றல் அடிகட்கே இழுக்குடையத்தாம் ஆதலானும், மணல் எக்கரில் மூவரும் இயைந்து ஒருங்கிருந்தனர் என்றல், இளங்கோ வேண் மாள் தனக்கும் இழிவுடைத்தாம் ஆதலானும், கையுறை முதலியன கொணர்ந்த வேடுவர், முதன் முதலில் அரச முனியை வணங்கிய பின்னரே அரசனை வணங்குதல் நியதியாக, அங்ஙனமின்றி, அரசனை வணங்கினர் என்றல் நியதியன்றாமாதலாலும், கோப்பெருந்தேவி, கண்ணகி யென்ற இருவருள் சிறந்தார் யார் என்ற ஐயத்தை. அஃகியகன்ற அறிவுடைய அரசமுனி தன்னுடன் இருப்ப வும், அவரிடம் கேட்டுத் தெரியாது தன்மனைவியிடம் கேட்டல் அழகன்றா மாதலானும், அவ்வடிக்கு அவ்வாறு பிரித்துப்பொருள்கூறல் பொருளாகாது என்க. மற்று அவ் வடிக்குப் பொருள் என்னை எனின்; கூறுதும்; இளங்கோ வேண்மாள் என்ற தன் மனைவியுடன் இருந்து என்பதே பொருள் என்க. இருக்குவேள், இருங்கோவேள், இளங் கோவேள், நன்னன்வேள், உதியன்வேள் என வேளிர்கள் பலருள்ளும், இவள், இளங்கோவேள்குலத் துதித்தாள் என்றற்கு இளங்கோவேண்மாள் என்றார் என்க.

அடியார்க்கு நல்லார், பதிகத்தில், மூன்று இடங்களில் அடிகள் அரசனுடன் இருந்தார் என்பதை நிலைநாட்டுதற் பொருட்டு வலிந்து பொருள் கூறியுள்ளார்கள். அவை வருமாறு:—

1 "அவனுழை யிருந்த தண்டமிழ்ச் சாத்தன்
யானறி குவனது பட்டதென் றுரைப்போன்;"
(பதிக; 10—11.)

(அடியார்க்கு நல்லார் உரை)—குறவர் இளங்கோவடிகளை நோக்கி, அறிந்தருள் என்ற அளவிலே, செங்குட்டுவன் அதிசயித்து முகம் நோக்கப், பரிசில் காரணமாக வந்து அவனுழையிருந்த சாத்தன், அதனைக் குறிப்பானறிந்து அது விளைந்ததெல்லாம் யானறிகுவனென் றுரைக்கின்றவனென்க, என்றவாறு.

2 "வினைவிளை காலம் என்றீ ரியாதவர்
வினைவிளை வென்ன விறலோய் கேட்டி"
(பதிகம். 37—38.)

(இதன் பொருள்)—நீர் முன்னை வினைவிளை காலமென்று சொல்லிப் போந்தீர். அவர்க்கு வினைவிளைந்த காலம் என்னையென்று அரசன் வினவவென்க. என்றவாறு.

3 "அரசியல் பிழைத்தோர்க்கு.........
பாட்டுடைச் செய்யுள்."
(பதிகம். 55—60)

என்பதன் அவதாரிகையில், "அங்ஙனம் அரசனோடு சாத்தனார் கூறக்கேட்ட அடிகள் பொருட்பகுதியை மூவகையுள்ளுறையாக வகுத்துக் கூறுவர்" என்பது.

குறவர்கள் குன்றத்து நிகழ்ந்தனவற்றை அடிகளுக்கே கூறினார் என்பதை விளக்குதற் பொருட்டே, "இளங்கோ அடிகட்கு" (பதிகம்.2) என நான்காம் வேற்றுமை உருபு விரியக் கூறியுள்ளாராதலானும், "செங்குட்டுவன் அதிச யித்து முக நோக்கப் பரிசில் காரணமாக வந்து அவனுழை யிருந்த சாத்தான்" என்ற சொற்றொடரை, மூலப்பகுதி யில் இல்லாதிருப்பவும், அடியார்க்கு நல்லார் தாமே கொண்டு கூட்டியுள்ளாராதலாணும், அவனுழை என்ப தற்கு, அடிகளுழை என்பதே பொருளாமாதலானும், அடி கள் விருப்பு வெறுப்பற்ற ஒருவராதலின், தன்னையும் பிற ரைக் கூறுமாறு போன்றே "அடிகட்கு" என்றும், "அவ னுழை" என்றும் விளித்துள்ளாராதலானும், "வினைவிளை காலம் என்றீர்...விறலோய் கேட்டி" (37—38) என்புழி யும், "அவர்க்கு வினைவிளை காலம் என்னையென்று அரசன் வினவவென்க" என்று, மூலப்பகுதியில் இல்லாத அரசன் என்பதனைத், தாமே கொண்டு கூட்டியுள்ளாரா தலானும், இம்மூன்று இடங்களினும், அடியார்க்கு நல்லார் கூறியாங்கு, அரும்பத உரையாசிரியர் கூறாது, வினை முடிபு கூறுங்கால், "........குணவாயிற் கோட்டத் துக் கடவுளர் முன்னர்த் துறந்திருந்த இளங்கோ அடி களுக்குக்,கண்ணகி வானவர் போற்றத் தன் கணவனோடு கூடியது கண்டு, **செங்குட்டுவனுக் குரைத்த குறவர் வந்து, "எல்லா மறிந்தோய்! இதனை" அறிந்தருள்" என்று கூறிப் போக, பின்பு செங்குட்டுவனைக்கண்டு, போந்து அடி களுழைவந்த சாத்தன் அதுபட்டவாறெல்லாம் கூற .....**" என்று அரசனுழை, அடிகள் இருந்தாரல்லர் என்பதை விளக்கமாகவே கூறியுள்ளாராதலானும், அடியார்க்கு நல்லார் தாமும், வினைமுடிபு கூறுங்கால், அடிகள் அரசனுழை இருந்தாரல்லர் என்பதை வற்புறுத்தும் நெறி யில் கூறியுள்ளாராதலானும், குறவர் குன்றத்து நிகழ்ந் தன குட்டுவதற்குக் கூறுழி, அடிகள் அரசனுடன் இருந்

தார் என்பது பதிகத்தானும் விளங்குகின்றது என்பது பொருளில் கூற்றாதல் அறிக.

அவ்வாறே, காட்சிக்காதையினும் கூறியுள்ளார் என்பதும் குற்றமாம் என்க.

அவ்வாறாயின், குன்றத்து நிகழ்ந்தவற்றைக் குற வரும், சாத்தனாரும் அரசனுக்குக் கூறினர் எனக்காட்சிக் காதையானும், அடிகட்குக் கூறினர் என பதிகத்தானும் பெறப்படுதல், மாறுகோளாம் எனின், அறியாது கூறி னாய்; என்னை? மலைவளம் காணச்சென்ற அரசன்பால், ஆண்டையப் நிகழ்ச்சிகளைக் குறவர் கூற அவன்கேட்டு வியப்பெய்தியது அறிந்த, அவனுழையிருந்த சாத்தன், அவற்கு முன்னைய வரலாற்றினை விளங்கக்கூறி, அவ் வரலாற்றினை யொருகாப்பியமாகச் செய்யின், பெரும் பயனுடையதாகும் எனக்கருதி, அது செய்தற்குரியார், அரசமுனியும், பெரும்புலவரும் ஆய அடிகளே யென்பதை யுணர்ந்து, கண்ணகி வானாடடைந்ததைக் குறவர் கூறக் கேட்ட தான் கூறுதலினும், கண்ட அக்குறவரே கூறல் சிறப்புடைத்தாம் ஆதலின், அவரையும் உடன்கொண்டு அடிகள்பாற் சென்று கூறினார் எனக்கொள்ளின், மாறுபடு மாறு யாண்டையதென்க.

இதுகாறும் கூறியவாற்றான், "இளங்கோவேண் மாளுடனிருந்தருளி" என்ற அடிக்குக் கூறப்படும் இரண் டாவதுரை குற்றமுடைத்தாம் என்பதும், அடிகள், அரச னுழை இருந்தார் என்பது பதிகத்தானும் பெறப்படு கின்றது என்பது பொருளில் கூற்றாமென்பதும், அடி யார்க்கு நல்லார் கூற்றை ஆதாரமாகக் கொண்டு, திரு. மு. இராகவையங்கார் அவர்கள் "பிற கூறியதும் பொருந்துவதேயாம்" என்றல் வழுவுடைத்தாம் என்ப தும் பெறப்பட்டவாறு அறிக. ஆன்றோர் உண்மை துணி வார்களாக.

—தமிழ்ப் பொழில் 1938-39 பக்கம் : 112-116

# செங்கோல்

வடக்கண் வேங்கடத்தையும், தெற்கண் குமரியாற்றையும் எல்லையாகவுடைய, தமிழ் கூறும் நல்லுலகத்தைப், பல்லாண்டுகளுக்கு முன்னர், பல அரசர் பெருமக்கள் செவ்வனே ஆண்டு வந்தார்கள். அவர்கள், மலர் தலை யுலகிற்கு உயிரெனச் சிறந்தவன் அரசனே என்பதை யுணர்ந்தவர்களாதலின், அவர்கள் செங்கோலினர்களாய், இருந்து வந்தார்கள்.

உயர்குடிப்பிறப்பும், பிறந்த குடியை உயரச்செய்யும் ஒழுக்கமும்* அறம், பொருள், இன்பம், வீடென்னும் உறுதிப் பொருளுணர்த்துவனாகிய அறநூலும், நீதி நூலும், யானை, குதிரை, தேர், படைக்கலம் என்றவற்றின் நூல்களும் ஆகிய இவற்றை, விபரீத ஐயங்களை நீக்கி மெய்ப்பொருளை நல்லோர் பலருடனும் பலகாலும் பயின்று, அவை சொல்லுகின்ற நெறிக்கண்ணே நிற்கும்

---

* முதனாட் போரில், இராமனுக்கு முன்நிற்க ஆற்றாது, தோற்றோடிப்போந்த இராவணன், இரண்டாம் நாள், தன் தம்பி, கும்பகருணனைத் துயில் நீப்பித்து, அதுகாறும் நடந்தேறிய செய்திகளைக்கூறி அவனைப் போருக்குச் செல்லுமாறு பணித்தகாலை, "ஆனதோ வெஞ்சமர் அலகில் கற்புடை, சானகி துயர் இனும் தவிர்ந்த தில்லையோ?" "அந்தோ புலத்தியன்

வன்மையும், எல்லாவுயிர்க்கும் பிறப்பொக்குமாகலின், உயர்குடியிற் பிறந்தானாயினும், செயற்கரிய செய்தல் தருக்கின்மை, பிறர் குற்றங்கூறாமை முதலிய குணங்கள் இல்வழி, உயர்குடியிற் பிறந்ததனாற் பயனின்மையின், அக்குணங்களும், நிலத்தியல்பால் நீர்திரியுமாகலின், நல்ல தன் நலனும், தீயதின் தீமையும் இல்லென்போரும்; விடரும், தூர்த்தரும், நடரும், உள்ளிட்ட கூட்டங்களில் சேராது, காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம், மானம், உவகை, மதமெனப்பட்ட மூவிரு குற்றமும் முறைமையிற் கடிந்து, தீநெறி விலக்கி, நன்னெறி செலுத்தும், பேரறிவுடையாரைக், காவற்சாகாடு உகைத்தற்கண், தனக்கு உறுதுணையாகக் கொண்டு, அவர் கூறும் நல்லுரைகளை அவமதித்து ஒழுகாத ஒழுக்கமும், மனைவிழைவார் மாண்பயனெய்தார்.

*ஆகலின், இல்லாளை யஞ்சி விருந்தின் முகங் கொல்லா விரதமும், தந்நலத்தை, விலை கொடுப்பார் யாவர்க்கும் விற்பதல்லது, அதற்கு ஆவார், ஆகாதார் என்னும் வரைவிலாத மகளிரை, மனத்தினும் தீண்டாஒழுக்கமும், கள்ளின்மேல் காதல் கொண்டு ஒழுகும் அரசன், பகைவரான் அஞ்சப்படான் ஆதலின், கள்ளைக் கனவிலும் கருதாக் கள்ளாமையும், தான் செய்துகொள்ளவேண்டிய அறமுதலியனவற்றையேயன்றி

---

வழிமுதல் வந்த பொய்யறு குலத்தியல்பழிந்தது" என்று வருந்தி, பின்னர் முற்பிறந்தான் பணியைத் தலை மேற் கொண்டு போருக்குப் போந்த அவன் ஆங்கே, தன் தம்பி இலங்கை அறிஞன், வீடணன் தன்பால்வந்து, தன்னை இராமன்பால் வருமாறு வேண்டிய அக்காலை, "குலத் தியல்பு அழிந்ததேனும் குமர மற்றுன்னைக் கொண்டே, புலத்தியன் மரபு மாயாப்புண்ணியம் பொருந்திற்றென்ன, வலத்தியல் தோளை நோக்கி மகிழ்கின்றேன்" என்று தான் பிறந்த குலத்திற்காக மனமுடையும் அவன் தன் தூய உள்ளத்தை அறிக.

தொன்று தொட்டு வருகின்ற அவன் செல்வத்தையும், முன் செய்த நல்வினையின் பயனினாய நற்குணங்களையும் போக்குவது சூதாகலின் † அதனைச் செய்யாமையும், ஒரு வினையைத் தொடங்குங்கால் பின்னர் எற்றென்று இரங்குவனவற்றைச் செய்யாது பொருளே

*பல அரசர்களையும், புறங்காட்ட, ஓட்டிவென்று அரசாண்ட சச்சந்தன் தன் மனைவி விசையை பால் வைத்த அன்பினால், என்றும் அவள் பால் தங்க விரும்பி, அமைச்சர்கள் பலரும், தன்னைத் தடுப்பவும் கேளானாய், "எனக் குயிரென்னப் பட்டான் என்னலாற் பிறரையில் லான், தனக்குயான் செய்வ செய்தேன் தான் செய்வ செய்க." என்று கூறி அரசைக், கட்டியங்காரன் பால் விடுத்து, மனைவியோடிருந்து, இன்பம் நுகர்ந்து, பின்னர், அவனால் கொல்லப்பட்டதை நினைவு கூருங்கள்.

†காமர் கயல் புரளுதலினால், காவி முகை நெகிழ்ந் தும், தாமரையின் செந்தேன் தளையவிழ்ந்தும் சிறப்புப் பெறும் நிடத நாட்டிற்குத் தலைவன் நளன், சூதாடி, அரசு, மக்கள், மனைவி முதலியோரைவிட்டு நீங்கித் துன்புற்றது ஈண்டு உணரற்பாற்று.

யன்றி, அறமும், புகழும் பயப்பதாய வினைகளை, அவ்வினை வலிமையையும், நல்ல காரியத்திற்கு நானூறு இடையூறு என்பவாகலின், அதனை விலக்க லுறும் மாற்றான் வலியையும், இருவர்க்கும் துணை யாவார் வலிமையையும் சீர்தூக்கிப் பார்த்து, தன்வலி மிக்குழி, அது இடரின்றி முடியும் காலத்தில், அது செய்தற்கேற்ற இடத்தில், ஊக்கத்தோடே தொடங்கி, செய்யுழி, தெய்வத்தானாக, பொருளின்மையானாக, மெயவருத்தத்தானாகத், தனக்கு இடுக்கண்கள் பல

அடுக்கிவரினும், தந்நிலையில் சிறிதும் தாழாது, அவ் வினை, தன்னால் இசையாதெனினும், ஓராற்றால் இயற்றும் வன்மையும், ஒரோவழி, தெய்வத்தான் தாழ்வு வந்துழி, மயிர் நீப்பின் உயிர் வாழாத கவரி மானனப் போல, உயிர் வாழாத உயர்வும், முற்றத் துறந்த முனிவராயும், விரத வொழுகினராயும் வேடம் பூண்டு, உள்புகுதற்கரிய இடங்களிலெல்லாம் உள்புக்கு, ஆராய வேண்டுவனவற்றை ஆராய்ந்தறிந்து, ஆண்டை யார் ஐயுற்றுப் பிடித்து, சாம, பேத, தான, தண்டங்கள் செய்யினும் தன்னை வெளிப்படுத்தாத ஒற்றரைப் பகை, நொதுமல், நட்பு என்னும் மூன்று திறத்திலார் மாட்டும் நிகழ்ந்தன, நிகழ்வன அறிதற்குப் போக்கி, அவர் வந்தறி வித்த காரியந் தன்னையும், மற்றும் ஓர் ஒற்றனால் ஒற்றுவித்து ஒப்புமை கண்டு அதற்குத் தக நடக்கும் பேராற்றலும், போருக்குச் செல்லுவதற்கு முன்னர், "ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும், பெண்டிரும், பிணி யுடையீரும், பேணித் தென்புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும் பொன்போற் புதல்வர்ப்பெறாஅதீரும் எம் அம் புகடிவிடுதும் நும் அரண்சேர்மின்" என, பறையறைவித்துச் சென்று, "அறத்தினாலன்றி யமரர்க்கும் அருஞ்சமங் கடத்தல் மறத்தினால் அரிதென்பதை மனத்திடை வலித்து," அழியுநர் புறக்கொடை யயில்வேலோச்சாது யோர் புரியும் சீரிய குணமும், புலவர் பாடும், புகழுடை யோர், விசும்பில் வலவன் ஏவா வானவூர்தி யெய்துவ ராகலின், புலவரைப் புரக்கும் வண்மையும் ஆகிய இன்னோரன்ன குணங்களையுடைய அரசன்,

மேற்கூறிய குணங்களையுடையவனும், குன்றக் கூறல் முதலிய குற்றங்கடிந்து, சுருங்கச் சொல்லல் முதலிய குணங்களோடு கூடிய சொற்களைக் கூறவல்ல ஆற்றலும், அரசனுக்கு ஒன்று கூறுங்கால், அப்பொழுது

நிகழ்கின்ற அவன் குறிப்பினை அறிந்து, சொல்லுதற் கேற்ற காலத்தையும் நோக்கி, வெறுப்பிலவுமாய் வேண்டுவனவுமாய் காரியங்களை, அவன் மனம் விரும்பும் வகை, சொல்லும் வன்மையும், அரசர் கருதியதனை அவர் கூறாமுன்பே, குறிப்பானறிதலும் ஆய இன்னோரன்ன குணங்களையுடைய அமைச்சனையும்,

அமைச்சனாதற்கேற்ற குடியின்கண் பிறந்தவனும் வேந்தன் விரும்பும் பண்புடையவனும், இயற்கையறிவும் கண்டார் விரும்பும் தோற்றப் பொலிவும், பலகாலும், பலரோடும், ஆராயப்பட்ட கல்வியும் உடையவனும், தான் சென்ற கருமத்தைப் பகைவேந்தர் மனங்கொளச் சொல்லி அவர் செயிர்த்து நோக்கின், அந்நோக்கிற்கு அஞ்சாது, தன் அரசனுக்கு நன்மை பயப்பிப்பவனும் ஆய தூதனையும்,

தள்ளா விளையுள், திருவினர், தக்கோர் சாலச் செறிந்ததும், பெரும் பொருளுடைமையாற் பிறரால் விரும்பத் தக்கதும், பிறநாட்டினர் எல்லாம் ஒருங்கே தன் கண் வருங்கால் தாங்கி, வேந்தர்க்கு இறை உய்க்கும் நலத்தனும், பல்குழு, வேந்தலைக்கும் படர் கொலைக் குறும்பு, தீய பல்கும் உட்பகை, உடற்றும் பகை, உறுபசி, தீராநோய், ஆகிய இவை புல்குறிதானும் இல்லாததும், பொங்கிய செல்வம், ஏமம், பிணியின்மை, இன்பம், விளைவு முதலியவற்றை அணியாகவுடையதும், வருபுனல் வாய்ந்த வோங்கல், வல்லரண், மேல்நீர், கீழ்நீர் என்னும் பல்லுறுப்பினையுடையதும் ஆய நாட்டினையும்,

நீர் அரண், நிலஅரண், மலை அரண் காட்டரன் என்ற நால்வகை அரண்களையும், ஏணிக்கெட்டா உயர் வும், புறத்தோரால் அகழலாகா அடி அகலமும், அகத் தோர்க்கு நின்று வினை செய்யலாம் தலையகலும், கல்

இட்டிகளாற் செய்யப் பெற்று குத்தப்படாத் திண்மை யும், வளைந்து தானே எய்யும் எந்திர வில்லும், சேர்ந்தாரைக் கடிக்கும் கரிய விரல்களை யுடைய குரங்கும், கல்லுமிழ்கவணும், கல்லிடு கூடையும், கிடங்கு நீங்கி மதிபற்றுவாரைக் கோத்து வலிக்கும் தூண்டிலும், கழுத்திற் பூட்டி முறுக்கும் சங்கிலியும், உச்சியைக் கொத்தி மூளையைக் கடிக்கும் ஆண்டலைப் புள்ளும், கிடங்கிலேறின், மறியத் தள்ளும் இருப்புக்கையும், கண்ணைக் கொத்தும் சிச்சிலி யும், மதிற்றலை யேறினார் உடலைக் கோட்டாற் கிழிக்கும் பன்றியும், கதவுக்கு வரியாக உள்வாயிற்படியில் நிலத்திலே வீழ விடும் மரங்களும், கணைய மரமுமாகிய பொறிகளையுடைமையான் அணுகுதற்கு அருமையும் உடைய மதில்களையும், உட்கொண்ட பலவகை யுணவு களையும் உடைய அரண்களையும்,

ஒரு பொருளாக மதிக்கப்படாதாரையும் பொருளாக மதிக்குமாறு செய்வதும், அறத்தையும், இன்பத்தையும் தருவதும், உடையாரின்மையால் தானே வந்துற்றதும், கலத்தினும், காலினும் வரும் பண்டங்கட்கு இறையா யதும், பகைவர்பால் திறையாகக் கொண்டதும் ஆகிய பொருளையும்,

யானை முதலாய நான்குறுப்பாலும் நிறைந்து போரின் கண் ஊறுபடுவதற்கு அஞ்சாததும், அழியுநர் புறக்கொடை அயில்வேலோச்சாத் தலைவகையுடையதும் ஆயபடையையும்,

அவையிடை, ஆடைகுலைந்தான் ஒருவனுக்கு அப் பொழுதே அவன் கைசென்று அவ்விளிவரலைக் களையு மாறு போல, தனக்கு இடுக்கண் வந்துழி அப்பொழுதே

சென்று உதவி அதனைக் களைபவனும், தான், பழியும் பாவமும், தரும் செய்கையைச் செய்ய முயலுழி, அது செய்தற்கு முன்னரே மேற்சென்று, செவிகைக்கும் சொற்களைக் கூறியேனும் திருத்துபவனும் ஆய நண்பரையும்,

தனக்கு உறுதுணையாகக் கொண்டு, முறை வேண்டினார்க்கும், குறை வேண்டினார்க்கும் பேரத்தாணிக்கண், சான்றோர் உள்ளிட்டாரோடு செவ்வியுடையனாய், யாவர் மாட்டுங் கடுஞ் சொல்லன் அல்லனுமாய், தன் கீழ்வாழ்வார் குற்றம் செய்யின், அக்குற்றத்தை நாடி, செய்தார், உயிரினும் சிறந்தாராயினும் அவர் மாட்டுங் கண்ணோடாது, நடுநிலைமையோடு, அக்குற்றத்திற்குத் தக்க தண்டத்தை நூலோரோர்டுங் கூடி ஆராய்ந்து அவ்வளவிற்றாகச் செய்து ஆளும் ஆட்சி செங்கோன்மை யெனப்பெறும்.

—தமிழ்பொழில் : (1938-39) 145-149

# ''பொருள் உறுமுறை''

மதிக்கத்தக்க நாகரீகம் மிக்க நாட்டில், பொருள் நிலை எவ்வாறு கூறிடப் படுதல் வேண்டும்; ஒருவர் எவ்வளவு பொருள் பெறுதற்கு உரிமையுடையர்; அவர் அருகில் உள்ளார் எவ்வளவு பெறுதற்கு உரிமை யுடையர் என்பன போன்றவைகளை ஆராய்ந்து நேரிய முறையைக் கையாளுதல் வேண்டும்.

தற்கால உலக வாழ்வில், நம்மையறியாமலே பொருள்கள், மணிக்கு மணி, நிமிடத்திற்கு நிமிடம் கூறிடப் பட்டே வருகின்றன. உலகில் இறுதியாக இருவர் வாழும் வரையிலும் பங்கிடப்பட்டே நிற்கும். பொருள்கள் கூறிடப்படுகின்றனவா, இல்லையா என்பதில் கருத்து மாறுபாடில்லை; ஆனால், பொருள் எந்த முறையில், எந்த திட்டத்தின் கீழ்க் கூறிடப்படுதல்வேண்டும் என்பதில்தான் கருத்து மாறுபாடு நிற்கின்றது.

பொருளைக் கூறிடும் முறையில், பலர் பல மாறுபட்ட கொள்கையினை யுடையராகக் காணப்படுகின்றனர். அவருள் ஒரு சாரார், ஒருவர் தன் தனிப்பட்ட உழைப்பின் பயனாக உலகிடை எவ்வளவு பொருள்களை யுண்டாக்குகின்றாரோ, அவ்வளவு பொருள்களையும், அவர் தாமே அடைதல் முறையாகும் என்கின்றனர்.

2. அவரவர்கள் பெறுதற்குரிய முறையில், அதாவது சோம்பேறிகளும், உடல் நலம் குறைந்தவர்களும், தீயொழுக்க முள்ளவர்களும் ஒன்றும்பெறாமல் அழியவும், நல்லவர்களும், உழைப்பாளிகளும் செய்யும் தொழிற்கண் விரைவுடைமை யுடையவர்களும்முற்றும்பெற்று நல்நிலையில் வாழக் கூடிய முறையில் கூறிடுதல் நலமுடையதாகும் என்பர் வேறு ஒரு சிலர்.

3. வல்லமையுள்ளவர்களே பொருளைப் பெறவும் பேணவும் உரிமையுடையர் ஆவர் என்ற முறை, உலகத்தாரால், வெறுக்கப்படக் கூடியதும் நகைக்கப் படக் கூடியதுமாயினும், அதுவே தக்க முறையாகும் என்பர் மற்றும் ஒரு சிலர்.

4. சாதாரண மக்கள், இருக்கின்ற தங்கள் ஆடம்பரமற்ற நிலையிலேயே, பசியற வாழவேண்டிய பொருள்களைப்பெற, மேன்மக்கள் என்பார் மட்டில், மற்ற எல்லாப் பொருள்களையும் பெற்று வாழும் நிலையில் பொருளைக் கூறிடுதல் வேண்டும் என்பர், இன்னும் ஒரு சிலர்.

5. நாட்டுமக்களை, அவர்கள் செய்யும் தொழிற்கேற்ப, வகுப்பு வாரியாகப் பிரித்து, வகுப்பிற்குள்ளே, ஒருவருக்கொருவர் சமகூறுடையராகவும், வகுப்பிற்கு ஏற்ப உயர்ந்த கூறும், தாழ்ந்த கூறும் உடையராகவும் பொருளைக் கூறிட்டுக் கொடுத்து, கூலியாட்களைவிட அறிவுள்ள வேலையாட்கள் அதிகமாகவும், அறிவுள்ள வேலையாட்களைவிட, மதகுருக்கள் அதிகமாகவும், அவர்களைவிட, நியாயத்தலைவர்கள் அதிகமாகவும் பெறச்செய்வதே, சிறந்த முறையாகும் என்பர் வேறு சிலர்

6. உலகம் தன்னிலையிலேயே இயங்கவிட்டு விடுதலே நலமுடையதாகும் என்பர் வேறு ஒருசாரார்.

7. மேற்கூறிய முறைகளுள் ஒன்றுகூட நன்கு நடை பெறக் கூடியதன்று; ஒருவர் எத்தகையராக இருப்பினும் சரி, அவர் எவ்வளவு பெரியவராக இருப்பினும்சரி, அவர் எத்தகைய வேலையைச் செய்பவராய் இருப்பினுஞ்சரி. அவர்கள் சமகூறுபெறுதலே நடைபெறக் கூடியதும், நலமுடையதுமாய திட்டமாகும் என்பர், பொது வுடைமைக் கொள்கையாளர்.

இனி, இவர்கள்கூறும் முறைகள் ஒவ்வொன்றினையும் தனித்தனியே ஆராய்ந்து மேற்கொள்ளக்கூடிய முறை யைக் கைக்கொள்ளுதலே, நாம் செயற்பாலதாகலின், அவரவர்தம் கூற்றுக்களைத் தனித்தனி உற்றுநோக்குவாம்

ஒருவர் தன் தனிப்பட்ட உழைப்பின் பயனாக, உலகிடை எவ்வளவு பொருள்களை உண்டாக்கு கின்றாரோ, அவ்வளவு பொருள்களையும் அவர் தாமே யடையலாம் என்ற முறை, நோக்குவார்க்கு நலமுடைய தாகத் தோன்றினாலும், அதை நடைமுறையில் கொணர்வுழி, முதலாவதாக உலகிடை, ஒவ்வொருவனும் எவ்வளவு பொருளை உண்டாக்கினான் என்பதையறிவது முடியாதகாரியமாகவும், உலகில் செய்யப்படுகின்ற வேலைகள் முற்றும், உருவப்பொருள்களை உண்டாக்கு வனவோ, இயற்கைப் பொருளை மாற்றியமைப்பன வனவோ, நில்லாது, பல வேறுபட்ட உழைப்பாகவும் விளங்குவதைக் கண்டு வருந்தவேண்டியவராகவே இருக் கின்றோம்.

ஒரு பயிர்த்தொழிலாளியும், அவனுடைய வேலை யாட்களும், உழுது, விதைத்து, அறுவடையாக்குகின்றனர்

என்றாலும், அவர்களில் தனித் தனியாக எவ்வளவு பொருளை உண்டாக்கினார்கள் என்பதை அறிய முடியாமலே நிற்கின்றோம்.

ஓர் இயந்திரம் கணக்கற்ற ஊசிகளை நாள்தோறும் உண்டாக்குகின்றது என்றாலும், அவ்வூசிகளில் எவ்வளவு ஊசிகளை, இத்தகைய இயந்திரம் ஒன்றைச் செய்யக் கூடும் என எண்ணிய பெரியார் செய்தாராவர்? எத்தனை ஊசிகளை அவ்வியந்திரம், இவ்வாறு தான் செய்யப்படுதல் வேண்டும் எனக் கூறினார் செய்தாராவர்? எவ்வளவு ஊசிகளை அவ்வியந்திரத்தைச் செய்தார், செய்தாராவர்? எவ்வளவு ஊசிகளை அத்தொழிற்சாலை யில் உள்ள தொழிலாளிகள் செய்தாராவர்? என்பன போன்ற வினாக்களுக்கு விடையிறுக்க மாட்டாத நிலை யிலேயே இருக்கின்றோம்.

ஒருவன் நாற்காலியையோ அல்லது வேறு ஒரு மரச் சாமானையோ செய்கின்றான் என்றாலும், அவைகளும் கூட, அவன் ஒருவன் தன் உழைப்பினால் மட்டும் உண்டாயின என்று கூறுவதற்கில்லை. மரம் வைத்தவன், அதை வெட்டினவன், அதைத் துண்டித்தவன், அதை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குக் கொண்டுசேர்க்கும் வண்டிக்காரன், படகு ஓட்டி, கப்பல் ஓட்டி, துறைமுக வேலையாளர், அதைப் பலகையாக அறுப்பவன், அதை உருவாக்கிய இணைப்பாளன், வியாபாரி என இத்தனை பேர்களுடைய உழைப்பின் பயனாகவே, நாற்காலியோ அல்லது வேறு மரச்சாமானோ உண்டாக்கப்படுமேயா யின், அதற்காகக் கொடுக்கப்படும் பொருளை யார் யார் எவ்வளவு எவ்வளவு அடைதல் வேண்டும் என்பதை அறியமுடியுமா என்பதைக் காணமுயலின், அது முடியாத தொன்றாக இருத்தல் கண்கூடு.

இனி, ஒருவர், ஒரு பொருளைச் செய்வதற்காக அவரால் எவ்வளவு காலம் செலவழிக்கப்படுகின்றதோ அதற்கேற்பப் பொருளைக் கூறுசெய்தல் முடியுமா என்பதைச் சற்று உற்று நோக்குவாம். ஒரு மணிநேரம் வேலை செய்தவனுக்குக் கொடுக்கும் பொருளைப்போல, இருமடங்கு பொருளை இரண்டுமணி நேரம் வேலை செய்தவனுக்குக் கொடுத்தல் எளியமுறையாகும். ஆனால் மணிக்கு ஒரு பைக்கு வேலைசெய்கின்றவர்களும், 16 பைக்கு வேலை செய்கின்றவர்களும், ஒரு வெள்ளிக்கு வேலைசெய்கின்றவர்களும், 20-வெள்ளிக்கு வேலைசெய் கின்றவர்களும், ஆகப் பலதிறப்பட்டவர் உளர். இத்தகைய மாறுபட்ட நிலையெல்லாம், அத்தகையவர் களால் செய்யப்படும் பொருள்களை எதிர்நோக்கி நிற்கும் மக்களின் எண்ணிக்கையையும் தகுதியையும் பொறுத்தா யுள்ளது.

ஒரு நடிகனுக்கு ஒருவாரத்திற்குக் கொடுக்கும் பொருள், ஒரு இசைப் புலவனுடைய ஒரு மணிநேர வேலைக்குக் கொடுக்கின்றோம். காரணம் மக்கள் நாடகத்தினும்,இசையில் விருப்பமுடையராய்இருத்தலே யாகும். நல்லுருவும், நல்வழியும், நாடகவுணர்வும்பெற்ற சிறு குழந்தைகள், சில மணிநேரத்தில் பெறும் பெரும் பொருளின் சிறு பகுதியைக்கூட அவற்றின் தாயினால் அதேகால அளவிலாயினும்சரி, அதனின் மிக்க கால அளவிலாயினும் சரி பெறமுடியாமல் போகின்றது. நல் வாழ்க்கைப் பயனால், ஒருத்தி பெறும் பொருளினும், பல மடங்கு அதிகமான பொருளை அவளுடன் பிறந்தாள் அதே காலஅளவில், தீயொழுக்கத்தால் அடைகின்றாள் புகழ்பெற்ற இரணவைத்தியருக்கோ, அல்லது பாட கருக்கோ கொடுக்கப்படும் பொருளை, அவர்கள் தங்களு டன் வந்த கையாட்களும் தாங்களுமாக கூறிட்டுக் கொள்

ளுழி, தாங்கள் அதிகப்படியான பொருளையும், தங்களின் கையாட்டுகள் குறைந்தபொருளையும் பெறும் முறையில் கூறிடுகின்றனர். அவர்கள் அனைவரும் பாடுபட்ட நேரம் ஒன்றாகவும், பொருள் கூறிடும் முறையில் வேற்றுமை காண்கின்றோம். காரணம், வைத்தியரும் பாடகரும் தாங்கள் அத்தகைய நிலைக்கு வருவதற்குப் பல்லாண்டுகள்வரை, அத்துறையில் பயிற்சி பெறவேண்டியவர்களாகவும், கையாட்கள் அஃதிலராகவும், இருப்பதேயாகும். முன்னவர் இருவரும் தாங்கள் பயிற்சி பெறுவதற்காகச் செலவழிக்கப்பட்ட கால அளவையும், தாங்கள் வேலைசெய்யும் கால அளவுடன் சேர்த்துக் கணக்கிடுவராயினர். ஆகவே, காலத்தைக் கொண்டும், பொருள்களைக் கூறிடுதல் கூடாத காரியமாதல் பெற்றாம் ஆகவே, இம்முறையின் முதலாவது கூற்று, பொருந்துமாறில்லை யறிக.

2. அவரவர்களின் தகுதிக்கேற்பப் பொருளைக் கூறிடுதல் வேண்டும் என்பார், தங் கூற்றிற்கு ஆதாரமாக, நல்லொழுக்கம் வாய்ந்த ஒரு தொழிலாளியைக் காட்டினும், தீ யொழுக்கம் வாய்ந்த ஒரு தொழிலாளி, தொழில்பெறு முறையில், மிக்க இன்னல் அடையவேண்டியிருத்தலையும், சூதாட்டம் ஆடுபவனும். மிக்க பந்தயம் கட்டுபவனும், டாம்பீக வாழ்க்கைக்காக வேண்டி, தன் நிலத்தைப் பிறன்பால் ஒற்றிவைப்பவனும், நாளடைவில் லறியனாவதையும், சோம்பேறித்தன்மைமிக்க வாணிபத் தொழிலை நன்கு எண்ணிச்செய்யாத ஒருவியாபாரி, நாளடைவில் கடனாளி ஆதலையும் குறிப்பிடுவாராயினர் ஆனால், கடின மனமும், பிறன் பொருள் விழைவும், தன்னலமும் கொடுஞ்செயலுடைமையும் ஆய குணம் வாய்ந்தவர், செல்வராகவும், செந்தண்மையும், பொது நல உணர்வும், கேளாந்தன்மையும் வாய்க்கப்பெற்றார்,

வறியராகவும் இருத்தலை, அவர் அறியார்போலும். இன்னும் சிலர், பிறப்பானே செல்வராகவும், வறியராகவும் இருத்தலும் கண்கூடாம். அவர்கள் கூற்றுப்படி, அவரவர்தம் தகுதியறிந்தே பொருளைக் கூறிடுதற்கு முன்னரே, ஒரு குணமும் வாய்க்கப் பெறாத இளமைக் காலத்திலேயே அவர்கள் வறியராகவும், செல்வாராகவும் இருத்தற்கு இவர்கள் யாது கூறுவரோ அறியேம்.

இனி, ஒவ்வொருடைய தகுதியை அளந்தறிவதாவது கூடுமான செய்கையா, என்பதை நோக்குவாம். கொல்லனுக்கும், மதகுருவுக்கும் உள்ள தகுதி வேறுபாட்டை, எங்ஙனம் அளந்தறிதல்கூடும். மதகுரு பலநூல்களைப் படித்திருக்கலாம். அதன் பயனாக, கொல்லனால் செய்யப்பட மாட்டாத சொற்பொழிவு நிகழ்த்தலாம். ஆனால் கொல்லன் செய்யக்கூடிய, குதிரை லாடத்தையோ, அல்லது பிறவேறு சாமானையோ செய்ய இயலாது. அதேபோன்று, கொல்லனும் மதகுரு செய்யக் கூடியனவற்றைச் செய்ய இயலாதவனாகவே இருக்கின்றான். இந்நிலையில் நோக்கின், ஒருவர் தகுதியைக்கொண்டு பொருளைப் பங்கிடுதல் கூடாதகாரியமாம். ஒரோவழி, அவர்தம் தகுதியை அளவிடுதல் கூடுமானதாயினும், ஒருவனைவிட, மற்றொருவன் இவ்வளவு அதிகப்படியான தகுதி வாய்ந்தவன் என்றோ, இவ்வளவு குறைந்த தகுதி வாய்ந்தவனென்றோ, திட்டமாகக்கூற இயலாதாகலின் இம்முறையும் பொருந்தாமையறிக.

3. வல்லமையுள்ளவர்கள் வன்கண்மையுடன்பொருள்களைப் பெற்று வாழலாம் என்றமுறை, நாட்டில் அமைதியையும், கட்டுப்பாட்டையும் அழிக்கும். நாட்டில் உள்ளார் அனைவரும் ஒத்த வன்மையும், ஒத்த சூழ்ச்சியும் உடையராய் இருப்பின் எல்லாரும் ஒப்ப நலமடைவர்.

ஆனால் உலகில் குழந்தைகளும்,முதியோரும் திறமையற்றவர்களும் இருப்பதோடு, ஒத்த பலமும், ஒத்த ஆண்டும் ஒத்த உடல்நலமும் வாய்க்கப் பெற்ற ஒருசிலருள்ளும், பேராசையும், கொடுமைநிறை யுள்ளமும் உடையவரும், அவையில்லாருமாக மாறுபட்டவர்களும் இருத்தலின், அது கூடாதகாரியமாம். வியாபாரிகள், பொருளை எவ்வளவு உயர்ந்த விலைக்கு விற்கத் தங்களால் இயலுமோ, அவ்வளவும் முயற்சிப்பர். வீடுடையவர்கள், வீட்டில் குடிவாழும் மக்களின் நிலைமையையும் ஓராது, வீட்டின் மதிப்பிற்கு மேலும் வாடகை வாங்க முற்படுவர். இறுதியாக நோக்கின், இத்திட்டம் உருப்படாததொன்றாகவே முடியும் என்பது முடிபாயிற்று.

4. ஒருசிலர் பொருட் பகுதியில், மிகப்பலவற்றைப் பெற்று நன்குவாழ, பலர், சில பொருள் பெற்று வாழ்தலாகிய முறையே இன்று நாட்டில் நிகழ்வதாகும். இதனால் பயனடைபவர்கள் நாட்டை ஆளவும், புதுப் புது சட்டங்களை இயற்றிப் பரிபாலிக்கவும், நாட்டு நன்மைக்காகப் படைகளைத் திரட்டி நடத்தவும், கல்வி, விஞ்ஞானம், கலை, இலக்கியம், சித்தாந்தம், சமையம், முதலாயினவைகளைப் பாதுகாக்கவும், சிறந்த மாடங்களை வகுக்கவும், புதுமுறையில் உடுத்தவும், சிறந்த முறையில் வாழ்க்கையை நடத்தவும்,போதிய கல்வியைப் பெறுவராயினர். அவ்வாறு செலவுக்கு மேலும், பொருள் கொடுப்பதால், முதல் எனக் கூறப்படும் அம்மிக்க பொருளால், பொருளை அதிகப்படியான அளவில் உண்டாக்குவதற்குரிய சாதனங்களான, புகைவண்டித் தொடர், சுரங்கங்கள், வாணிப நிலையங்கள் முதலாயவைகளை உண்டாக்க முடிகிறது என்பர் ஒருசிலர்.

இலர் பலராகவும், உளர் சிலராகவும் அமைந்த இத்திட்டம், சில்தொகையினராட்சி (Oligarchy) எனப் பெயர்

பெறும். இந்த முறை மாறினால் மேற்கூறிய துறைகள் யாவும் பாழடையும். ஆகவே, தாங்கள் இலராகவும் இதையே ஆதரிப்பாராயினர்.

இம்முறையைக் கையாளுவதற்கு முன், மிக்க பொருளைப் பெறுதற்குரியார் யார் என்பதைக் காணு வதில் ஐயம் நிகழ்கின்றது. அவ்வாறே நாம் ஒருவரை மேற்கொண்டு அவர்பால் நாட்டை ஒப்புவித்தால், நாம் எதிர்நோக்குவனவற்றை, அவர் செய்து முடிப்பாரா என்பதில் இரண்டாவது ஐயம் நிகழ்கின்றது. அவர்கள் சாதாரண மக்களுடன் கூட்டுறவு பெறாமையால், மக்களின் மனக்குறைகளை அறிய மாட்டாராகலின், அவர்களால் நாட்டிற்குச் சிறுநலனும் வாய்க்காதென்பது உறுதி. அதற்கு மாறாக, அவர்கள் தங்கள் நிலையை உயர்த்திக்கொள்வான் வேண்டி, இன்னும் அதிக நேரம் வேலை செய்து, குறைந்த கூலி பெறவே ஏழை மக்களைக் கட்டாயப்படுத்துவர். விளையாட்டு வேடிக்கைகளுக்கும், விருந்திற்கும், ஆடம்பர வாழ்க்கைக்கும் பொருளின் மிக்க பகுதியைச் செலவிட்டு கல்விக்கும், கலைக்கும் சிறு பகுதியைச் செலவழிப்பர். இராணுவத்தைப் பற்றிய கவலையற்றவராகவேனும், அல்லது அதைத் தன்னுடைய பரிவாரமாக மாற்றிக்கொண்டு, உள்நாட்டிலும், வெளிநாட்டிலும் உள்ள தமக்குப் பகையாயினாரை அடக்க வேனும் முயல்வர். தங்களை மேன்மைப்படுத்திக் கொள்ளவும், தங்கள் குற்றங்களை மறைப்பதற்காகவும் வேண்டி, கல்லூரி, கலாசாலைகளில் கல்வியைக் குறைப்பர். தங்களை இன்றியமையாதவர்களாக ஆக்கிக் கொள்வதற்காக வேண்டி, சாதாரண மக்களை, ஒன்றும் அறியா ஏழைகளாகவும், அடிமைகளாகவும் ஆக்கவே முயல்வர். இறுதியில் அவர்கள் கடமைகள் எல்லாம், பாராளுமன்றம், நகராண்மைக் கழகம், சட்ட நிரூபண மன்றம் முதலியவைகளால் கைக்கொள்ளப் பெற்று

நாட்டு மக்களால் தரப்பெறும் வரிப்பணத்தைப் பெற்று வேலை செய்யும் ஒரு சிலர்பால் விடப்பெறும்.

பொருள்நிலை சமமாகக் கூறிடப்படின், பொருள் எல்லாம் செலவழிக்கப்பட்டு, புகைவண்டித் தொடர் உண்டாக்குவதற்கும், சுரங்கங்கள் வெட்டுவதற்கும், தொழிற்சாலைகள் ஏற்படுத்துவதற்கும் பொருள் இன்றிப்போய்விடும் என்கின்றனர். இக்கூற்று உண்மை என்றாலும், நாட்டுக் குழந்தைகள் நன்கு வளர்ந்து வாழ்தற்கு வேண்டிய பால், கிடைப்பதற்குமுன் நீராவிப் பொறி செய்தல் அறிவற்றவன் செயலேயாகும். ஆகவே இம்முறையும் பயனற்றதென்பது தெளியப்பட்டது.

5. உலகில் எத்தனை வகையான தொழில் முறைகள் உளவோ, அத்தனை வகுப்பாக மக்களைப் பிரித்து, தொழிலிற்கேற்ப அவ்வவ்வகுப்புகளுக்கு வேறுபட்ட பங்கு முறைகளைத் தருதல்வேண்டும் என்பார் கூற்றுப் படி, குப்பை கூட்டுவோன், வீட்டு வேலைக்காரன், சமையல்காரன் முதலாயினார், மதகுரு, ஆசிரியன், இசை யாளன், முதலாயினாரைவிட குறைவான பொருளைப் பெறுதல்வேண்டும் என்பது,அவர் கருத்தாதல் பெற்றாம். கல்வி கற்று, அறிவுடையராய் அதனால் பெரியாராகி, பள்ளி ஆசிரியர், மதகுரு முதலானோர், கல்விகல்லா கீழ் மக்களாகிய ஏழைத் தொழிலாளிகளைக் காட்டினும் அதிகம் பெறுதல் முறையாகும் என்று அவர்கள் கருது கின்றார் போலும். பெருந்தன்மையின் அறிகுறியே பெறாத, கல்வி ஒரு சிறிதும் கல்லாத இயந்திர ஓட்டிகள், கல்வி கற்றவர்களைவிட மிக்க பொருளைப் பெறுவதை இன்று நாம் காண்கின்றோம். பெருங்குடிப் பிறப்பும் பெருங்கல்வியும் வாய்க்கப்பெறாதார் பொருளுடைய ராகவும், ஞானாசிரியர்களும், புலவர்களும் பொருளற்ற வறியராகவும், இருப்பது கண்கூடாம்.

ஒரு தொழிலாளி நன்குவாழ எவ்வளவு பொருள் செலவாகுமோ அதைவிட அதிகமானபொருள், வேறு ஒரு தொழிலாளிக்குச் செலவாகும் எனச் சிலர் நினைக்கலாம். அவ்வாறு நினைப்பார் உளராயின், அவர்களை அத்தகைய நினைப்பைக் கைவிடுமாறு நான் கேட்டுக் கொள்ளுகிறேன். ஒரு ஏழைத் தொழிலாளி நன்கு வாழ்வதற்கு எவ்வளவு உணவு உட்கொள்கின்றானோ, அதே உணவு அரசனையும் நன்குவாழச்செய்யும்; இன்னும் கூறுவோமேயானால், அரசன் உட்கொள்ளும் உணவினும் அதிகப்படியான உணவை யுட்கொள்ளும் தொழிலாளிகளும் உளர் எனலாம். அரசனுடைய பங்கை இரண்டு மடங்காக்குவதனாலேயே, அவனால், இருமடங்கு உணவையுட்கொள்ள முடியாது. இருமடங்கு நீரை யுட்கொள்ள முடியாத; இருமடங்கு உறக்கம் மேற்கொள்ள முடியாத; இருமடங்கு பெரிய மாடியில் வாழமுடியாது: இருமனைவிகளை மேற்கொள்ள முடியாது; இரு இல்லற வாழ்க்கையை நடத்தவும் முடியாது, ஆகவே இம்முறை எவ்வாறு நோக்கினும் அறிவொடுபடாத் திட்டமாகவே யுள்ளது.

6. தற்சமயம், உலகம் தன்னிலையிலேயே இயங்குமாறு விட்டு விடுதலாகிய முறை, எளிமையும், பாதுகாப்பும் உடையதாகத் தோன்றினும், அது மிகவும் அரியதும், முடியாததுமாகும். ஒருபொருளை எவ்வளவு பாதுகாப்புடன் வைத்திருப்பினும், அது தன்னிலையில் நில்லாது மாறுபட்டே நிற்கும். உண்மையைக் கூறுவோமாயின், பாதுகாப்பில் இருக்கும் பொழுதினும், அதை, அது தன்னிலையிலேயே விட்டுவிடும் பொழுது உண்டாகும் மாறுபாடு மிக விரைந்ததும், திடுக்கிடக்கூடியதுமாகும்.

ஒவ்வொருவன் செய்யும் தொழிலும் அவனுக்கே உரிமையுடையதாக நில்லாமையால் கடந்த நூற்றைம்

பது ஆண்டுகளாக உலகிடை ஏற்பட்ட மாறுபாடுகள் மிகப் பலவாம். நீராவியினாஃ ஓட்டப்பெறும் இயந்திர வரவாலும், மின்சாரத்தினால் ஓட்டப்பெறும் இயந்திர வரவாலும், கடல் மேலும், கீழும் ஓடும் இயந்திரவர வாலும், வானிடையுலவும் இயந்திர வரவாலும், நம் மிடையே இலரே இலராகு முறையில் மிக்க பொருளை உண்டாக்கவும், தொழில் முறைகளை எளிமையுடைய தாக்கவும் கூடிய ஆற்றல் நமக்கு வாய்த்திருக்கின்றது. முற்காலத்தில் நாம் பாடு பட்ட அளவு, இன்று படுவோ மாயின் வாழ்க்கைக்கு இன்றியமையாதனவாய தொழில் களைப், பாதிகால அளவில் முடித்துக் கொண்டு, மற்ற பாதிகால அளவை, விளையாட்டு வேடிக்கைகளுக்கும், ஆடல் பாடல்களுக்கும் செலவிடவும் கூடும்.

இம்முறை, இயந்திர வரவிற்குமுன் ஏழை மக்கள் எந் நிலையில் இருந்தார்களோ, அதைவிடப் பன்மடங்கு கீழான நிலையில் அவர்களைக்கொண்டு வந்து விட்டு விட்டது. இம்முறை இவ்வாறே நீளவிடப்படின், இன்று ஏழைமக்கள் ஒருவெள்ளிக்கு எவ்வளவு பாதுகாப்பு அளிக்கின்றார்களோ, அதைவிட, பன் மடங்கு பாது காப்பை ஒரு தம்பிடிக்கு அளிக்க நேரிடும். ஆனால் பொருளாளர்மட்டில், பொருளாளராகவே விளங்குவர். என்றாலும், அவர்கள், அந்தக் காலத்தில்; இருந்ததுபோல அருள் நிறையுள்ளமும், பெருந்தன்மையும் உடையராக இலராய், ஆடம்பர வாழ்க்கையும், வன்னெஞ்சமும் உடையராகவே விளங்குகின்றனர்.

ஒருவர் கூறினார் (King Alfred) உலகநிகழ்ச்சி முறை கள், இவ்வாறே விடப்படின் வேலைசெய்யாச் சோம் பேறி ஒருவன், பெரிய வீடுகள் ஐந்து பெற்றுவாழ, அரும் பாடுபடும் மக்கள் அணியும் ஆடையும் இலராய் ஒரே அறையில் அடைபட்டு வாழும் காலம் கூடியவிரைவில் ஏற்படும் என்று. அதேநிலைதான் இன்று நேர்ந்துள்ளது.

பொருள் நிலையும் மக்கள் நிலையும் மாற்றம் பெறா விடின், உலகைத் தன்னிலையில் இயங்கவிடுவது நன்றுடையதாகும். ஆனால் அது நடைபெறாததொன்றே யாகும்; நாம் செயலொழிந்து நிற்பது, நீர் தன்னிலையில் ஓடிக் கொண்டேயிருக்க, நாம் மட்டில் செயலொழிந்து அதன் கரையில் உட்கார்ந்திருப்பது போன்றதாயின் நலம்; ஆனால் அது அவ்வாறின்றி, குதிரை பூட்டபெற்ற வண்டியில் உட்கார்ந்திருப்பது போன்றதாயின், அது கூடாத காரியமேயாகும். வண்டியில் செயலொழிந்திருப்போமாயின், குதிரை தான் முனைந்த இடமே சென்று இறுதியில் ஒருபெரும் பள்ளத்தில் தள்ளிவிடுதல் ஒருதலையாதல்போல, உலகத்தைத் தன்னிலையில் விட்டு விடுவோமாயின் அதுவும் முறையின்றிக் கெடுதல் ஒருதலையாம் என்க, எனவே இம்முறையும் பயனற்றது என்பது பெறப்பட்டது.

இதுகாறும், பொதுவுடைமையாளர் கூற்று ஒன்று தவிர மற்றெல்லாம் ஆராயப்பட்டன. அதன் பயனாக ஒருவரின் தகுதி, பொருளீட்டும் ஆற்றல், பெருந்தன்மை முதலியவற்றின் தகுதிக்கேற்ப, பொருளைக் கூறிடும் முறையும் பயனற்றதென்பது வெளியாயிற்று; பொருளிற்கும், வேலைக்கும் சம்பந்தம் கற்பித்து, அதன் மூலம் கூறிடும் முறையும் தோல்வியுற்றது; வேலைக்கும், குணத்திற்கும் சம்பந்தம் நோக்கிக் கூறிடும் முறையும் பயனற்றதாகிவிட்டது; பொருளிற்கும், பெருந்தன்மைக்கும் சம்பந்தம் நோக்கிக் கூறிடும் முறையும் தோல்வியுற்றது; எல்லாவற்றையும் கைவிட்டு, உலக நிகழ்ச்சிகளை அதன் நிலையிலேயே விட்டுவிடும் முறையும் நடவாததொன்றாகிவிட்டது;

இறுதியாக நோக்குழி, இறுதிவரை நின்று நிலைக்கும் முறை, ஏழைகள் துயர்நீத்து வாழும்முறை எம்முறையோ,

அம்முறையே யாகும் என்பது தெரியப்பட்டமையின், பொதுவுடைமையாளர் கூற்றினை நோக்குதற்குமுன் ஏழையென்பது பற்றிச் சிறிது கூறுவாம்.

வறுமையென்பது, தன்னை உற்றாரை என்றும் ஆறுதலற்ற நிலையிலேயே இருக்கச் செய்து, பேரிடர் விளைக்கும் இயல்புடைய ஒன்றாம் எனினும், அஃது துற்றார், பசியும், பிணியும் நீக்கி, வாழப்பெறுவராயின் அவர்கள் என்றும் மன அமைதி என்பதே யிலராய் இருக்கும் பொருளுடையாரைப்போல் அல்லாமல், மன அமைதியும் அதன் காரணமாக உள்ளக்களிப்பும் உடையவராகவே இருப்பர்; தம்முடைய இருபதாவது ஆண்டில் தாம் பெற்று வாழ்ந்த பொருள் அளவைக் காட்டினும், பன்மடங்கு மிக்கபொருளைத் தம்முடைய அறுபதாவது ஆண்டில் பெற்று வாழ்வார் பலரைக் காண்கிறோம்; எனினும், அவருள் ஒருவராயினும், தம்முடைய இருபதாவது ஆண்டில் பெற்று வாழ்ந்த இன்ப வாழ்க்கையை விட தம்முடைய அறுபதாவது ஆண்டில் பன்மடங்கு மிக்க இன்ப வாழ்க்கையைப் பெற்று வாழ்வதாகக் கூறுகின்றாரில்லை. உள்ளக்களிப்பின், உண்மை, இன்மைகள், ஒருவற்கு இயற்கையே வாய்த்துள்ளனவே யொழிய அவ்வுண்மை, இன்மைகளுக்குப், பொருள் காரணமாகாது என்பதே அறிவுடையார் கொள்கை. ஒருவனுடைய பசிப்பிணியைப் போக்கலாம், ஆனால் அவனுடைய மனச்சோர்வினைப் போக்குதல் இயலாது;

வறுமை வாழ்க்கையுடைய பெண் ஒருத்திக்குப், பெரிய வீடு, எண்ணற்ற வேலையாட்கள், வகை வகையான வனப்புறு உடைகள், ஒப்பனை செய்யப்பெற்ற நீண்ட தலைமயிர் ஆகிய இவைகளைக் கொண்டு வாழும் வாழ்க்கை, மிகவும் இனிமையுடையதாகத் தோன்றலாம்

ஆனால் அவையனைத்தையும் கொண்டு வாழும் வாழ்க்கையையுடையா ளொருத்தி, இவற்றின்பால் உள்ள விருப்பக் குறைவான், நாளின் மிக்ககாலப்பகுதியை இவற்றினின்றும் நீங்கி வெளியிடங்களில் வதிய விரும்புவதைக் காண்கின்றோம். தெளிந்த அறிவுடையாரைக்காட்டினும், குடிக்கும் இயல்புடையார் களித்த உள்ளமுடையராய் இருக்கின்றனர்; நல்லியல்புடையார் தாம்தொடங்கிய வேலை மடங்கலின்றி இனிது முடியுமளவும், இன்பமிலராகவே யிருத்தலைக் காண்கின்றோம்.

இந்நெறி, வறுமையுற்றாரைப் போன்றே பொருளுடையாரும் மன அமைதியின்றி யிருத்தலின், அப்பொருளுடையார் தாமும் வறுமையுடையரே யாவர்; என்னை? "செல்வ மென்பது சிந்தையின் நிறைவே, அல்கா நல்குரவு அவாவெனப்படுமே" என்பவாகலின். ஆகவே வறுமை மக்களால் வெறுக்கப்படுதற்குக் காரணம், அது மக்களுக்கு மன அமைதியின்மையினைக் கொடுத்தலான் அன்று; மற்றென்னையோ காரணம் எனின்? அது, தன்னையுற்றாரைப் பிறமக்களினும் இழிவுடையராக, கீழ்மக்களாக எண்ணச் செய்தலே யாம் என்க.

இதுகாலை, நம்மிடையே நிலவும் இவ்வறுமை, ஏழைமக்களை இழிவுபடுத்துவதோடு நில்லாது, அவர்களைச் சுற்றியுள்ளோரையும் இழிவுபடுத்துகின்றது. வறுமையான் உளவாம் பல விளைவுகளினின்றும் தப்புதல் பொருளுடையானுக்கும் இயலாது. வறுமை காரணமாகப், பல்வேறு தொடர் நோய்கள் தோன்றுமாயின், பொருளுடையானும் அந்நோய்வாய்ப் படுதல் கண்கூடாம், வறுமை காரணமாகச் கொலையுங் களவு ஆகிய கொடுஞ் செயல்கள் நாட்டிடையே தோன்றின், பொருளுடையார் அவற்றினுக்கஞ்சி, தம்மையும். தமரையும், தம்பொருளையும் காத்தற் பொருட்டு மிக்கபொருளைச் செலவிடுகின்றனர்

வறுமையுற்ற மக்களின் சிறாரிடையே, அது காரணமாக, ஒழுக்கமற்ற செயல்களும், திருத்த மற்ற சொல்லாடலும் தோன்றுமாயின்,அவை பொருளுறு மக்களின் சிறாரிடைப் பரவாமல் இருப்பதில்லை. இளமையும், அழகும் வாய்க்கப் பெற்ற ஏழைப்பெண் ஒருத்தி, நன்னெறி வாழ்க்கையிலும், தீநெறி வாழ்க்கையான் மிக்க பொருள் எய்தலாம் என எண்ணுவளாயின், அவ்வெண்ணத்தின்வழி சென்று,பொருளுடைய இளைஞன் ஒருவனுடைய வாழ்க்கையையும், அவன் தன் செந்நீரையும் கெடுத்து, அவன்வழி அவனுடைய இல்லக்கிழத்தி, மக்கள் ஆகியவர்களை நோய் வாய்ப் படுத்துவள்.

இவ்வறுமையான் உற்ற பெருவிளைவுகளைக் கண்டு அஞ்சிய பொருளுடையார், அவ்வறுமையாளரைத், தாங்கள் வாழும் இடத்தினின்றும் பிரித்து, வேறு ஒரு தனித்த இடத்தே வாழவைப்பதன் மூலம், அவர்களைப் பார்த்தலையும், அவ்வறுமையால் விளையும் விளைவுகளையும் நீக்கலாம் என எண்ணலாம்.ஆனால் அது கூடாத காரியம் என்பதே அறிவுடையார் கொள்கை; நாம் பிறர்க்கென வெட்டுங் குழியில் நாம் விழவும் நேரிடும். நன்னிலையில் வாழ்ந்துவந்த பொருளுடையார் பலர், வறுமைக் குழியில் வீழ்வதை நாள்தோறும் காண்கின்றோம். அம்முறையே அடுத்து அக்குழியில் விழும் முறை நமக்கே நேரிடவும் கூடும். நேரிடாது என யாங்ஙனம் கூறமுடியும்; ஆகவே, மக்கள் தங்களைக் காப்பாற்றிக் கொள்ள விரும்புவாராயின், அவர்கள் முதன்முதலில் நாட்டிலுள்ள வறுமையைப் போக்க முயலுதல் வேண்டும்; அவ்வாறின்றி, நாட்டில் வறுமை வேரூன்றி நிற்க, தாம் மட்டில் அஃதுற்றாரைக் காணாமலும், அவ்வறுமையான் உளவாம் பல விளைவுகளான் பற்றப்படாமலும் வாழ முற்படுவரானால், அச்செயல் கூடாத செய்கையாகவே முடியுமென்பது உறுதி.

ஆகவே, நாட்டில் உள்ள பொருளுடையார் ஒவ்வொருவரும் தம்மைச் சுற்றியுள்ள வறுமையைப் போக்குதற் பொருட்டுத் தம்முடைய பொருளின் மிக்க பகுதியை ஒதுக்குதலைத், தம்முடைய முதற்பெருங் கடமையாகக் கொள்ளுதல் வேண்டும். தம்முடைய நாட்டில் யாரும் வறுமை காரணமாகப் பற்றுக்கோடிலராகவோ, இறக்கவோ கூடாது என்ற ஒருமுறை இங்கிலாந்து நாட்டில், எலிசபெத் அரசியார் காலத்திலிருந்து இருந்து வருகின்றது. அந்நாட்டில் வறுமையாளர் இருப்பரானால், அவர்களுக்கு உணவும், உடையும், உறையுளும் கொடுத்துப் பேணுதற்காகவேண்டி, ஒரு சிலரை அரசியலாரே நியமித்துள்ளார்கள். ஆனால் அத்தலைவர்கள் அவ்வறியோர்க்கு அத்தகைய உதவியைச் செய்யுங்கால், உள்ள நிறைவின்றிச் செய்யினும் செய்வர்; அவ்வறுமை யுற்றாரை வெறுத்து இழிவுபடுத்தவும் கூடும்; அவர்களை இழிவு தரத்தக்க, பயனற்ற பல வேலைகளைச் செய்யப் பணித்து, மறுப்பாராயின் சிறைக்கோட்டம் அனுப்பவும் கூடும். சுருங்கக் கூறின் அவ்வறுமையாளர், இத்தகையாரை அண்டி, பற்றுகோடடைந்து வாழ்வதினும், வறுமைக்குழியில் வீழ்ந்துழல்வதே சாலச் சிறந்தது என எண்ணக்கூடிய நிலையில் அவர்களை நடத்தவும்கூடும். இவ்வாறு வறுமையான் உளவாம் இழிதன்மைகளைப் போக்குதற் பொருட்டு மேற்கொண்ட இம்முறையான், இறுதியில் முன்னையினும் மிக்க இழிதன்மை நாட்டில் உளவாதலைக் கண்டே, நாட்டில் எக்காரணத்தைக் கொண்டும் வறுமை யென்பதே, இருத்தல் கூடாது என அறிவுடையார் பலரும் கூறுவாராயினர்.

நாள்தோறும் பொருள்கள், நம்மை யறியாமலே பங்கிடப்பட்டே வருகின்றன என்று முன்னரே கூறியுள்ளோம். அவ்வாறு பொருளை பங்கிடுங்கால், ஒவ்வொருவரும் கூடியவரை நேரியமுறையில் வாழ்வதற்கு, எவ்வளவு

பொருள் வேண்டுமோ, அவ்வளவு பொருளைப் பெறும் முறையில் கூறிடுதல் வேண்டும். யாரேனும் ஒருவர், தமக்கிட்ட வேலைப்பகுதியை, உரியகாலத்தில் செய்து முடிக்காமலோ, அன்றி முற்றிலுமே செய்யாமலோ விடுவரானால், அவரைக் கட்டாயப்படுத்தியோ, அன்றி வேறு முறையிலோ அவ்வேலையைச் செய்ய வற்புறுத்த லாமே ஒழிய, அதுகுறித்து அவருக்குரிய பொருளைக் கொடாமல் அவரை வறியராக்குதல் செய்யக் கூடாத செய்கையேயாகும்.

இந்நெறியே நோக்குங்கால், பொருளைக்கூறிடுகின்ற பற்பலமுறைகளும் பயனற்றனவாகக் கழிதலான், நாட்டில் உள்ள எல்லா மக்களும், ஒத்த அளவுள்ள பொருள்களைப் பெறுகின்ற முறையில் கூறிடுதலாகிய முறையே சாலச் சிறந்தது என்பது பெறப்பட்டது. அம்முறை மேற்கொண் டாலன்றி, நாட்டில், ஆடம்பர வாழ்க்கை நீங்கி, மிடியும், மடியும், குறைந்து, கொலையும், களவும் இன்றி, பயனற் றதும், பழுதுபட்டதுமாகிய பொருள் குறைந்து, மிக்க வுணவும், சிறந்த உறையுளும், சீரியபாது காப்பும். பிணியின்மையும், செல்வச் செருக்கும் உளவாம் என்பதே அறிவும் நெடுநாட் பயிற்சியும் உடைய பல்லோர் கொண்ட கொள்கையாம்.

—தமிழ்ப் பொழில் 1938-39 பக்கம் : 467 -476; 1939-40 பக்கம் : 183-186

— — —

# உறுப்பியலும் உள்ள நிலையும்

"மக்கள் தாமே ஆறறி வுயிரே" எனச் சிறப்பித்துக் கூறப்பட்ட மக்கள் அனைவரும், தங்கள் உருவங்களில் சில பல வேற்றுமை யுடையராகக் காணப்படுகின்றனர். அத்தகைய உறுவ வேறுபாடுகளைக் கொண்டு, அவர்தம் இயற்கைக் குணங்களை அறியலாம். இதை, நம் தமிழ்ப் பெரியார்கள் நன்கு ஆராய்ந்து, ரேகை சாத்திரம், அங்க சாத்திரம் எனப் பல நூல்களை எழுதி வைத்துள்ளனர்.* ஒருவன் முகமே, அவன் உள்ள நிலையையும் வெளியாக்கும் என்பதை "அடுத்தது காட்டும் பளிங்கு போல் நெஞ்சங் — கடுத்தது காட்டும் முகம்", "அகத்தின் அழகு முகத்தில் தெரியும்" என்ற கூற்றுக்களே வலியுறுத்தும். இனி, கை, விரல் முதலியவற்றின் நிலைகளைக் கொண்டும், ஒருவன் குணங்களை அறியலாம் என நம் நாட்டார் கூறுவது

---

* பொன்செய் கொல்லன்தன் சொல்கேட்டு, கோவலனைக் கொன்று வருமாறு பணித்த அரசன் பணியைமேற் கொண்டுவந்த ஊர்காப்பாளர், கோவலன் தன் மாசற்ற, முகப்பொலிவினையும், இலக்கண முறையே அமைந்த உறுப்பு நிலையினையும் நோக்கியவராய் பொற்கொல்லனைப் பார்த்து, "இலக்கண முறைமையின் இருந்தோனீங்கிவன், கொலைப்படு மகனலன்" என்று கூறிய கூற்றினாலும் இதனை அறியலாம். (சிலப். 16: 162—163)

போன்றே, மேனாட்டறிஞரும் கூறுவர். அன்னார் அது பற்றிக் கூறுவனவற்றுள், சிலவற்றினை ஈண்டுக்கூறுதும்.

பருமையும், அழுத்தமும், பலமும் உடைய கைகளை யுடையவன், வினைசெய்தற்கண் சோர்வடையாத ஊக்க. முடையனாயும், அங்ஙனமின்றி மெலிந்து அழுத்த-மற்ற கைகளையுடையான், ஊக்கங்குறைந்தவனாயும் தனக்கென வாழும் இயல்பினனாயும் இருப்பன்.

நீண்டு அகன்ற கைகள், விரிந்த நோக்கம் (Broad view), பொருள்களைக் கடிதிற் காண்டலும், மறவாமையு முடைய நுண்மாண் நுழைபுலம், வினைசெய்தற்கண் மனவெழுச்சி, பல பொருள் நல்லன எண்ணித் துணிதல், தொடங்கிய தொழிலை விரைந்து செய்தல் என, இவை யுடைமையினை வெளியாக்கும். மற்று நீண்டு குறுகிய கைகள், பல காரியங்களைத் தொடங்கி, சிலவற்றில் வெற்றி பெறும் இயல்பு, தனக்கென வாழ்தல் என, இவை யுடையமையினை வெளியாக்கும்.

இனி, நீண்ட விரலுடையார், ஆழ்ந்து எண்ணும் இயல்பினராவார். கணக்குப் பரிசோதகர், வழக்கறிஞர், மருத்துவர் முதலாயினார், இத்தகைய விரலுடையராய் இருப்பர். குறுகிய விரலுடையார், பொருள்களின்மேல் கண்ணோக்கமுடையராயும், நூற்பொருளைக் கடிதிற் கொண்டு, மறவாது, கற்றாங்கு நிற்பவராயும், காரியங் களைக் கடிதிற் செய்யும் இயல்பினராயும் இருப்பர். உயர்ந்தோர் எனப்படுவார், இத்தகைய விரலுடையாரே யாவர்.

நீண்ட கணுக்கள் பொருந்திய விரல்களையுடையார், காரியங்களில் விரைந்து செல்லாது, செல்லுதற்கு முன்னர், நன்கு ஆராய்ந்து, காலம் தாழ்ந்தே

தொடங்குவர்; எனினும், தொடங்கிய வினைகளில் வெற்றியே பெறுவர். ஆயினும், சிற்சில காலங்களில், அளவிறந்து எண்ணிப்பார்ப்பதனால், அவ்வினை கைவரப் பெறாதும்போம். சில விரல்கள் வழவழப்பாகவும், அடி தடித்து நுனி சிறுத்தும் இருக்கும். அத்தகைய விரலுடையார், இயற்கையறிவு மிகவும் உடையராய், ஒரு பொருளாராய்ச்சியின் முடிந்த முடிபினை, எளிதில் பற்றக் கூடியவராயும், தக்கதின்ன தகாதன இன்ன வென்றும், வெறுப்பன, விழைவன இன்ன என்றும், அறியும் ஆற்றலுடையவராயும் இருப்பர். அவர்கள் தொடக்கத்தே கூறும் பொருள், மிகத் தெளிவுடைய தாகவும், பொருட் செறிவுடையதாகவும் இருக்கும்.

விரல்கள் நீண்டு, மென்மைத்தன்மையுடையவாகவும், பருத்தும் இருப்பின், அது பொருள்களை, தருக்க முறையே ஆராயும் நெறிக்கண் விரைவுடைமையினைக் காட்டும். இத்தகைய விரலுடையார், உடனுக்குடன் தங்கள் ஆராய்ச்சி நெறிக்கண், ஆராய்ந்து பட்டபொருள், இயற்கையறிவின் பயனாக முதன் முதலிற் உண்டாய பொருள் (Calculative Intuititive Assessments) ஆகிய இரண்டனுள், கோடுதற்குரிய பொருள் எது என்பதைத் துணிய மாட்டாராய் அல்லற்படுவர்.

பொதுவாக, பருத்த அடிப்பாகம், இயற்கையறிவுடைமையினையே காட்டும். அஃது அதிகமாகப் பருத்திருக்கும் விரலுடையார், ஆராயும் அறிவுடையராயும்,பிறர்க்கென வாழாது, தனக்கென வாழும் இயல்புடையராயும், இவை வன்மைய, இவை மென்மைய என்றுணரும், மெய்யுணர்வு (பரிச உணர்வு) மிகவுடையராயும் இருப்பர்.

நீளமும், சிறுமையும், நீண்ட கணுக்களும் பொருந்திய விரல்களுடையார், வியக்கத்தக்க ஆராய்ச்சி நிறைந்த

அறிவும், பிறர்செய்கைகளில் கண்ணோக்கமும், பிறர்பால் ஐயங்கொளலும் உடையரராவர். அன்னார், "தேரான் தெளிவும், தெளிந்தான்கண் ஐயுறவும்—தீரா இடும்பை தரும்" என்பதற்கிணங்க இடுக்கண் அடைவர்.

இதுகாறும் விரல்களைப், பொதுவாக ஆராய்ந்தாம்; இனி அவைகளைத் தனித்தனி எடுத்தோதி ஆராய்வல்.

ஆள்காட்டும் விரல், தன்னளவில் மிக்கு, அஃதாவது நடுவிரலை யொப்ப வளர்ந்திருப்பின், அது வீரமும், அறிவும் இல்லாதிருப்பவும், அவையுடையான்போல நடந்துகொள்ளும் இயல்புடைமையினைக் காட்டும். இத்தகைய விரலுடையார், தங்களுக்குப் பலர் குற்றேவல் செய்ய விரும்புவதுடன், அத்தகைய குற்றிளையோர் பால், எஞ்ஞான்றும் சினந்து கொண்டேயிருப்பர். மற்று அவ்விரல் நடுவிரலின் குறைந்து இருப்பின், அது தன்னைத்தானே மதிக்கும் மதிப்புடைமையினைக் காட்டும்.

நடுவிரல், கனமுடையதாக இருப்பின், அஃது அதனை யுடையான், ஆழ்ந்து ஆலோசிக்கும் இயல்பு, கூரிய அறிவு என இவைகளையுடையான் என்பதை வெளிப்படுக்கும்.

சிறு விரலையடுத்த, மோதிர விரல், தன்னிலையின் மிக்கு, நடுவிரலிற்குத்தக வளர்ந்திருப்பின், அஃது எப் பொருட்கும் அஞ்சா முரட்டுத் தன்மையினை உணர்த்தும். அத்தகையார், வட்டாடும் தொழிலினை ஒழித்தல் வேண்டும். அங்ஙனமின்றி அது நடுவிரலைக் காட்டிலும் குறைந்து இருப்பின், அதனையுடையார், அழகிய ஓவியம் தீட்டும் ஆற்றலுடையராயும், புகழ், பொருள் விரும்பும், உள்ளமுடையராயும் இருப்பர்.

இயற்கை நிலையில் உள்ள சிறுவிரலுடையான், தந்திரமுடையனாயும், கூறும் பொருள் அரியவயினும், கேட்போர்க்கு எளிய முறையில், அப்பொருள் பசுமரத் தறைந்த ஆணிபோல் அவர்தம் உள்ளத்தில் பதியுமாறு கூறும் ஆற்றலுடையனாயும் இருப்பன். அது மிக நீண்டு இருப்பின், நூற்பயிற்சி மிகுதியினைக்காட்டும். மிகக் குறுகி இருப்பவரின் விரல், உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாது கபடமற்று, தங்கள் கொள்கைகளைக் கூறுவதும், அதன்படி நடப்பதும் ஆய இக்குணத்தை வெளியாக்கும்"

ஒழுங்காகவும், பலமாகவும் இருந்து, மேல் இணைப்பு பின் புறம் வளையாமல் இருக்கும் பெருவிரலுடையோர் பிடிவாத குணமுடையோர் ஆவர். இத்தகையார், சினந் துழி, எதையும் செய்வர். அடிக்கடி மறுப்புக்களில் தலை யிட்டு, எண்ணிப் பார்த்தலையும் விட்டு, தமக்கு நேர்ந்த இன்னல்களைப் போக்கமாட்டாராய் இருப்பதுடன், சிற் சில சமயங்களில் மிகநெருக்கடியான நிலைகளை அடைந்து தவிப்பதும் உண்டு.

மற்று, ஒழுங்காகவும், பலமாகவும் இருந்து சிறிது பின்புறமாக வளையும் விரலுடையார், பிடிவாத குணம் இலராய் இருப்பர். அது அதிகமாக வளையின், ஆராயும் இயல்பின்மையினைக் காட்டும். மேல் இணைப்பு மிகச் சிறியதாய் இருப்பின், அது இச்சாசக்தியின் மிகுதி யினைக் காட்டும்.

சிறுத்து நீண்டு, மெலிந்து, கூரியதாய் உள்ள விரல் களுடன், பின்புறம் வில்போல் வளையும் பெரு விர லுடையான், புனல் வழிப்படும் புணைபோல், மனம் சென்

றாங்குச் செல்பவனாயும், தடுமாறும் உள்ளத்தனாயும் இருப்பன்.

சென்ற நூற்றாண்டிறுதியில், இத்தாலிய நாட்டில் வதிந்த "லம்புரோஸோ" (Lumburoso) என்னும் பெரியார், குற்றவாளிகளென சிறைச்சாலையில் அடைபட்டவர்களை, அவர்களுடைய உறுப்பு நிலைகளைக்கொண்டு, அவர்கள் குற்றமுடையரா அல்லரா என்பதை ஆராயத் தொடங்கினார் என்பதும், ஈண்டு நோக்கற்பாலது.

தமிழ்ப்பொழில்—1938-39 பக்கம் 247-251

# திருக்குறள் கட்டுரைகள்

## நாடு

நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றே
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே.

—ஔவையார்.

அரசியல் நன்கு நடைபெறுவதற் கேதுவாய உறுப்புக்கள் ஆறனுள், முதலாவதாய அமைச்சுக்குப் பின்—வைத்து எண்ணப்படும் சிறப்பினது நாடாம். அந் நாட்டினைப்பற்றிக் கூறத் தொடங்கிய வள்ளுவப் பெருந்தகையார், முதலாவதாக அந் நாட்டில் "தள்ளா விளையுள்" இருத்தல் வேண்டும் எனக்கூறுகின்றார். ஒரு நாடு நாடாக இருக்கவேண்டுமாயின், அந்நாட்டில் உயிர்ப் பன்மைகள் வாழ்தல் வேண்டும். உயிர்ப்பன்மைகள் இன்றேல், நாடு இல்லையாம். தலைமகனைப் பிரிந்துறையும் தலைமகள், தன் தனிமை நிலைக்கு வருந்துவாள் "வாழ்வோர் போகிய பேரூர்ப் பாழ்காத்திருந்த தனிமகன் போன்றே" (நற். 153) எனக் கூறுமுகத்தான் குடிமக்கள் அற்ற ஊரைப்பாழூர் எனக் கூறுமாறு அறிக. "பதியெழு வறியாப் பழங்குடி கெழீஇய, பொதுவறு சிறப்பின் புகார்" (சிலப் 1: 15—16) எனவும், "பதியெழு

வறியாப் பழங்குடி கெழீஇ" (மலைபடு 479) எனவும் வருவன ஈண்டு நோக்கற்பாலனவாம். அத்தகைய உயிர்ப்பன்மைகள் வாழ்தல்வேண்டுமேல், அவ்வுயிர்களை வாழச் செய்வதாய உணவுப் பொருளும் வேண்டுமாம்: என்னை? "உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே உண்டி முதற்றே உணவின் பிண்டம்" என்பவாகலின் அவ்வுணவுப் பொருளும் குறைவின்றி நிறைந்திருந்தாலொழிய, உயிர்ப் பன்மைகள் தாம் வேண்டும் பொருளை வேண்டியாங்குப்பெற்று உண்ணுதல் இயலாதாகலின், அப் பொருள் நிறைந்தே இருத்தல் வேண்டும் என்பார். "விளையுள்" என வாளா கூறாது "தள்ளா விளையுள்" எனச் சிறப்பித்துக் கூறினார்.

அன்றியும், நாட்டிற்கு அணியெனக் கூறப்பெறும் இயல்பினவாய பெரும்பொருள் உடைமை, வரும் பொறை தாங்கல், அரச இறை இறுத்தல், பசி, பிணி, பகை, பல்குழு, உட்பகை, கொல் குறும்பு ஆய இவை,இன்மை முதலாயவற்றிற்கும் ஏதுவாய் நிற்பதுவும் அவ்வுணவுப் பொருளேயாதலின் நாட்டிறகு இன்றியமையாது வேண்டப்படுவனற்றுள் "தள்ளா விளையுளை" முற் கூறினார்.

இனி, அடுத்த நிலையாக வள்ளுவப் பெருந்தகையார், தக்கார் உண்மையினை அந்நாட்டிற்கு உறுப்பாகக் கூறுகின்றார். தக்காராவார் தகுதி உடையராவர்; தகுதியாவது உயர்வுடைப் பெருமக்கள்பால் கிடந்து மிளிர்வதாய நற்பண்புகளாம். ஆகவே, தக்காராவார், நற்குணங்கள் பலவற்றையும் குறைவறப் பெற்று நிற்கும் சான்றோராவார். சான்றோரைப் பெறாத நாடு, தள்ளா விளையுள் முதலாய பல வளங்களையும் பெற்று நிற்பினும், அவற்றைப் பெறாத நாடாகவே எண்ணப் படும். மக்கள் "தள்ளா விளையுள்" முதலாயினவற்

றைப் பெற விரும்புவது, நோயற்ற உடல் நலத்தைப் பெற்று வாழவேயாம். நாடு, தள்ளா விளையுளைப் பெற்றிருந்தும், சான்றோர்களைப் பெறாதாயின், அந்நாட்டில் உள்ளார், நோயற்ற வாழ்வைப் பெறாது நோயுற்ற தாழ்வையே பெற்று நிற்பர். என்னை? நாட்டில் சான்றோர் இலர் எனவே, சாலார் உளர் என்பது தெளிவாம். சான்றோர் குறைந்து சாலார் நிறைந்து நிற்கவும், நாட்டின் நடுவுநிலைமை கெடும் எனின், சான்றோரே இலராக, சாலாரே நிறைந்து நிற்பாயின், அந்நாட்டில் யாண்டும், எக்காலத்தும், அமைதியின் மையே தலை சிறந்து நிற்கும். அமைதியற்ற நாட்டில் வாழ்வாரும் அமைதியற்ற வாழ்க்கையினை மேற் கொள்ள வேண்டியவராய், அதன் காரணமாக நோயுற்ற உடலையும் பெற்று வாழ்வர்; என்னை? உள்ளக்கலக் கமே, உடல் நலக்குறைவிற்குக் காரணமாம் ஆதலின். யாண்டு பலவாகவும் நரையிலவாதற்குரிய காரணங் களை வினாவியோர்க்குப் **பிசிராந்தையார்**. அமைதியுற்ற வாழ்வில் வாழ்தற்கு ஏற்றனவாய, மனைத்தக்க மாண்பு டைய மனையாளையும், அறிவறிந்த மக்களையும், குறிப்பின் வழிநிற்கும் இளையாரையும், அல்லவை செய் யாது அரசாளும் அரசனையும், ஆன்றவிந்தடங்கிய சான்றோர் பலர் வாழும் நாட்டுக் குடியிருப்பினையும் தாம் பெற்றிருந்தமையே காரணமாம், எனக் கூறுவதும் காண்க.

அன்றியும், "நெல்லும் உயிர் அன்றே, நீரும் உயிர் அன்றே, மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்" என்ப வாகலின், உலகிற்கு உயிராவான் அரசன் என்பது தெளி வாம்; அவ்வரசன், எத்துணை நற்குண, நற்செயல்கள் உடையனாயினும், ஒரோவழி முக்குண வயத்தான் முறை மறந்து செய்யத்தகாதன செய்தலும் கூடும். அவ்வாறு

செய்யின், அரசற்கே அன்றி அந்நாட்டிற்கும் கெடுவன பலவாம்; ஆகலின் அச்செயலைத் தடுத்தல் இன்றியமையாததாகும். அவ்வாறு அரசனை, அச்செயல் செய்யாமல் இருக்கும் வண்ணம், இடிக்கும் துணையாய சொற்களைக் கூறி, நல்வழிப்படுத்துவார் சான்றோராவர். அத்தகைய சான்றோரைப்பெறாத, அரசனது ஆளுகையின் கீழ் உள்ள நாடு துன்பங்கள் பலவற்றிற்கு நிலைக்களமாம். "இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன், கெடுப்பார் இலானும் கெடும்" என்பது வள்ளுவர் வாக்கு.

இந்நெறி, நாட்டிற்கு வரும் துன்பங்களைப் போக்கி, நாட்டிற்கு நலம் பல புரிந்து, உலகியல் நன்கு நடைபெறச் செய்வார் சான்றோர் என்பது தெளிவாம். இது பற்றி யன்றே "சான்றவர் சான்றாண்மை, குன்றின் இருநிலந்தான் தாங்காது மன்னோ பொறை"(குறள், 990) எனவும், "பண்புடையார்ப் பட்டுண்டு உலகம், அது வின்றேல், மண்புக்கு மாய்வது மன்" (குறள், 996) எனவும் பிறாண்டும் கூறுவாராயினர்.

உலகியல் இடையறாது நன்கு நடைபெற்று வருவதற்குரிய காரணங்களை வினாவியோர்க்கு விடையாகக், கடலுள் மாய்ந்த **இளம்பெருவழுதியார்** பாடிய

> உண்டால் அம்ம இவ்வுலகம்; இந்திரர்
> அமிழ்தம் இயைவ தாயினும், இனிதெனத்
> தமியர் உண்டலும் இலரே; முனிவிலர்;
> துஞ்சலும் இலர் பிறர் அஞ்சுவது அஞ்சிப்;
> புகழ் எனின் உயிரும் கொடுக்குவர்; பழியெனின்
> உலகுடன் பெறினும் கொள்ளலர்; அயர்விலர்;
> அன்ன மாட்சி அனைய ராகித்
> தமக்கென முயலா நோன்தாள்
> பிறர்க்கென முயலுநர் உண்மையானே.
>
> —புறம் 182.

என்ற பாட்டு ஈண்டு நினைவுகூரற்பாலதாம்.

இனி, "நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்டு எல்லார்க்கும் பெய்யும் மழை" என்ற சொற்றொடரை நோக்கத் "தள்ளாவிளையுளு"க்கு முதற்பெருங் காரணமாய மழைக்குங் காரணமாய் விளங்குவார் அச் சான்றோரேயாவர் என்பதூஉம் பெறுதும்.

மூன்றாவதாகச், செல்வர் உடைமையினை நாட்டிற்கு உறுப்பாக வள்ளுவப் பெருந்தகையார் குறிப்பிடுகின்றார். அச்செல்வரை, ஈண்டு, "தாழ்விலாச் செல்வர்" எனச் சிறப்பித்துக் கூறுகின்றார். தன்னைப் பெற்றார் யாவருக்கும் தன்முழுப்பயனையும் அளிப்பதில் செல்வம் ஒரே நிலையையுடையதாகவும் அதனைத் "தாழ்வுடைச் செல்வம்" எனவும், "தாழ்விலாச் செல்வம்" எனவும் பிரித்துக்கூறல் ஏன் என ஆராய்தல் வேண்டும். தம்மை உடையார்க்கு இன்பம் அளிப்பதில் செல்வம் ஒத்த தன்மைத்து என்பது உறுதியாகவே, அச் செல்வத்திற்கு உயர்வு தாழ்வு கூறுவது, அச்செல்வத்தினை உடையார்தம் உயர்வு கருதியேயாம். இனி, அச் செல்வத்தினை உடையார்க்கு உயர்வு தாழ்வுகள் உளவாதற்குரிய காரணங்களையும் ஒரு சிறிது நோக்குவாம். "அல்லற்பட்டு ஆற்றாது அழுத கண்ணீர் அன்றே, செல்வத்தைத் தேய்க்கும் படை" (குறள், 555.) எனவும், "பழிமலைந் தெய்திய ஆக்கத்தின், சான்றோர் கழிநல் குரவே தலை" (குறள், 657) எனவும் கூறப்படுதலை நோக்க, பொருளீட்டுங்கால் அறவழிநின்று ஈட்டுதல் வேண்டும் என்பது தெளிவாம். அறவழியாவது அரசனாயின் "ஆறிலொன்றாகிய பொருள்தன்னையும் வறுமை நீங்கியவழிக் கொள்ளல் வேண்டின் அவ்வாறு கோடலும், இழத்தல் வேண்டின் இழத்தலும்", வணிகராயின், "கொள்வது மிகையும், கொடுப்பது குறையுமாகாமல் ஒப்ப நாடிச் செய்தலு"மாம், எனவே இந்நெறியே

பெற்ற செல்வம் "தாழ்விலாச் செல்வம்" எனவும், இந்நெறி பிறழப்பெற்ற செல்வம் "தாழ்வுடைச் செல்வம்" எனவும் பெயர்பெறும். இனி, பேரிடர்க்கிடையே செல்வத்தினை இயற்றியும், ஈட்டியும், காத்தும் நிற்பது அச் செல்வத்தால் ஐம்புல இன்பங்களையும் ஆரத் துய்த்தற்கு ஏதுவாய நுகர் பொருள்களைப் பெறுதற்கேயாம். அவ்வாறன்றி மிகப் பெரிய அளவாய செல்வத்தைப் பெற்றிருந்தும் அவற்றைத் தாம் இன்பம் துய்த்தற்காய வழிகளில் செலவிடாமல் இருப்பராயின் அக்காலை அச்செல்வம் "தாழ்வுடைச் செல்வம்" எனப் பெயர் பெறும். ஆதலின், அவ்வாறு இன்றிச் செல்வத்தாலாய முழுப்பயனும் எய்த வாழ்வார் 'தாழ்விலாச் செல்வ' ராவர். மேலும், "செல்வர்க்கழகு செழுங்கிளை தாங்குதல்" எனவும் "தக்கவன் ஒருவன் வாழத் தன் கிளை வாழ்ந்தது" எனவும் கூறுதற்கேற்பச் செல்வத்தினைப் பெற்றார், பொருளற்ற தம் சுற்றத்தினரைப் பேணுதல் செய்யவும் கடமைப்பட்டவராவர். ஆகவே, சுற்றத்திற்குப் பயன்பட வாழ்வாருடைய செல்வம் "தாழ்விலாச் செல்வம்" எனவும், அவ்வாறு பயன்பட வாழாதாரின் செல்வம், "தாழ்வுடைச் செல்வம்" எனவும் பெயர் பெறும். இனி, செல்வம் பெற்றார், தம் சுற்றத்தினைப் பேணுதலோடு நில்லாமல், தொடர்பிலராய பிற வறியோர்க்கும் அவர் வேண்டும் பொருளைத் ஈந்து வாழக் கடமைப்பட்டவ ராவர். என்னை? "ஈதல், இசைபட வாழ்தல் அதுவல்லது ஊதியம் இல்லை உயிர்க்கு" (குறள், 231.) என்ப ஆகலின். ஆகவே, பிறர்க்குப் பயன்பட வாழ்வார்தம் செல்வமே "தாழ்விலாச் செல்வம்" எனப் பெயர் பெறும் என்பது தெளிவாம். "ஏதம் பெருஞ் செல்வம் தான் துவ்வான், தக்கார்க்கொன்று ஈதல் இயல்பு இலாதான்" (குறள், 1006) என்ற குறளின் மேலே கூறிய பொருள் தொகுத்துக் கூறப்பட்டிருத்தல் காண்க.

ஆகவே, அறவழி நின்று பொருளீட்டித், தான் துய்த்துச், சுற்றத்தினைப் பேணிப், பிறர்க்கும் ஈந்து வாழ்வார்பால் அடைந்த செல்வம் "தாழ்விலாச் செல்வம்" எனவும், இம்முறை பிறழ வாழ்வார்பால் அடைந்த செல்வம் "தாழ்வுடைச் செல்வம்" எனவும் பெயர் பெறும் என்பது தெளிவாம். "பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம், நன்பால் கலந்தீமையால் திரிந்தற்று" (குறள், 1000) என்பது வள்ளுவர் கூற்று.

வள்ளுவப் பெருந்தகையார் ஈண்டு, "தாழ்விலாச் செல்வர்" எனக் கூறவே, அந்நாட்டில் வாழும் செல்வர், அறவழியே பொருள் ஈட்டும் இயல்புடையார் என்பதும், பெற்ற செல்வத்தால் பேரின்பம் பெறும் இயல்புடையார் என்பதும், சுற்றத்தினைப் பேணியும், வறியோர்க் கீந்தும் வாழும் இயல்புடையார் என்பதும் பெற்றாம்.

சான்றோர் பலர் உண்மையால், மிக்க பெயல், பெயல் இன்மை முதலாய கேடு இலவாகவே மிக்குவிளை யும் விளைவும், தாழ்வினச் செல்வர் உளராகவே, பெரும் பொருளும் பெற்று இயல்வதோடு,பெரும் பொருளும் மிகு வளமும் உடையதாகவே, பிற நாடுகளிலிருந்து வருவார் தமக்கு வாழ்வளித்து, அவ்வாறு அளித்தது காரணமாகத் தன் கடமையாகிய இறைவர்க்கு இறையளிப்பதில் ஒரு சிறிதும்பிறழாது நின்று,நெடுங்கடல்தன் நீர்மையும் நன்கு, நடைபெறுதற் கேதுவாய மழை நீரையும், பெருமழை உடைமையால் என்றும் நீர் அறாப் பேராறுகளையும், மழை வளம் கரத்தலின், ஆற்றுப் பெருக்கற்று அடிசுடும் காலங்களிலும் ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும் நீர் நிலைகளையும், உலகிடை உளவாம் விளைபொருள் அனைத்தும் தன் பால் விளைவதற்கேற்ற வெப்ப தட்ப நிலைகளைத் தருதற்குத் தகுதியாக உயர்ந்து விளங்கும்

பெருமலைகளையும், இத்தகைய சிறப்புடைமை கண்டு இதனைப் பெற விழைந்து பிறநாட்டரசர் தன் மீது படையெடுத்து வருவாராயின், அப்பகை வேந்தரை வென்று தன்னைக் காக்கும் ஆற்றல் வாய்ந்த அரசனையும், அவ்வரசன் நின்று வினை செய்தற்காம் பேரரண் பலவற்றையும் பெற்று விளங்குவதோடு, கோலின் செம்மையால் பசி இன்றியும், குடையின் தண்மையால் பிணி இன்றியும், வேலின் வெம்மையால் பகையின்றியும், சான்றோர் உண்மையால் பலவேறுபட்ட அரசியல் குழுக்களும், உட்பகையும், வேந்தலைக்கும் கொல் குறும்பும் இன்றியும் இயல்வதே வள்ளுவர் கண்ட நாடாம்.

—செந்தமிழ்ச் செல்வி 1941-42 பக்கம் ; 185-190



# அகமும் புறமும்

உலக வாழ்க்கை இரவும் பகலும் போன்று இன்பமும் துன்பமும், நன்மையும் தீமையும், செய்யத்தக்க செயல் களும் செய்யத் தகாதனவாய செயல்களும் நிறையப் பெற்றது என்பதை யாவரும் ஒப்புக்கொள்ளுவர். அத்தகைய உலக வாழ்க்கையை மேற்கொண்ட மக்கள் பலரும், தாம் தாம் பெற்று நிற்கும் அறிவுநிலைக் கேற்ப, காட்சிவகையானும், கருத்து வகையானும் ஆய்ந்து ஆய்ந்து, இன்பமாவன இவை, துன்பமாவன இவை என வும், நன்மையாவன இவை, தீமையாவன இவை எனவும், தக்கன இன்ன, தகாதன இன்ன எனவும் வகுத்து வகுத்துக் கூறிச் செல்வராயினர். இவ்வாறு படைப்புக் காலம் தொடங்கி வாழ்ந்து வந்த மக்கள், தம் வாழ்க்கையில் கண்ட முடிபுகளைத் தம் பின்னுள்ளோர் எளிதில் உணர்ந்து உய்தற் பொருட்டு, தம் முன்னுள்ளோர் கண்ட முடிபுகளுடன் கூட்டித் தொகுத்துக் கூறிச் செல்வா ராயினர். இவ்வாறு கூறப்பட்ட நெறியே அறநெறியாம். சுருங்கக்கூறின், (முன்னோர் விதித்தனவற்றைச் செய்த லும், விலக்கியனவற்றைச் செய்யாமல் ஒழிதலும் ஆய இவ்விரண்டே அறநெறியாம்.)

இவ்வறநெறி கடைப்பிடித்து வாழ்வான் துன்பத்தின் நீங்கிய இன்பத்தினையும், தீமையின் நீங்கிய நன்மை யினையும் பெற்று வாழ்பவனாகின்றான். அவ்வாறு

பெற்ற இன்பத்தினை அவன் என்றும் ஒருநிலைத்ததாகப் பெற விரும்புதலும் இயல்பே. அவ்வறநெறி வாழ்வதாற் பெற்ற இன்பத்தினைச் சிறிது மிகைப்படுத்தித் தருவது; அவ்வறநெறியே ஈட்டிய பொருளாகும். இவ்வாறு அற நெறி நின்று பெற்ற இன்பத்தினைப் பரந்த அளவில் தருவது பொருள் எனக் கண்டான், அப்பொருளினை முன்னோர் கூறிய அறநெறியே நின்று பெற்று வாழ்கின்றான். இவ்வாறு அறநெறி நின்றும், பொருள் ஈட்டியும் பெற்ற இன்பமும் என்றும் ஒரு நிலையில் இலதாய் நாள்தோறும் குறைவுறுவதைக் காணும் அவன், குறைவின்றி நிறைந்த ஓர் இன்பத்தினைப் பெற முயற்சித்து இறுதியில் அவ்வின்பத்தையும் பெற்று நிற்பன். அவ்வின்பத்தையே வீட்டின்பம் என்று நூல்கள் கூறுகின்றன. இந்நெறி அறத்தால் பொருளும், பொருளால் இன்பமும் இன்பத்தால் வீடும் பெற விழைதலே மக்கள் தம் மனத்தின் இயல்பாம். இவ்வியல்பினின்றும் வேறுபடுவார் மக்கள் எனும் தகுதிப்பாட்டிற்கு உரியரல்லர். இவ்வறம், பொருள், இன்பம், வீடு ஆய இந் நாற் பொருளையே, நம் தமிழ் நாட்டினர், அகம் புறம் என இரண்டனுள் அடக்கிச் செல்வாராயினர். அகமாவது மக்கள், என்றும் தம் உள்ளம் குறைவின்றி நிறைந்த இன்பக் கேணியில் திளைத்திருக்க வாழும் வாழ்க்கையாம். புறமாவது அவ்வுள்ளம் அவ்வின்பக்கேணியில் படிந்து இருத்தற்கு உறுதுணையாய பொருளினை அற வழியே ஈட்டுதற்கு மேற்கொள்ளும் முயற்சி வகைகளாம்.

இனி, மக்கள், அறம், புறம் ஆய இரண்டையும் ஒப்பக் கருதாது, புறத்தை மறந்து அகம் ஒன்றையே பற்றியோ அன்றி, அகத்தை மறந்து புறம் ஒன்றையே பற்றியோ வாழ்வாராயின், அவர்கள் வாழ்க்கை பயனுடைய வாழ்க்கை யாகாது. மக்கள் அகத்தையும், புறத்தையும் ஒப்பக் கருதிப் பேணிவந்த பண்டைக்

காலத்தே அவர்தம் வாழ்க்கை செம்மையுற்றிருந்தது. இடைக்காலத்தே மக்கள் அகம் ஒன்றையே கருதிப் புறத்தை மறந்தார்கள். ஆகவே அவர்கள் வாழ்க்கை நிலை கெடுவதாயிற்று. அவ்வாறு கெட்டவருள், சச்சந்தனும், சேரன்கணைக்கால் இரும்பொறையும் சேர்ந்தோராவர். முன்னோன், தன் மனைவிபால் பெற லாகும் காம இன்பம் ஒன்றையே பெரிதாக எண்ணிப் புற நிகழ்ச்சிகளை அறவே கைவிட்டு, அரச உரிமையையும் அமைச்சன் கட்டியங்காரன்பால்ஒப்படைத்து வாழ்ந்ததி னால், அரசை இழந்து, இல்லாளை இழந்து, இறுதியில் உயிரையும் இழந்தான். பின்னோான் ஆயுந்தொறும் ஆயுந் தோறும் இன்பம் பயப்பதாய நூல்களை ஆராய்வதன் கண்ணேயே தனது முழுக்கருத்தையும் செலுத்தி, தனக் குரிய புற ஒழுக்கமாய நாடு காவலை நாடாது ஒழியவே, அவன் சோழன் செங்கணானால் சிறை செய்யப்பெற்று, சிறையிலேயே உண்ணவும் நீர் இன்றி, உயிரையும் இழந் தான்.

இவ்வாறு இடைக்காலத்தே மக்கள், அகம், புறம் ஆய இரண்டினையும் ஒப்பக் கருதாது, அகம் ஒன்றி னையே பற்றி வாழ்க்கையின் முழுப்பயனையும் எய்தாது கெட்டது போன்றே, இக்காலை, மேனாட்டினர், அகந்தை அறவே மறந்து புறத்திலேயே தம் நாட்டத் தைச் செலுத்திக் கெட்டொழிவதைக் காணும் நாம், அகம், புறம், ஆய இவற்றின் ஒன்றிடத்தே மட்டில் உளத்தைச் செலுத்தாது, நம் பண்டை முன்னோர் போன்று அகத்தையும் புறத்தையும் ஒப்பக் கருதி வாழ்ந்து உயர்நிலை பெறுவோமாக.

இனி, பண்டையோர் அகத்தையும், புறத்தையும் ஒப்பக் கருதி வாழ்ந்த உயர்வுடையோர் என்பதற்கு ஒரு சில சான்றுகளைக் காட்டி இக்கட்டுரையினை முடிக்கின்

றோம்: ஒரு வினையைச் செய்து முடித்தல் வேண்டும் எனத் தொடங்குவான் ஒருவன் அதை இடையில் மடங்காது செய்துமுடிக்க விரும்புவானாயின், அவ்வினையைத் தொடங்குவதற்குமுன், அவனால் எண்ணித் துணியப்பட வேண்டுவன பலவாம். முதற்கண் தான் செய்யத் தொடங்கிய வினை பழியொடு படராப் பண்புடைய வினைதானா என்று நோக்குதல் வேண்டும். பின்னர் அவ்வினையைச் செய்யுழி உளவாம் அழிவுப் பொருளின் அளவினையும், அவ் வினை முட்டின்றி முடிந்தால் உளவாம் ஆக்கப் பொருளின் அவாவினையும் சீர்தூக்கிப் பார்த்து, அழிவுப் பொருளினும், ஆக்கப் பொருள் மிக்கிருப்பின் அவ்வினையைச் செய்யத் துணிதல் வேண்டும். பிறகு, அவ்வினையினது வலியையும், "நல்ல காரியத்திற்கு நானூறு இடையூறு" என்பவாகலின் அவ் வினையைச் செய்ய ஒட்டாமல் தடை செய்வார்தம் வலியையும் ஒருபால் நிறுத்தி, அவ்வினையைச் செய்யும் தன் வலியையும், தனக்குத் துணையாவார்தம் வலியையையும் வேறு ஒருபால் நிறுத்தி ஒப்பு நோக்கி, முன்னிரண்டு வலியைக் காட்டிலும், பின் இரண்டு வலி மிக்கிருப்பின் அவ்வினையைச் செய்யத் தொடங்குதல் வேண்டும். தொடங்குங்கால், அவ்வினை முட்டு இன்றி முடிதற்காம் காலத்தையும் இடத்தையும் தேர்ந்து கொண்டு, அஞ்சாமை, ஊக்கம் முதலிய குணங்களுடன் செய்யத் தொடங்கி, இடையே இடுக்கண்கள் பல அடுக்கிவரினும் அவை கண்டு அஞ்சாது, மெய்வருத்தம் பாராது, பசி நோக்காது, கண் துயிலாது, எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளாது, செவ்வி அருமையும் பாராது, அவமதிப்பும் கொள்ளாது, கருமமே கண்ணாய் இருந்து அவ்வினையைச் செய்து முடித்தல் வேண்டும். இவ்வாறு பேரிடர்ப்பாட்டினுக் கிடையே அவ் வினையைச் செய்து முடித்தான், அவ் வினையாலாம் பயனைப் பெறுங்கால்,

அவன் உள்ளம் கொள்ளும் இன்பத்திற்கு எல்லையும் கூற முடியுமா? இவ்வாறு புறத்தே தொழிலாற்றிப் பெற்ற இவ்வின்பத்தினை ஒரு புலவன் "வினைமுடித்தன்ன இனியோள்" (நற்றிணை-3) என அக இன்பமாகிய பெண் இன்பத்திற்கு ஒப்பிட்டுக் கூறுவானாயின், அக்கால மக்கள் உள்ளம், அக இன்பத்தையும், புற இன்பத்தையும் ஒப்பக் கருதி வந்தன என்பது தெள்ளிதிற் புலனாம் அன்றே?

மேலும், "ஒரு காலத்து ஒரு பொருளான் ஐம்புலனும் நுகர்தற் சிறப்புடைத்தாய இன்பம்" எனவும், "சுவை பல என்று கூறுவார் கூறுக, யாம் கூறுவது இன்பச்சுவை ஒன்றனையுமே" எனவும் பாராட்டிப் பேசப்பெறும் இன்பத்தை அளிப்பாராகிய பெண்களை, புற இன்பம் பெறும் எண்ணத்துடன் வினையாற்றுவார் அவ்வினைக்கிடையே நினைத்தலும் கூடாது என்பர், "கிழவி நிலையே வினையிடத்துரையார்" என்று கூறி, அவ் வினையை முற்றுப்பெற முடித்து அவ்வினையாலாம் முழுப்பயனையும் நுகருங்கால், பெண் இன்பம் தம்மையறியாதே தம் மனத்திடைத் தோன்றி நிற்கும் என்பார் "வென்றிக் காலத்து விளங்கித் தோன்றும்" என்றும் கூறிய ஆசிரியர் தொல்காப்பியனார் அவர்களின் சொல்லே பண்டையோர் அக இன்பத்தையும், புற இன்பத்தையும் ஒப்புக் கருதிய உயர்பேராளர் ஆவர் என்பதைக் குன்றிடை விளக்கென நின்று காட்டுகின்றது. மேலும், சான்று பல காட்டிச் செல்வேமாயின் கட்டுரை விரியுமென்றஞ்சி இம்மட்டில் முடிக்கின்றோம்.

செந்தமிழ்ச் செல்வி 1942-43
தொகுதி: 20: பக்கம் : 167-170

# பாலை

உலகிடை வாழும் மக்கள் பலரும் உயர்நிலை எய்தப் பெரிதும் முயன்று ஆங்காங்கே வல்லரசுகளின் மாநாடுகள், அரசியல் மாநாடுகள், அறிவியல் மாநாடுகள் போன்ற புதுமை போற்றும் மாநாடுகள் பலப்பல கூட்டும் இக் காலை நாமும் பழமை பேணும் மாநாடு ஒன்றைக் கூட்டி யுள்ளோம். "மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள் சொல்வதிலோர் மகிமை யில்லை" எனக் கூறிச் சிலர் எள்ளி நகையாடலும் செய்வர் ஆயினும், உயர்நிலை எய்த விரும்பும் ஒவ்வொருவரும், தம்மைச் சுற்றியுள் ளார் தம் வாழ்க்கை நிலையை உற்று நோக்குவதுடன், தந்நாட்டின் இறந்தகால மக்களின் வாழ்க்கை நிலை யினையும் உற்று நோக்குதல் வேண்டும் என்பதை மறத்தல் கூடாது. இக்கால வாழ்க்கையுடன் இறந்தகால வாழ்க் கையினை ஒப்பிட்டு நோக்கி, இக்கால வாழ்க்கையினும் இறந்தகால வாழ்க்கை இழிவுடைத்தாயின் அதைத் தள்ளுதலும், அவ்வாறன்றி அது சீரும் செம்மையும் வாய்ந்து ஈடும் எடுப்பும் இன்றி இறப்பச் சிறந்ததாயின் அதைக் கொள்ளுதலும் செய்தல் வேண்டும். முன்னோர் "பழையன கழிதலும், புதியன புகுதலும் வழுவல" என்று கூறினாரேயன்றி, 'பழையன கழிந்தே புதியன புகுதல் வேண்டும்' என்று கூறினார் அல்லர்.

இவ்வாறு இக்கால வாழ்க்கையோடு இறந்தகால வாழ்க்கையை ஒப்பிட்டு நோக்கி இக்கால வாழ்க்கை

யினும் இறந்தகால வாழ்க்கை சிறந்திருப்பதைக் காண்பான், முன்னோர் தோற்றிய நன்னெறிகள் யாவை என உணர்ந்து, அந்நெறி நின்று உயர்நிலை எய்த முயற்சிப்பன். இக்காலை, உலகிடை வாழ்ந்து உயர்நிலை எய்தித் தம் புகழ் நிறீஇச் சென்ற சான்றோர் பலருடைய உருவ ஓவியங்களையும் உருவச் சிலைகளையும் ஆங்காங்கே நாட்டப்பெறும் விழாக்கள் நடப்பதைக் காண்கின்றோம். அவ்வாறு அவ் விழாக்கள் நடப்பது அவர்க்குச் சிறப்பும் பூசனையும் செய்தற் பொருட்டன்று; அவர்கள், புலவர் பாடும் புகழ்நிலை எய்த ஆற்றிய நற்செயல்கள் யாவை? அவர்தம் வாழ்க்கை சென்ற நன்னெறி யாது? என்பனவற்றைக் கண்டு, தாமும் அச்செயல் புரிந்தும், அந் நெறி நின்றும் அவ்வுயர்நிலை அடைய வழி கோலுவதற்கேயாம். மேனாட்டுப் புலவர் ஒருவர், "சான்றோர் தம் வாழ்க்கை நிலை,நாமும் நம்முடைய வாழ்க்கை நிலையை இறப்ப உயர்ந்ததாகச் செய்து கொள்ளுதல் கூடும் என்பதை நினைப்பூட்டுகின்றது" எனவும், "வாழ்க்கையில் வழியற்றுக் கலங்கும் மக்களை அது நல்வழியிற் செலுத்தும் இயல்புடையது" எனவுங் கூறுவர்.

இதனால், பழம்பெரும் மக்கள் தம் வாழ்க்கை நெறியின் இயல்பினைக் காட்டும் படக்காட்சி போன்று விளங்கும் பண்டைய இலக்கியங்களை ஆராய்தலும் குற்றம் இன்று என அறிகின்றோம். நிற்க,

---

1 Lives of great men all remind us
We can make our lives sublime;
And departing, leave behind us
Foot prints on the sands of time;
Foot prints, that perhaps another
Sailing o'er life's solemn main
A forlorn and shipwrecked brother
Seeing shall take heart again. —H. W. Longfellow.

மக்கள் பெறவேண்டிய பேறுகள் பலவற்றுள்ளும் சிறந்தன அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்கே என்றும், அவற்றுள் வீடு என்பது சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்து ஆகலின் நூல்களால் கூறப் படுவன ஏனைய மூன்றேயாம் என்றுங் கூறுவர். இம் முப்பொருள்களையும் அகம், புறம் என்ற இரண்டனுள் அடக்கினர் நம் முன்னோர். அவர்கள் அகத்தே இன்பம் ஒன்றினையும் புறத்தே ஏனை இரண்டினையும் அடக்கிச் செல்லுதலையும், அகப்பொருள் பற்றிக் கூறும் நூல்கள் மிகப் பலவாய், புறப்பொருள் பற்றிக் கூறும் நூல்கள் சிலவாய் இருத்தலையும் நோக்க, முன்னோர் அரசியல் அமைதியும் வாழ்க்கை அமைதியும் பெற்று வாழ்ந்த பெரும்பேறுடையராவர் என்பது புலனாம்; என்னை, அவ்விரண்டும் செம்மையுற்ற காலத்தே தான் மக்கள் இன்பநிலைபற்றி எண்ணுதல் கூடும். ஆகலின், பிசிராந்தையார், யாண்டு பலவாகவும் நரையிலவா தற்கு, மனைத்தக்க மாண்புடைய மனையாளையும் அறிவறிந்த மக்களையும், குறிப்பறிந்து பணியாற்றும் இளையரையும், அல்லன புரியாது ஆட்சி புரியும் அரச னையும், ஆன்று அவிந்து அடங்கிய ஆன்றோர் பலர் வாழும் ஊரினையும் பெற்றிருந்தமையே காரணங்களாம் என்று கூறுவதே போதிய சான்றாதல் அறிக.

இனி, அகமாவது, உருவானும் நலத்தானும் ஒத்த தலைவனும் தலைவியும் அன்பாற் கூடித் தமர் அறியா மல் களவில் ஒழுகிப், பின்னர்த் தமர் அறிய மணம் புரிந்து இல்லறம் என்னும் நல்லறமாற்றிக் "காமம் சான்ற கடைக்கோட்காலை, ஏமம் சான்ற மக்களொடு துவன்றி, அறம்புரி சுற்றமொடு சிறந்தது பயிற்றல்" ஆய ஒழுக்க நிகழ்ச்சிகள் பலவற்றையும் கூறலேயாம்,

இவ்வாறு இன்ப வாழ்க்கை மேற்கொண்ட தலை மக்கள் கூடுதலும், இடையிடையே கல்வி பொருள்

காவல் முதலியன கருதித் தலைமகன் பிரிதலும், பிரிந்த வழிப் பிரிவினால் துன்பம் உளவாகவும் தலைவன் குறித்த காலம் வரும்வரை தலைவி ஆற்றியிருத்தலும், அவ்வாறு ஆற்றியிராது வாய்விட்டுப் புலம்பலும், தலைவன் பரத்தையிற் பிரிந்தான் எனக் கொண்டு அவனொடு புலத்தலும் ஆய நிகழ்ச்சிகள், அவர்கள் வாழ்க்கையிடையே நிகழ்வனவாகும். அவற்றுள், கூடிய தலைமக்கள் பிரிந்து செல்லும் நிகழ்ச்சியே பாலை என்னும் தலைப்பின்கீழ் ஈண்டுப் பேசப்படும்.

**தொன்மையும் செம்மையும் வாய்ந்த உலக மொழிகள் சிலவற்றுள் ஒன்றாய் உயர் தனிச் செம்மொழி எனப் போற்றப் பெறும், தமிழ்மொழிக்கண்**, சங்கம் மருவிய நூல்களாகிய **எட்டுத்தொகை** நூல்களுள், முதலில் வைத்து எண்ணப்பெறும் சிறப்பு வாய்ந்த **நற்றிணை** என்னும் நூல் பற்றிய மாநாடு ஈண்டுக் கூட்டப்பட்டுள்ளது: ஆகலின், யானும் பாலைப் பொருள்பற்றி அந் நூலிற் கூறுவனவற்றையே கொண்டு பேசத் தொடங்குகின்றேன்.

இற்செறிக்கப்பட்ட தலைவி, தலைவனைக் கூடப் பெறாமையால் உடல் மெலிவது கண்டு நோய் நாடி, நோய் முதல் நாடி, அது தீர்க்கும் வாய் நாடி, வாய்ப்பச் செய்யாது இந்நோய் அணங்கால் நேர்ந்தது எனப் பிறழக் கொண்டு வெறியாட்டயர்தல் முதலாயின செய்யத் தொடங்குகின்றாள் தாய். வெறியயர்ந்தும் நோய் நீங்காதாயின், களவொழுக்கம் வெளிப்பட்டு அலர் எழுவதற்கு ஏதுவாம் எனவும், நோய் நீங்கிற்றாயின் நோய்தீர் மருந்தும் உண்டு என அறிந்து தலைமகன் வரையாதே வந்தொழுகுவன் எனவும், அஞ்சுகின்றாள் தலைவி. இந் நிலையில் தோழி தலைவியின் நிலைகண்டு, அவள் உயிர் நிற்றல் வேண்டுமாயின் தலைவனோடு

அவனூர் சேரலே செயற்பாலது என அறிந்து, தலைவன் பால் சென்று, தலைவியை இரவிடைக் கொண்டுதலைக் கழியுமாறு கூறுவாள், "தலைவ! பொருள்பெறு நசையால் செல்லுகின்ற நீர், இவளொடும் செல்வீராயின், அது நுமக்கும், இவட்கும் நன்மை தருவதொன்றாம்; அங்ஙனமின்றி, மலர் போன்ற கண்களில் நீர் வடிய, அன்பற்றவராய் இவளைப் பிரிந்து செல்வீராயின், கார் காலத்து மாலைப் போழ்தில் இவள் படும் துன்பம் என்னாலே தாங்கப்படும் தன்மையை உடையது அன்று" (நற்றிணை, 37) என்கின்றனள். அது கேட்ட தலைவன், "தோழி! மிக்க புகழ் பொருந்திய நின் தந்தையினுடைய நெடிய மாளிகையின் கண், பெற்ற தாயோடு பிரியாது வைகும் மிக இளையளாகிய நின் தலைவி, 'மனையிடத்து உறைகின்ற சிவந்த காலையுடைய புறாவின் பேட்டோடு ஆண்புறா கூடி மகிழா நிற்பதை நோக்கித், தனித்திருத்தல் ஆற்றேனாய் வருந்துவேன் என்கின்றாள்' என்று கூறுகின்றனை; யான் கூறுவதைக் கேள்; இத்தி மரத்தின் விழுது, வைகறைப் போதிலே மேல் காற்று வீசுந்தோறும் நிலத்திலே படாது ஊசலாடிக் கீழே துயிலும் பிடியானைமீது புரளா நிற்கும் சுரத்தின் கண்ணே செல்லுதல் அவளால் இயலுவதன்று" என்று கூறி முதலில் மறுப்பான், மறுவலும் அவள் வற்புறுத்துவது கண்டு உடன்படுகின்றான்; (நற். 162)

இருள் நீங்கும் விடியற்காலம்; ஊர்களில் மகளிர் தயிர் கடையும் ஒலி கேட்கின்றது; தலைவி மெல்ல எழுந்து, தன் உருவினை யாரும் அறியாவண்ணம் மாற்றிக் கொள்ளுகின்றாள். தன் காலில் அணிந்துள்ள சிலம்பினைக் கழற்றி அதை அன்றுவரை தான் ஆடிய பந்துடன் ஓர் இடத்தே வைத்துச் சில அடி மீளுகின்றாள். எண்ணம் மீண்டும் அவ்விரண்டன்பால் செல்கிறது;

அவற்றின் அருகே செல்கின்றாள்; தன் உடன் ஆடும் ஆயத்தாரை நினைக்கின்றாள்; "அந்தோ! என் உயிர் அனைய தோழியர் இவற்றைக் காணுந்தொறும் என்னை நினைந்து வருந்துவரே! அவர்கள் நிலை மிகவும் வருந்தத் தக்கதுகாண்!" எனக் கூறிப் பிரிய மனமின்றி நிற்கின்றாள். இந்நிகழ்ச்சியைத் தலைவி அறியாமல் கண்டு நிற்கின்றாள் தோழி; விரைந்து தலைவனிடம் செல்கின்றாள்; சென்று "தலைவ! எம் தலைவியின் நிலை இத்தன்மைத்து; ஆதலின் கொண்டுதலைக்கழிதல் ஏற்றதன்று; விரைந்து வரைந்துகோடலே நலம் பயப்பதாம்" என்று கூறுகின்றாள்;

"விளம்பழம் கமழும் கமஞ்சூல் குழிசிப்
பாசந் தின்ற தேய்கால் மத்தம்
நெய்தெரி யியக்கம் வெளிமுதல் முழங்கும்
வைகுபுலர் விடியல் மெய்கரந்து தன்கால்
அரியமை சிலம்பு கழீஇப் பன்மாண்
வரிபுனை பந்தொடு வைஇய செல்வோள்,
'இவைகாண் தோறும் நோவர் மாதோ
அளியரோ அளியர்என் ஆயத் தோ'ரென
நும்மொடு வரவுதான் அயரவும்
தன்வரைத் தன்றியும் கலுழ்ந்தன கண்ணே. (நற். 62)

பன்னாள் கழிகின்றன; தலைவனும் வரைந்து கொள்ள முயற்சிக்கின்றான் இல்லை; தமரும் தலைவியின் துயரைப் போக்க முயலுகின்றார் இல்லை; இந்நிலையில், தலைவி உள்ளமும் தலைவனுடன் செல்லுதற்கேற்ற நிலையில் சிறிது தாழ்ப்படைந்து நிற்கின்றது. இவற்றை யெல்லாம் கண்ட தோழி ஒருநாள் வைகறைப்போதில் தலைவியைத் தலைவன்பால் கொண்டு சேர்த்துக் கையடுத்தல் செய்வாள், "தலைவ! இயற்கைப் புணர்ச்சிக் காலத்துப் பிரியேன், பிரியின் தரியேன்" என்று கூறிய நின்

பிழையா நன்மொழியைத் தேறியே இன்று, 'தன்னை ஈன்ற தாய் தந்தையரையும், அறிவும் ஒழுக்கமும் கற்பித்து வளர்த்த செவிலியையும், கூடி வளர்ந்த என்னையும், உடன் விளையாடும் ஆயத்தாரையும், மலையொத்த அடுக்கிய நிலை அமைந்த நெடிய நெற் கூட்டில் நிரம்பக் கொட்டிய நெல்லை உடைய தன் தாய் வீட்டையும் மதியாளாய்ப் பிரிந்து நின்னுடன் வருதற்கு ஒருப் பட்டுள்ளாள். ஆதலின், நின்னை அன்றி வேறு துணை யில்லா இவள், அண்ணாந்து உயர்ந்த அழகிய கொங்கை கள் தளரவும், பொன்போலும் மேனியில், கருமணி போலத் தாழ்ந்த நீண்ட கூந்தல் நரைக்கவும் முதுமை எய்துவாளாயினும், இவளைக் கைவிடாது காத்தல் நின் கடன்'' (நற். கO) என்று கூறிக் கையடை செய்து பிரிந்து செல்வாளாயினள்.

தலைவியை இரவிடை அழைத்தேகும் தலைமகன் பொழுது புலர்ந்ததும், சுரமும், சுரத்திடை உளவாம் இடையூறும் கண்டு வருந்துகின்றாள் தலைவி எனக் கண்டு தலைவியை நோக்கி, "வெள்ளிய பற்களை உடையாய்! யாம் செல்லும் வழியின் இருமருங்கும், குயில் கூவி விளையாடும் குளிர்ந்த சோலைகள் பலஉள்ளன. ஆதலின் வெயிலின் வெம்மை கண்டு அஞ்சாதே; அன்றியும், நெறியை அடுத்தடுத்துப் பற்பல சிற்றூர்கள் உளவா கலின் சுரத்தின் அருமை கண்டும் அஞ்சாதே; அறிவற்ற செயலைச் செய்ய முயலும் ஆர்வமாக்கள், தாம் வழிபடு தெய்வத்தைத் தம் கண்ணெதிர் கண்டதையொப்ப, யான் நின்னைப்பெற முயன்றதனால்உளவாய துன்பம் எல்லாம் தீர நின் அழகியதோளை அணையப்பெற்றனன். ஆதலின், இனி நீ நிழலைக் காணுந்தொறும் வழிவரும் வருத்தம் தீர நெடிது தங்கி இளைப்பாறியும், மணல் நிறைந்த இடத் தைக் காணுந்தோறும், ஆண்டெல்லாம் மணல் வீடு

கட்டி விளையாடல் புரிந்தும் செல்வாயாக" (நற். கூ) எனக் கூறி மகிழ்வித்துச் செல்கின்றான். தொடுவுழித் தொடுவுழி நீங்கி, விடுவுழி விடுவுழிக் கூடும் நீர்ப்பாசி போலத் தான் ஆறுதல் கூறக்கூறத் தேறி மீண்டும் மீண்டும் அஞ்சுகின்ற தலைமகளைக் கண்ட தலைமகன், "மடப்பம் உடையாய்! புலியொடு போர் செய்தலாலே இரத்தம் தோய்ந்து புலால் நாறும் சிவந்த மருப்பையுடைய ஆண் யானை, தன் கன்றுடனே இளம்பிடியையும் தன் கையால் அணைத்துக் கொண்டு, வேங்கையின் பூக்களில் உள்ள தேனை உண்ணுதற்குக் கூடியுள்ள தேன் ஈக்கள் எல்லாம் ஓடுமாறு அம் மரத்தை முறித்து, அதன் பொன்போன்ற பூக்களைப் பறித்து அவற்றிற்கு ஊட்டாநிற்கும் இக்காட்டின் வனப்பினைக் காண்பாயாக" (நற். 202) என்பன போன்ற இன்னுரைகள் பலவற்றைக் கூறி மகிழ்வித்துக் கொண்டே செல்லுகின்றான்.

இவ்வாறு, இவர்கள் செல்வதை இடைவழியிற் கண்டவர்கள், சுரத்தின் கொடுமையையும், தலைவியின் இளமையையும், அவள் நடக்கமாட்டாமல் நடந்து செல்வதையும் நோக்கி, "செல்வமிக்க தன் தந்தையின் அகன்ற வீட்டிடத்தே, ஆடுகின்ற பந்தை உருட்டுபவளைப் போல ஓடியோடி இவளுடைய பஞ்சு போன்ற மெல்லிய அடிகள் நடைபயிற்றுகின்றனவோ? (நற்.325) இவ்வாறு மடப்பமும் இளமையும் பொருந்திய இவளை முன்னே செல்ல விடுத்துப் பின்னே செல்லும் இவ்விளையான் உள்ளம், காற்றொடுபட்ட மாரிக்காலத்தே மலைபிளக்க இடிக்கும் இடியைக் காட்டிலும் கொடியது போலும்" (நற்.2) என்று வருந்திக் கூறிச் செல்லாநிற்பர்.

இவ்வாறு கண்டார் கூறப் பல காவதம் ச செல்லுகின்றனர். தன் வீட்டை விட்டுப் பெய யாத தலைமகள் இன்னும் எத்துணைக் க

நடக்க வேண்டுமோ என்னும் அச்சமிகுதியால் தலைவனை நோக்கி, "நின்பெரும் மூதூர் யாண்டுளது?" என்று வினவுகின்றாள். தலைவன் "மடந்தாய்! மூங்கில் நிறைந்த சிறிய மலையின் கண்ணே, எம்மூர்ப் பசுவின் நிரையினங்கள் மேய்கின்ற போழ்து அவற்றின் கழுத்திலே கட்டப் பெற்ற தெளிந்த ஓசையை உடைய மணிகள் ஒலியா நிற்கும் எம்முடைய தன்மை மிக்க சிற்றூர் அதோ தோன்றுகின்றது காண்" எனக்கூறி, அவளை விரைந்து நடக்குமாறு செய்வான், "ஞாயிறு மேலைத்திசை படர்தலாலே வெயிலும் குறைந்து விட்டது; ஆதலின், மழை பொழிந்த காலைப் போதிலே தன் அழகு மிக்க சிறகினைக் கண்டார் வியக்குமாறு விரித்தாடுகின்ற மயில் போன்ற மலர் அணிந்த நின் கூந்தல், வீசுகின்ற காற்றிலே உளரும்படி சிறிது விரைந்து நடப்பாயாக" (நற்றிணை, 264) எனக் கூறி அழைத்துக் கொண்டு தன்னூர் செல்லுகின்றான். நிற்க.

தலைமகன், தன் மகளை வைகிருளிலே கொண்டு தலைக் கழிந்தான் என்பதை அறிந்த நற்றாய் தலைவியின் இளமை குறித்து வருந்துகின்றாள். "முன்றில் என் மகளால் பேணி வளர்க்கப் பெற்ற வயலைக் கொடி வளம் உற்று விளங்குகின்றது. நேற்று, என் மகள், விளையாடும் பந்தும், ஓரையாடும் பாவையும் கொண்டு அதன் அருகே விளையாடிக் கொண்டிருந்தாள். அக்காலை, கன்றை ஈன்ற பசு ஒன்று அவ்வயலைக் கொடியைத் தின்றுவிட்டது. அதைக்கண்ட அவள், பந்தையும் பாவையையும் ஆங்கே போட்டுவிட்டு, ஓடிவந்து, தன் அழகிய வயிற்றில் அடித்துக் கொண்டு அழுவதைக் கண்ட யானும் செவிலியும், அவள் அழுகையைப் போக்க, "தேனொடு கலந்த இனிய பாலை உண்ணுக" என்று ஊட்டவும் உண்ணாது விம்மி விம்மி அழுதுகொண்டே இருந்தாள். இவ்வாறு மிகவும் இளமையுடையளாம் என் மகள், இன்று

கறுத்த அணலையுடைய காளை ஒருவனின் பொய்ம் மொழியே தனக்குப் பற்றுக்கோடாகக் கொண்டு, கடத் தற்கரிய சுரத்தே சென்றனள். இதை யான் எங்ஙனம் ஆற்றுவேன்'' என்று வாய்விட்டுப் புலம்புகின்றாள்.

> "இல்லெழு வயலை யீற்றா தின்றெனப்
> பந்துநிலத் தெறிந்து பாவை நீக்கி
> யவ்வயி றலைத்தவென் செய்வினைக் குறுமகள்
> மானமர் பன்ன மையல் நோக்கமொடு
> யானும் தாயும் மடுப்பத் தேனோடு
> தீம்பா லுண்ணாள் வீங்குவனள் விம்மி
> நெருநலும் அனையள் மன்னே; இன்றே
> மையணற் காளை பொய்புக லாக
> அருஞ்சுரம் இறந்தனள் என்பதன்
> முருந்தேர் வெண்பன் முகிழ்நகை திறந்தே."
> (நற்.173)

இவ்வாறு வருந்துவாள் உள்ளத்தை மேலும் வருத்தும் முறையில் ஊரார் கூறும் அலர் உரை அவள் காதில் படுகின்றது; வருத்தம் மிகுகின்றது: வாய்விட்டுப் புலம்புகின்றாள்; "சின்னாட்களுக்கு முன் பிறந்த எருமையின் கன்று, பசிய பூந்தாதுகள் உதிர்ந்து, கொள் வார் இன்மையால், எருவாகிக் கிடக்கும் தொழுவத் திடத்தே துயிலும் வளமிக்க மாளிகையில் என்னைத் தனியே விட்டு, தலைவன் கூறும் பொய்யுரைகளையே மெய்யெனக் கொண்டு மயங்கி, அவனூர் அடைந்து மணக்க விரும்பி, சுரத்திடை அவன் பின்னே சென்று, நீர் வேட்கை மிகுதியால், வழியிற் காணும் நெல்லிக்காய் களைத் தின்றும், நீர் வறண்ட சுனையில் உள்ள மிகச் சில வாய கலங்கல் நீரைப் பருகியும் செல்லும் என் மகளைப் பின்சென்று காணுதற்கு முன்பே, என் உயிரைக் கொண்டு செல்லாத கூற்றம் இறந்தொழிவதாக'' (நற். 271) எனக்

கூறும் முகத்தான் தன் துயர் உறு உள்ளத்தை வெளிக்குக் காட்டுகின்றாள்:

இவ்வாறு வருந்திப் புலம்புவாள், துன்பம் கழியப் பெருகுதலால், இவ்வளவிற்கும் காரணமாய தலைமகனை நினைக்கின்றாள்; அவனைப் பழிப்பின் தன் மகளுக்கே ஏதமாம் என அஞ்சி அவனை ஈன்ற தாயைப் பழிப்பாள், "விழாக்கள் மலிந்த இவ்வூரில், என் மகளுடன் கூடி விளையாடும் ஆயத்தாரைக் காணும்போதெல்லாம், நடுக்கமுற்றுத் துன்புறும் என்னைப்போன்றே, என் மனையகத்திருந்த அழகிய கூந்தலை உடைய என்மகளைப் பலவாய மாயப்பொய்மொழிகளைக் கூறி மருட்டித் தன் வழி ஒழுகச் செய்து, தன்னுடன் அழைத்துச்சென்ற வன்கண்மை மிக்க அக் காளை போன்றானை ஈன்ற தாயும் நடுக்கமுற்றுத் துன்பம் அடைந்து அழிவாளாக" (நற்றிணை, 293) என்று கூறிப் பழிக்கின்றாள்.

"வல்லுரைக் கடுஞ்சொல் அன்னை" என்றெல்லாம் தன் மகளால் பழிக்கப்பெறும் தாய், தன் மகள் அயலான் ஒருவனுடன் சென்றாள் என்பது குறித்து வருந்துகின்றாள் எனினும், "உற்றார்க்குரியர் பொற்றொடி மகளிர்" என்பதை அறிந்தவளாதலின், தன்மகள், தக்கான் ஒருவனுடன் சென்ற செயல் தக்கதே என்னும் கருத்தே உடையளாய் இருப்பள். தன் மகள் தலைவன் ஒருவனுடன் சென்றுவிட்டாள் என்பது குறித்து வருந்தும் தாய் ஒருத்தி, "மணல் பரந்த அழகிய மாளிகையின் முற்றத்தே ஓரையாடும் மகளிரையும், அவர்கள் ஆடிடமாகிய நொச்சி வேலியையும் காண்தொறும் கலுழும் என்னைக்காட்டிலும், அவள் வளர்த்த கிளியும் அவளை விளித்து அழும்; இவ்வாறு யாங்கள் வருந்தப் பிரிந்து சென்ற என் மகள் குற்றம் உடையாள் அல்லள்! அவள் கொண்ட காமமோ மிகவும் வியப்புடைத்து; மூதூர்

மகளிர் பலரும் கூடித் தூற்றிக் கூறிய கொடுமையும் இனிமையும் கலந்த அலர் உரையைக் கேட்ட யான் சில நாளளவும், அக் களவொழுக்கத்தை அறியாதேன்போல இருந்தேன்; மீண்டும் அலர்மிக எழுதல் கண்டு, ஒரோ வொருகால், அவள் களவொழுக்கத்தை யான் அறிந் துள்ளேன் என்பதை அவளுக்குக் காட்டும் முகத்தான், 'மகளே! நின் கூந்தல் பண்டே போலாது புது மணம் கமழுகின்றதே; அதன் காரணம் என்னையோ?' என்று வினாவினேன். ஆகவே, யானே தவறுடையேன்'' (நற். 143) எனக் கூறி வருந்துதலே இதற்குச் சான்றாம்.

மேலும், "வறிதே கிடக்கும் பந்தையும், நீரிடுவார் இன்றி வாடிய வயலைக் கொடியையும், அவர் ஆடிட மாகிய நொச்சியையும், அவள் இன்றித் தனியே உள்ள சோலையையும் காணுந்தொறும் உளவாம் வருத்தத்தைக் காட்டினும், சுரத்திடைச் செல்லும் என் மகள், ஆண்டுப் புறாவின் தெளிந்த கூப்பீட்டின் ஓசையைக் கேட்டு வருந்தி, தன் காதலனை ஆண்டுத் துன்புறுத்துவாள் கொல்லோ என்பதை எண்ணுங்கால் உளவாம் வருத்தமே மிகப் பெரிதாயுளது'' (நற் 305) எனக் கூறுமுகத்தான், தன் மகளைக் கொண்டுதலைக்கழிந்த அவள் காதலன் பால் கொண்ட அன்பினைப் புலப்படுத்துகின்றாள் தாய் ஒருத்தி. நிற்க;

இவ்வாறு தாய் புலம்புவது கண்ட செவிலி, நற்றாயை நோக்கி, "தலைவனும், தலைவியும் யாண்டுச் சென்று விடுவர்; நாடுதோறும், ஊர்தோறும், குடிதோறும் சென்று தேடிக் கொணர்வல்' ஆற்றியிரு'' என்று கூறித் தலைமகளைத் தேடிச் சுரத்திடை வருகின்றாள். வழியில் தன் மகளும் மருமகனும் போன்றார் இருவர் கூடி வருவதைச் சேய்மைக்கண் கண்டு, அவர்களைத்

தன்னுடைய மகளாகவும் மருகனாகவும் நினைக்கின்றாள்; அவர்கள் அண்மையில் வந்தவழி அல்லாராதல் அறிந்து, அவர்களை நெருங்கித் தன் மகளைப்பற்றி வினவுவாள், "சேய்மைக்கண் இருந்துவரும் அரசன் மகனே! நின்னுடன் வந்துள்ள இவள், நேற்றுச் சுரத்தின்கண் நெடுந்தூரம் சென்ற என் மகள்போலத் தோன்றுவது கண்டு என் கண்கள் நீர் நிறையப் பெறுகின்றன. அவள் நுண்ணிய பல கோடுகள் பொருந்திய அல்குலையும், தோன்றி விளங்கும் சுணங்கையும், கூரிய வெள்ளிய பற்களையும், பாதிரி மலர்களால் தொடுக்கப்பெற்ற மாலையையும், சில வளையல்களையும், திரண்ட கூந்தலையும் உடையாள்; அவளை நீவிர் இடைவழியில் யாண்டேனும் கண்டீரோ? கண்டீராயின், என் ஆற்றாமையைக் கண் நீயிர், அவள் சென்ற திறத்தையும், கண்டு பேசிய வகையையும் கூறுவீராயின் நுமக்குப் புகழ்மிக உண்டாம்; நும்மை அவளுடைய தந்தையின் ஊரில் விருந்தேற்று வழிபடுவேன்; வண்மை மிக்க அவள் தந்தை ஊரும் இதுவே; யானே அவளை ஈன்று பாதுகாத்தேன்' (நற். 198) என்று கூறும் திறம் அவள் தலைவிபால் கொண்டுள்ள அன்பின் மிகுதியை வெளிக்குக் காட்டுவதாய் உள்ளது.

ஈண்டு. திருவாசகம் பாடிய மணிவாசகனார் இயற்றிய திருக்கோவையாரில் உள்ள பாட்டொன்றை நினைப்பூட்டிச் செல்லுகின்றேன். தன் மகள், தலைவன் ஒருவனுடன் சென்றுவிட்டாள் எனக் கவன்ற செவிலி, அவர்கள் சென்ற சுரத்திடைத் தேடிச் செல்லுகின்றாள், எதிரே, தலைவனும் தலைவியுமாக இருவர் வருவதைக் கண்டு, அவர்களைத் தன்னுடைய மகளாகவும் மருகனாகவும் கருதி உவந்த உள்ளத்தளாய் விரைந்து செல்லுகின்றாள், அணுகி நோக்கி, அவர்கள், தம் மகளும் மருகனும் அல்லர் என்பதையும், அவர்களும் தன் மகளும்

மருகனும் போன்றே வேற்றூர் நாடிச் செல்லுகின்றனர் என்பதையும் உணர்கின்றாள். உணர்ந்தவள், இவர்கள் வருங்கால் தம் மகளைக் கண்டு இருத்தல்கூடும் என்னும் துணிவுடன் ஆண்டு வரும் தலைமகனை நோக்கி, "வடிவாலும், செயலாலும் ஒத்திருக்கும் உங்களைக் கண்டு என் மகளும் மருகனும் மீண்டுவந்து விட்டனர் என எண்ணி உளமிகக் களித்தேன்; உங்களைப் போன்ற இருவர், தலைவனும் தலைவியுமாகச் சென்றவரை வழியிடைக் கண்டதுண்டோ? கண்டீராயின், அவர் செல்லும் திறத்தைக் கூறுவீராயின் நுமக்கு அறம் உண்டாம்" என்று வினவுகின்றாள். அதுகேட்ட தலைமகன் "அம்மா! என்னை ஒத்த, கொல்லும் ஆனேறுபோலும் ஆண்மகன் ஒருவன் சென்றதை யான் கண்டேன்" என்று விடையளித்து விட்டுத், தன்னருகிருக்கும் தலைவியை நோக்கித் "தூண்டா விளக்கனையாய்! அன்னை அவன் அயலே யாரோ இருந்ததாகக் கூறுகின்றார்களே, அவர்களைப் பற்றி நினக்கு யாதேனும் தெரியுமா? தெரியுமாயின் கூறுவாயாக" எனக் கூறுமுகத்தான், உடன் சென்ற இருவரில், "ஆண்மகனை மட்டிலும் யான் கண்டேன்; பெண் மகளைக் கண்டேன் இல்லை" என்று கூறி ஆண்மக்களின் கற்புநெறி இத்தகைத்து என நிறுவுகின்றான். இவ்வாறு மகளிர்க்கே உரித்து எனப் பிழைபடக் கருதப்பட்ட கற்பு நெறி ஆடவர்க்கும் உண்டு என்பதை நிறுவிச் செல்லும் அத் தலை மகன் உரை கண்டு,

"புருடரே புலையர்; நிலையிலாப் பதடிகள்;
இருளடை நெஞ்சினர்; ஈரமில் உளத்தர்;
ஆணையும் அவர்க்கு ஒரு வீண் உரை; அறிந்தேன்;
தந்நயம் அன்றிப் பின்னொன்று அறியாக்
காதகர்; கடையர்; கல்வியில் கசடர்...
கேடுஅவர் (பெண்கள்) உறுவதிங் காடவர் உருவு
கொண்டு

அலைதரும் கொடிய இவ்வல்லைகைகள் வழியே
புருடரோ இவரும்! கருவுறுங் குழவிமெய்
மென்றிட நன்றெனக் கொன்றுதின் றிடுவர்;
அவாவிற்கு அளவிலை; அன்போ அறியார்;
மணமும் அவர்க்கொரு வாணிகம்! அந்தோ!
சீ! சீ! என்இத் தீயவர் செய்கை:"

(மனோன்மணீயம். அங்கம் 2-களம் 2.)

எனப்பலராலும் பழித்துரைக்கப்படும்ஆணுலகம்தன்னைத் திருத்திக்கொள்ளுமாக. நிற்க; அச்செய்யுள் வருமாறு;—

"மீண்டார் எனஉவந் தேன்கண்டு நும்மை, இம்மேதகவே
பூண்டார் இருவர்முன் போயின ரே? புலி யூர்எனைநின்று
ஆண்டான் அருவரை யாளிஅன் னானைக்கண் டேன்
அயலே
தூண்டா விளக்கனை யாய்! என்னை யே அன்னை
சொல்லியதே?"
(கோவை, 244)

இவ்வாறு தேடிச் செல்லும் செவிலியை அறிவர், சான்றோர் முதலாயினோர் கண்டு, "நின் மகள் சிறந்தானை வழிபட்டுச் சென்றனள்; அறந் தலைப்பட்ட ஆறும் அஃதே கடலிடைப் பிறக்கும் முத்தும், மலையிடைப் பிறக்கும் சந்தனமும், யாழிடைப் பிறக்கும் இன்னிசையும் தாம் பிறந்த கடலுக்கும், மலைக்கும், யாழிற்கும் பயன் அளிப்பது இல்லை; அன்றியும் அவை ஆண்டேயிருப்பின் அவற்றிற்கும் பயன் இல்லை; அவை, தம்மைப் பயன்படுத்துவார் இடத்தே சென்றாற்றான், அவரும் பயன்பெறுவர்; அவையும் சிறப்படையும். அதைப்போன்ற அறிவு, ஒழுக்கங்களில் சிறந்த நின்மகள் நின் இல்லில் இருப்பதால் நினக்கும் பயன்படாள்; அவளும் பொலிவு குன்றுதலல்லது சிறப்படையாள்; ஆதலின் அவள் சிறந்

தானை வழிபட்டு இல்லறப் பயனை ஆற்றிச் சிறப்படை தலே செயற்பாலதாம். ஆதலின், கவலாது செல்க" என்று கூறித் தேற்றி, மீளுமாறு செய்வர். நிற்க;

தலைவன் ஊர் சேர்ந்த தலைவனும், தலைவியும் ஆண்டுத் தமர் அறியாமலோ, அல்லது மீண்டு வந்த தலைவி இல்லத்தில் தமர் அறியவோ மணம் புரிந்து கொள்வர். ஈண்டு, தமர் அறியாமல் களவில் ஒழுகிய தலைமக்கள், பலர் அறிய மணம் செய்துகொள்வதற்காகக் கூறப்பட்ட, "பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர், ஐயர் யாத்தனர் கரணம் என்ப" (தொல்; பொ. 145) என்ற தொல்காப்பியச் சூத்திரம் பற்றி ஒரு சிறிது கூறி மேலே செல்வாம். களவொழுக்கம் மேற்கொண்டு ஒழுகிய தலைமக்களுள் தலைவனோ, தலைவியோ பின்னர் "இவரை முன்னர் அறியேன்" என்பன போன்ற பொய்யுரைகளைக் கூறுதலானும், ஒருவரை ஒருவர் தொடர்பு இன்றி விட்டு விடுதல் போன்ற வழுக்கள் மலிந்துவிட்டமையானும் இது போன்ற பொய்மையும் வழுவையும் போக்குதற் பொருட்டே சான்றோர் முதலாயினார், அவர்கள் இருவரும் பலர் அறிய மணம்புரிந்து கொள்ளுதலாகிய சடங்கினை உண்டாக்கினர் என்பதே இச்சூத்திரத்திற்குக் கூறப்படும் பொருளாம். இனி, அவ்வாறு அவர்களிடையே பொய்யும் வழுவும் தோன்றின எனின் அவர்கள் தலைமக்கள் என்னும் தகுதிப்பாட்டிற்குத் தக்கவராகார் ஆதலினாலும், அவ்வாறு தங்களிடையே உண்மை அன்பின்றிப் பிரிந்து வாழமுயல்வாரைச் சடங்கின் மூலமோ, அன்றி வேறு எவற்றின் மூலமோ சேர்த்து வைப்பினும், அவர்கள் இருவரும் உளம் ஒன்றி வாழார் ஆதலின், அச்சடங்காற் பயனில்லை ஆதலினாலும் அச் சூத்திரத்திற்கு அவ்வாறு பொருள் கூறுதல் பொருந்துவதன்று; அன்பால் கூடித் தமர் அறியாமல் களவில்ஒழுகும் தலைமக்களின் ஒழுக்கம் பற்றிப் பிறர் பொய்யும் வழுவும் நிறைந்த அலர் உரை

களைக் கூறுவராயின் அவ்வலர் உரைகளைப் போக்குதற் பொருட்டே, அவர்கள் இருவரும் பலரும் அறிய மணம் புரிந்து கொள்ளுதலாகிய சடங்கினைச் சான்றோர் உண் டாக்கினர் என்று கூறலே அச் சூத்திரத்திற்குப் பொருந் திய பொருளாக இருத்தல் கூடும் என யான் எண்ணுகின் றேன்; அறிவுடைப் பெருமக்கள் ஆய்ந்து உண்மை துணி வார்களாக.

இனி, மணம்புரிந்த தலைமக்கள் இல்லறம் ஆற்றும் இயல்பினைச் சிறிது நோக்குவாம்: "அறவோர்க்கு அளித்தலும், அந்தணர் ஓம்பலும், துறவோர்க்கெதிர்த லும், தொல்லோர் சிறப்பின், விருந்தெதிர் கோடலும்" ஆகிய இல்லறப் பண்புகளில் ஒரு சிறிதும் வழுவாது நிற்கும் தலைமகள், ஒருநாள் இரவிடை விருந்து வந்த தாக, இளையோர் அடியோர் ஆயம் முதலாய பலரும் இருப்பவும், நல்லிசை விருந்தாற்றுதற்குரிய உணவினைத் தானே செய்தல் வேண்டும் என்னும் பெருவிருப்பால், நெய்யை மிகுதியாகவிட்டுக் கொழுவிய தசையைச் சமைப்புழி எழுந்த புகை படிந்த நெற்றியின்கண், சிறிய நுண்ணிய பலவாய வியர்வைநீர் தோன்றக் குறுநடை நடந்து செல்லுகின்றாள்; அவள் நடைகண்டு உளம் மகிழ் கின்றான் தலைமகன்; (நற். 41).

இனி இவ்வாறு வளத்திலன்றி, வறுமையில் ஆற்றும் இல்லறமும் ஈண்டு நினைத்து இன்புறுதற்குரியது. இல் லறம் ஆற்றும் தன் மகளின் இயல்புகளைக் காணச் செல் லுகின்றாள் தாய் ஒருத்தி. அத்தலைவன் இல்லமோ வறுமை நிறைந்துளது; தன் மகள் தந்தை இல்லத்தே உள்ள வளம் மிக்க செல்வத்தையும் நினைக்கின்றாள் இல்லை. முப்பொழுதும் உண்ணுதற்கு வாய்ப்பு இன்மை யால் பொழுது மாறி உண்ணுகின்றனர். தலைவன் கூற்றிற்கு மறுத்துரை கூறாமல் அவன் குறிப்பறிந்து நடக்

கின்றாள் தலைவி. இவற்றையெல்லாம் காணுகின்றாள் தாய். பண்டை நிகழ்ச்சிகள் ஒன்றன் பின் ஒன்றாய் அவள் மனத்திடைத் தோன்றி மறைகின்றன; அவற்றுள் ஒன்று: —

அன்பே உருவாய் அமைந்த செவிலி ஒரு கையில் தேன் கலந்த இனிய சுவை மிக்க பாற்சோறு நிறைந்த ஒளிவிடும் பொற்கலத்தையும், மற்றொரு கையில் மெல்லியகோலையும் ஏந்தி வருகின்றாள். முத்துப் பாலிட்ட சிலம்பணிந்த தலைவி அச் சிலம்பொலிக்க விளையாடுகின்றாள். செவிலி அவளை நெருங்கிச் சோற்றை உண்ணுமாறு கூறுகின்றாள். மகள் மறுப்பது கண்டு அவளைப் பிடித்து உண்பிக்க முயலுகின்றாள். தாய் பிடிக்கவருவதறிந்து மெல்ல ஓடுகின்றாள் தலைவி. செவிலியும் தொடர்ந்து ஓடுகின்றாள். ஓடியும் பிடிக்க முடியாமல் இறுதியில் இளைத்து நிற்கின்றாள். முன்றிலின்கண் போடப்பட்டிருக்கும் முல்லைப் பந்தரின் அடியில் ஓடி நின்ற தலைவி "உண்ணேன் காண்" என மறுத்துரைத்துவிட்டு ஆடத் தொடங்குகின்றாள். — இவ்விரண்டையும் ஒருங்கு கண்ட தாய், "அன்று அறுசுவை உண்டியை அமர்ந்து ஊட்டவும் மறுத்துண்ட இவள், இன்று பொழுதுமறுத் துண்பதற்குத் தலைவனொடு கூடி வாழும் இன்பம் அவ்வளவு சிறந்தது போலும்! அன்று யான் உண் என ஏலவும், என் ஏவலை மறுத்துச் சென்று விளையாடிய இவள், இன்று தலைவன் சொல் பிழையாது, ஒழுகும் ஒழுக்கத்தையும், அவன் குறிப்பறிந்து பணியாற்றுதற்கேற்ற அறிவையும் யாண்டுப் பெற்றனளோ?' என வியந்து மகிழ்ந்து கூறுகின்றாள்.

"பிரசங் கலந்த வெண்சுவைத் தீம்பால்
விரிகதிர்ப் பொற்கலத் தொருகை யேந்திப்
புடைப்பிற் சுற்றும் பூந்தலைச் சிறுகோல்

உண்ணென் றோக்குபு புடைப்பத் தெண்ணீர்
முத்தரிப் பொற்சிலம் பொலிப்பத் தத்துற்று
அரிநரைக் கூந்தற் செம்முது செவிலியர்
பரிஇமெலிந் தொழியப் பந்தர் ஓடி
ஏவன் மறுக்குஞ் சிறுவிளை யாட்டி
அறியும் ஒழுக்கமும் யாண்டுணர்ந் தனள்கொல்
கொண்ட கொழுநன் குடிவறன் உற்றெனக்
கொடுத்த தந்தை கொழுஞ்சோ றுள்ளாள்
ஒழுகுநீர் நுணங்கறல் போலப்
பொழுது மறுத்துண்ணுஞ் சிறுமது கையளே (நற்.11.)

இவ்வாறு இல்லறம் ஆற்றும் தலைமக்களுள், தலைமகன் இடையிடையே, பொருள், காவல், கல்வி முதலியன குறித்துப் பிரிந்து போதலும் செய்வன். "திறம்புரி கொள்கையொடு இறந்து செயின் அல்லது, அரும் பொருள் கூட்டம் இருந்தோர்க்கு இல்" (நற். 252) என்றும், "இசையும் இன்பமும், ஈதலும் மூன்றும் அசையுடன் இருந்தோர்க்கு அரும்புணர்வுஇல்" (நற். 214) என்றும் கருதிப் பொருளீட்டுதற் பொருட்டுப் பிரிந்து செல்ல நினைக்கும் தலைமகன், என்றும் பிரிந்தறியாத் தலைவியையும், அவளைப் பிரிந்து சென்று கொணரும் பொருளினையும் ஒப்பிட்டு நோக்குகின்றான்; நோக்கித், தன் நெஞ்சை விளித்து, "நெஞ்சே! தலைவியொடுகூடி இல்லில் இருப்போமாயின் தலைவியின் கூட்ட இன்பம் பெறலாமே ஒழியப் பொருள் பெறுதல் இயலாது;தலைவியைப் பிரிந்து பொருள் ஈட்டச் செல்வோமாயின் திரண்ட பொருளைப் பெறலாமே ஒழியத்தலைவியைக் கூடி உறைதலால் உளவாம் இன்பத்தைப் பெறுதல் இயலாது; ஆகவே, இவ்விரண்டினையும் ஒப்பு நோக்கின், பொருள் வயிற் பிரியினும், பிரிதலின்றித் தலைவியொடு கூடி மகிழினும் நல்லதொரு செயலைப் புரிந்தாயே ஆவாய்; ஆயினும், தலைவியைப் பிரிந்து பெறும்பொருளோ, பொய்கை

யிடத்து ஓடுகின்ற மீன் செல்லும் நெறியைப் போலத் தாம் இருந்த இடமும் தெரியாமல் அழிந்துபோகும் இயல்புடையது. ஆகவே, கடல் சூழ்ந்த இப்பெரிய உலகையே, அளக்கும் மரக்காலாகக்கொண்டு, எழுமுறை அளக்கப்பெறும் அளவாய்த் திரண்ட பொருளைப் பெறுவதாயினும் அதை விரும்பேன். தலைவியின், செவ்வரி பரந்து அருள் நிறைந்த கண்கள் என் ஆற்றல் அனைத்தையும் அழித்துவிட்டன; யான் வாரேன்; அப்பொருள் எத்துணைச் சிறப்புடையன ஆயினும் ஆகுக" என்று கூறி மறுக்கின்றான்.

"புணரிற் புணராது பொருளே; பொருள்வயிற்
பிரியிற் புணராது புணர்வே; ஆயிடைச்
சேர்பினும், செல்லாய் ஆயினும், நல்லதற்கு
உரியை; வாழி! என் நெஞ்சே! பொருளே,
வாடாப் பூவின் பொய்கை நாப்பண்
ஓடுமீன் வழியிற் கெடுவ; யானே,
விழுநீர் வியலகம் தூணி யாக
எழுமாண் அளக்கும் விழுநிதி பெறினும்
கனங்குழைக் கமர்த்த சேயரி மழைக்கண்
அமர்ந்தினிது நோக்கமொடு செகுத்தனன்;
ஏனைய ஆகுக வாழிய பொருளே. (நற். 16)

இவ்வாறு பொருள்வயிற் பிரியத் தலைமகன் மறுத்துரைக்கின்றான். ஆயினும், அவன் நெஞ்சம் மட்டில் பொருள்மேற் செல்லும் விருப்பம் உடையதாய்ப் "பொருளும் இன்பத்தைத் தரும் இயல்புடையது ஆதலின், பிரிந்து பொருள் ஈட்டுதலும் செயற்பாலதே" என்கின்றது; அது கேட்ட தலைமகன் "நெஞ்சே! தலைவியைப் பிரிந்துஈட்டும் பொருளும் இன்பம் தரும் எனின், கூறுகின்றேன் கேள்; இளமைக் காலத்தே பெறலாகும்

இன்பத்தைக் காட்டிலும் சிறந்த இன்பம் வேறு இல்லையன்றே. அத்தகைய இளமையைக் கொன்னே கழியவிட்டு ஈட்டிய அப்பொருள், அவ் விளமை கழிந்த முதுமையில் இன்பம் தருவது இல்லையாம். அதனால் நில்லா இயல்புடைய பொருளீட்டு முயற்சியில் நீ செல். யான் வாரேன்; நின் முயற்சி இனிது முடிவதாக," (நற். 126) என்று கூறுகின்றான். இவ்வாறு, பொருள் வயிற்பிரியத் துணிதலும் அழுங்கலுமாக இருந்த தலைமகன் இறுதியில் ஒரு நாள் பிரியத் துணிந்து, பிரிந்து செல்லுதற்கு ஆவனபுரிந்து நிற்கின்றான்.

தலைமகன் பிரிதற்குத் துணிந்துள்ளான் என்பதைக் குறிப்பால் உணர்ந்த தலைமகள் வருந்துகின்றாள். அவள் வருந்துதற்கேற்ற காரணத்தை வினாவிய தோழிக்குத் தலைவி கூறுவாள், "தோழி! தலைவர், வெயிலின் வெப்பம் கருதி ஒதுங்கியிருத்தற்கும் இடம் அற்ற கொடிய வெப்பம் மிக்க காட்டிடத்தே சென்றுவிட்டனர். அதை யான் குறிப்பாற் கண்டுகொண்டேன். வேலின் விளங்கிய இலையை மாசு போகத் துடைப்பர்; கிடுகுப்படையினையும் மயிற்பீலிசூட்டி மணியை அணியாநிற்பர். அன்றியும் பண்டே போலாது என்னையும் பலபடியாகப் பாராட்டிப் புகழ்வர். ஆதலின், இனி, என் அழகிய கண்கள் நீருள் மூழ்குங் காலம் வந்துவிட்டது போலும்," என்கின்றாள்.

"ஒதுக்கரும் வெஞ்சுரம் இறந்தனர் மற்றவர்
குறிப்பிற் கண்டிசின் யானே; நெறிப்பட
வேலு மிலங்கிலை துடைப்ப; பலகையும்
பீலி சூட்டி மணியணி பவ்வே;
பண்டினும் நனிபல அளிப்ப; இனியே
வந்தன்று போலுந் தோழி நொந்துநொந்து
எழுதெழில் உண்கட் பாவை
அழிதரு வெள்ளம் நீந்தும் நாளே." (நற். 177)

ஈண்டு, "இறப்ப" என எதிர்காலத்தாற் கூறாது "இறந்தனர்" என இறந்த காலத்தாற் கூறினார், இறத்தல் தெளியப்பட்டமையின். தெளிவுப்பொருளில் வரும் எதிர் காலத்தை இறந்த காலத்தாற் கூறல் இலக்கண மரபாம்; என்னை, "வாராக் காலத்து வினைச் சொற் கிளவி, இறப்பினும் நிகழ்வினும் சிறப்பத் தோன்றும், இயற்கையும் தெளிவும் கிளக்குங் காலை" (தொல். சொல். 145) என்பது விதியாகலின் நிற்க;

போக்கறிந்து வருந்துகின்றாள் தலைவி என உணர்ந்த தலைமகன், அவள்பாற் சென்று "மடப்பம் உடையாய், பொன்போலும் ஒளிவீசும் நின் உடல் வனப்பையும், நீல மணிபோலும் கரிய மணம் நாறும் கூந்தலையும், குவளை மலர் போலும் அழகிய மையுண்ட கண்களையும், மூங்கிலையொத்த பருத்த தோள்களையும் காணுந் தொறும் காணுந்தொறும், அறநெறி நின்றார் அடையும் இன்பம் அடைகின்றேன். அன்றியும், பொற்றொடி யணிந்த நம்புதல்வனும் விளையாடும் பருவம் அடைந்து விளையாடத் தொடங்குகின்றான். இந்நிலையில் உங்கள் "இருவரையும் கண்டு கண்டு மகிழ்வதல்லது வேற்றிடம் செல்லேன்; யான் நின்பால் கொண்டுள்ள அன்போ கடலினும் பெரிது; இங்ஙனமாக, யான் எதனை முன்னிட்டுப் பிரியப் போகின்றேன்? பிரியேன், ஆதலின் ஆற்றியிரு" (நற். 166) என்று கூறி ஆற்றி நீங்குகின்றான்.

இவ்வாறு அழிந்த நெஞ்சுடன் மீளும் தலைமகனை, "யாது காரணம்?" என வினவுகின்றான் ஒருவன். அவனை நோக்கித் தலைமகன், "யான் பொருள்வயிற் பிரிதற் பொருட்டு என் செய்கைகளில் சிறிது விரைவுடையனாய் இருந்தேனாக, அக்குறிப்பால் யான் போதற்குத் துணிந் துள்ளேன் என்பதை அறிந்துகொண்ட தலைவி மிகவும் வருந்திக் கண்களில் நீர்கொண்டனள். அதை யான்

அறிந்து, அவளைப் பலவாறு புகழ்ந்து கூறி அழுதற்குரிய காரணத்தை வினவவும், அவள் நாண் மிக உடையளாகி, விடையும் அளிக்காது, "யாண்டுப் போகின்றனை" என்று வினவுதலும் செய்யாது, "போகலை" என்று தடுத்தலும் செய்யாது பிரிதலில் ஒரு சிறிதும் விருப்பம் இலள் ஆதலின், மெல்ல மெல்ல என் அருகே வந்து, நெடும் பொழுது எதை எதையோ நினைந்து நின்று, இறுதியில் என் தோளின் மீது சாய்ந்து விட்டாள். அதுகண்டு பொருள்வயிற் பிரியக் கருதிய என் நெஞ்சம், ஈரிய மண்ணால் செய்யப்பட்டு ஈரம் புலராத பசுமட்கலம் மழை நீரை ஏந்த வைத்தால் எவ்வாறு கரைந்து ஒழியுமோ, அதைப்போன்று, தன் விருப்பம் எல்லாம் ஒழிய அவளுடன் இரண்டறக் கலந்து வேறுபாடின்றி அடங்கிவிட்டது" (நற்றிணை, 308) என்று கூறுகின்றான்.

இவ்வாறு உள்ளம் அடங்கிற்று எனினும், பொருள் இன்மையான் உளவாம் இளிவரவு, தலைமகனைப் பொருள் வயிற் பிரியச் செய்கிறது. அக்காலை, தலைமகன், தலைவியின் இயல்பை நோக்குகின்றான்; அவன் கண்முன், தலைவியின் பேரழகின் தோற்றமும், பிரிவால் வருந்தும் அவள் வருத்த நிலையும் ஒருங்கு தோன்றுகின்றன. தோன்றவே, "இத்தகைய இயல்புடையாளைப் பிரிந்தாரைத் துன்புறுத்தும் இக்கொடிய வாடைக் காற்றிலே தனியாக விட்டு நீங்கிப், பொருள் இன்மையான் வரும் இளிவரவைப் போக்குதற்குப் பொருள் பெறப் பிரிய வேண்டுமாயின் அம்ம! அம்ம! பொருள் இன்மையான் வரும் அவ்விளிவரவு கொடிது! கொடிது!" (நற்.262) என்று வருந்திக் கூறிப் பிரியத் துணிகின்றான்.

துணிந்த தலைமகன், தலைவியோடு கூறிப் பிரிதல் இயலாது எனக் கருதி, தோழிபால் கூறிப் பிரிதலே செயற்பாலது எனக்கொண்டு, தோழியிடம், தன் கருத்தை

வெளியிடுகின்றான். அது கேட்ட தோழி, உடன்பட்டாளாய், "'ஐயனே! நிலையற்ற பொருளைப் பெற விரும்பி, 'இதை, வளையணிந்த முன்கையை உடைய நின் தோழிக்கு உணர்த்துவாயாக' என்று கூறுகின்றனை; அவ்வாறே, யானும் சென்று உணர்த்துகின்றேன். அவளும் 'நீயிர் செல்வீராக' எனக் கூறி விடுக்கின்றாள். 'ஆனால் அவள் அவ்வாறு விடுப்பினும், செல்வமலிந்த பல கட்டுகள் அமைந்த மாளிகையின் உட்புறத்தே இருக்கும் அழகிய சிவந்த கால்களை உடைய சேவற்புறா தன்பெடையைக் கூடுதற்கு விரும்பி அழைக்கும் அவ்வொலி கேட்குந்தோறும் வருந்தும் இவளை, இவளுடைய கண்ணையும், நுதலையும் தடவிப் பிரிந்து போதற்கு ஏற்ற வன்மை உடையீரோ? உடையீராயின் பிரிந்து செல்க' (நற். 83) என்று கூறி மறுக்கின்றாள். மீண்டும், தலைவனை நோக்கித் "தலைவ! பொருளீட்டுதற் பொருட்டு வெப்பம் மிக்க, கடத்தற்கரிய வழியில் செல்வது நுமக்கு மிக்க உவகையை அளிப்பதாய் உளது. ஆனால், எம் தலைவிக்கோ எனின், நீயிர் பிரிந்து செல்லுதலைக் கேட்டவுடன், யானைப்படை பல கொண்டுள்ள பகை வேந்தன் தன் மதிற்புறத்தே தங்கியிருக்கும் காலத்தே; அஞ்சற்க என்று கூறித் துணையாக வந்த அரசன், துணை செய்யாது கைவிட்டுச் சென்றானாக, உடைபட்ட ஒரே மதிலையுடைய அரசனுக்கு நேர்ந்த அழிவு போன்ற அழிவு வாராநின்றது. ஆதலின், இசைந்த தொன்றினைச் செய்வாயாக" என்று கூறி மறுக்கின்றாள்.

"வெம்மை யாரிடை யிறத்தல் நுமக்கே
மெய்ம்மலி உவகை யாகின்று; இவட்கே
'அஞ்சல்' என்ற இறைகை விட்டெனப்
பைங்கண் யானை வேந்துபுறந் திருத்தலிற்
கலையுநர்க் காணாது கலங்கிய உடைமதில்
ஓரெயில் மன்னன் போல
அழிவுவந் தன்றால் ஒழிதல் கேட்டே' (நற். 43)

ஈண்டு, அஞ்சல் எனக் கூறிய துணை அரசன் தலைவனாகவும், மதிலின் அகத்தே இருக்கும் அரசன் தலைவியாகவும், உடைமதில் ஓரெயில் பெண்களுக்குரிய குணங்கள் எல்லாம் கழிய எஞ்சி நின்ற நாணாகவும், பகையரசன் தலைவன் பிரிந்தவுடன் தலைவியைப்பற்றி வருத்தும் பசலை நோயாகவும் கூறப்பட்டுள்ள நயம், கண்டு இன்புறற்பாலதாம். நிற்க;

இவ்வாறெல்லாம் மறுத்துக்கூறிய தோழி, இறுதியில் பொருளின்றி இல்லறம் இனிது நடவாது என்பதை உணர்ந்து பிரிவிற்கு உடன்பட்டுத், "தலைவ! நீயிர் வினைவயிற் செல்வேன் செல்வேன் என்று கூறுகின்றீர்; தலைவியின் இயல்பை நன்கு அறிந்துள்ளேன் ஆதலின், 'நீயிர் செல்வீராக' என்று கூறுதற்கு அஞ்சுகின்றேன். அவ்வாறன்றி, 'செல்லாது ஈண்டே இருப்பீராக' என்பேனாயின் ஊரார் கூறும் பழிச்சொல் கண்டு அஞ்சுகின்றேன். ஆதலின், சென்மின்; சென்று வினை முடிமின்; வினை முடிந்ததாயின் ஆண்டு நில்லாது இவண் வந்து இவளை ஓம்புமின்" (நற். 229) என்று கூறி இசைந்து நிற்கின்றாள்.

இவ்வாறு இசைந்த தோழி, தலைவிபாற் சென்று தலைவன் பொருள்வயிற் பிரியக் கருதியுள்ளதையும், அதற்குத் தான் இசைந்து வந்ததையும் கூறுகின்றாள். அது கேட்ட தலைவி முதலில் வருந்துகின்றாள். எனினும் இறுதியில் தலைவன் பொருள் ஈட்டி வந்தாலொழிய இல்லறம் இனிது நடவாது என்பதை உணர்ந்து, தோழியை நோக்கித் "தோழி! 'பொருள்வயிற் பிரிவேன்' என்று அவர் கூற, 'அவ்வாறு பிரிதல் நன்று' என்று கூறி உடன்பட்ட நல்லதொரு செயலைச் செய்தாயேயாவாய்; ஆடவர் வினை மேற்கொண்ட உள்ளத்தவராய் பொருள் ஈட்டுதற்கு அகல்வர்; அஃது அவர்கள் பண்பும் ஆகும்," என்று கூறி உடன்பட்டு ஆற்றியிருக்கின்றாள்.

"சேறும் நாமெனச் சொல்லச் சேயிழை
நன்றெனப் புரிந்தோய் நன்றுசெய் தனையே
செயல்படு மனத்தர் செய்பொருட்கு
அகல்வர் ஆடவர்; அதுவதன் பண்பே," (நற். 24)

பிரிந்து சென்ற தலைமகன், இடைச்சுரத்தே தலைமகளை நினைந்து புலம்புகின்றான்: "என் நெஞ்சம், 'இருண்ட கூந்தலையும், மையுண்ட கண்ணையும் உடைய தலைவியிடத்தே செல்வோம்; சென்று பிரிவினால் உண்டாய அவள் துயரைப் போக்குவோம்' என்று கூறா நிற்கும். என் அறிவோ எனின், 'தொடங்கிய வினையை முற்றுப் பெறச் செய்து முடித்தல் இன்றி இடையே மடங்குவோமாயின், அச்செயல் நமக்கு அறியாமையுடனே பழியையும் தரும். ஆதலின், நெஞ்சே! சிந்தித்தலின்றி ஒன்றையும் துணிந்து விடாதே' என்று கூறா நிற்கும். இவ்விரண்டன் மாறுபாட்டுக்கிடையே நின்ற என் உடல், களிறுகள் ஒன்றோடொன்று பற்றி ஈர்த்தலினாலே தேய்ந்த புரியை உடைய பழைய கயிறு இறுவதைப் போல அழிய வேண்டியதுதான்" என்று வருந்துகின்றான்.

"புறந்தாழ்பு இருண்ட கூந்தல், போதின்
நிறம்பெறும் ஈரிதழ் பொலிந்த உண்கண்
உள்ளம் பிணிக்கொண் டோள்வயின் நெஞ்சம்
செல்லல் தீர்க்கம் செல்வாம் என்னும்;
செய்வினை முடியாது எவ்வம் செய்தல்
எய்யா மையோடு இளிவு தலைத் தருமென
உறுதி தூக்கத் தூங்கி அறிவே
சிறிதுநனி விரையல் என்னும்; ஆயிடை
ஒளிறேந்து மருப்பிற் களிறுமாறு பற்றிய
தேய்புரிப் பழங்கயிறு போல
வீவது கொல்லென் வருந்திய வுடம்பே."
(நற். 284)

வருந்திய தலைமகன் இறுதியில் தன் நெஞ்சை நோக்கி, "நெஞ்சே! இவ்வாறு வருந்துவதைக் காட்டிலும், இரண்டில் ஒன்று துணியின் நலமாம். ஆகவே, பொருள், ஈட்டும் முயற்சிகொண்டு செல்வாம் எனினும், அன்றி மீண்டு ஊர் புகுவாம் எனினும் யான் தடுப்ப தொன்றதில்லை;இரண்டினுள் நீ துணிந்ததொன்றினைக் கூறு; அதன்படி நடத்தலே முடிபாம்" (நற். 103) என்று கூறி மேற்செல்லுகின்றான். நிற்க;

குறித்த பருவம் எய்தவும் தலைவன் வராமை கண்டு தலைவி வருந்துவாள், அவளைத் தேற்றுதல்வேண்டும் என எண்ணித் தலைவிபால் செல்லுகின்றாள் தோழி சென்றவள், தான் எண்ணியதற்கு மாறாகத் தலைவி ஆற்றியிருப்பது கண்டு வியப்புற்றுத் "தலைவி! இதோ பார், உலகில் உள்ள உயிர்த் தொகுதிகள் எல்லாம் விரும்பி எதிர்நோக்க, மேகங்கள் வலமாக எழுகின்றன. இஃது அன்றோ அவர் வருவேன் எனக் குறித்துச் சென்ற காலம். இக்காலை அவர் வராதிருத்தலைக் கண்டும், அதுபற்றி வருந்தாது இருக்கின்றனையே; இஃது என்ன வியப்பு" (நற். 237) என்று வினவுகின்றாள். அதற்குத் தலைவி, "தோழி! யான் அவர் சென்ற வழியின் அருமை குறித்தும், அவர் வராமை குறித்தும் வருந்துகின்றேன் எனினும், தான் செல்லும் நெறியில், நீர் நசையால் வருந்திய பிடியானையின் துன்பத்தைப்போக்கக் களிற்றி யானை பல்லிடம் சென்று தேடி இறுதியில் கல்லின் கண் ஊறி நிற்கும் நீரைக் கண்டு, தன் நீண்ட துதிக்கை நிறைய அந்நீரை முகந்துகொண்டு தன் பிடியானையை நோக்கி விரைந்து ஓடுவதைக் காணும் அவர், தாமும் பொருள் ஈட்டிய உடன் விரைந்து பொருளுடன் வந்து என்னை இன்புறுத்துவர் என்னும் துணிவுடையேன்; ஆதலின் ஆற்றியுள்ளேன்" (நற். 186) என்று விடையிறுக்கின்றாள்.

இவ்வாறு கூறி ஆற்றியிருக்கும் அவள், தலைவன் வாராது மேலும் நீடிப்பது கண்டு வருந்தி அவனையே நினைந்த நெஞ்சினை உடையவளாய்த் தோழியை நோக்கித் "தோழி! என் நெஞ்சம் என்னோடு கூடிவாழ்தல் இன்றி, அவர்பால் சென்று அவருடன் இருத்தலின்; அது மிகவும் நல்வினை உடைத்து; யானோ, அந்நெஞ்சம் போன்று நல்வினை செய்திலேன்; ஆதலின் ஊரார் கூறும் அலர் உரை கேட்டு வருந்தி வாழ்கின்றேன்" (நற். 107) என்று வருந்திக் கூறுகின்றாள். நாள் பலவாகியும் தலைவன் வரானாக, தன் நெஞ்சம்மட்டில் அவனை மறத்தல் இன்றி இருப்பதையும், தன் நலன் எல்லாம் கெடுவதையும் தோழிக்கு அறிவிப்பாள், "தோழி! தலைவன்பாற் சென்ற என் உள்ளம், அவர்க்குத் துணையாய் நின்று. வினையை முற்றுவித்து அவருடன் ஒருங்குவர விரும்பி உளதோ? அன்றி, அவர் அருளாமையால் மீண்டு இவண் வந்து, பிரியுமுன் இருந்த நலம் கெட்டுப் பசலை பாய்ந்த என் உடலைக் கண்டு, 'இவள் நம் தலைவி அல்லள்; அயலிலாட்டி, என்று எண்ணி வருந்தி வேறிடம் சென்றுவிட்டதோ? அறியேன்" என்று வருந்திக் கூறுகின்றாள்.

"சென்ற நெஞ்சம் செய்வினைக் குசாவாய்
ஒருங்குவரல் நசையொடு வருந்துங் கொல்லோ?
அருளாத னாதலின் அழிந்து இவண் வந்து
தொன்னலன் இழந்தவென் பொன்னிறம் நோக்கி,
ஏதி லாட்டி இவளெனப்
போயின்று கொல்லோ நோய்தலை மணந்தே."
(நற். 56)

பிரிந்துறையும் தலைமக்களுக்கு மாலைக் காலமும் மனக்கினிய காட்சிகளும் வருத்தம் விளைவிப்பனவாம்.

சோலைகளில் நின்று தன் இனிய குரல் எடுத்துக் கூறு கின்றன குயிலினங்கள்; அக் குரல், தலைவிக்கு, நெடுங் காலத்திற்கு முன்னே உண்டாய புண்ணில் கூரிய வேற் படையைப் பாய்ச்சினாற் போன்ற துன்பத்தைத் தரு கின்றது. தலைமக்கள் கூடி விளையாடுதற்கேற்பப் பளிங்கு போன்று தெளிந்த நீர் நிறைந்து ஓடும் ஆற் றைக் காணுகின்றாள். குயிலின் குரல் கேட்டு அடைந்த துன்பத்தைக் காட்டினும் மிக்க துன்பத்தை அடைகின் றாள். மாலை நேரம் மகளிர் சூடிக்கொள்ளுதற்கேற்பப் பசுமையான குருக்கத்தி மலருடனே விரவிக் கட்டப் பெற்ற சண்பக மலர் மாலையை விலைக்கு விற்று வருகின்றாள் இளமகள் ஒருத்தி, அவளை ஆற்றை வெறுத்தலினும் மிகுதியாக வெறுக்கின்றாள் தலைவி (நற்.97) இந்நிலையில் அவண் வந்த தோழியை நோக்கித் "தோழி! இம்மாலைக் காலம், இருள் மிக்க இராக்காலத்தே சேறு நிறைந்த தொழுவத்தினின்று நீக்குதலும் செய்யாது அத்தொழுவத்துள் கீழே படுக்க வும் விடாது நின்ற நிலையிலே நிற்குமாறு, தலைக் கயிற்றை இழுத்து உச்சியிலே தூக்கி மேற் கைம் மரத்தில் இறுகப் பிணிக்கப்பெற்ற பசுவின் கன்று வருந்துவதைப் போல, யான் ஒருத்தியாகவே நின்று வருந்த வருத்து கின்றது" (நற். 109) என்று கூறி வருந்துகின்றாள்,

இவ்வாறு வருந்துவாள், தலைவன் சின்னாள் நீட்டிப் பனாயின் தான் இறப்பது உறுதி எனவும், அவ்வாறுதான் இறக்குங்காறும் வாராது பொருள் ஈட்டுவனாயின் அவன் அறிவற்றவன் ஆவன் எனவும் கூறுவாள், "தோழி! தன் எல்லா உறுப்பானும் மருந்தாய் உதவும் மரத்தின் பயனைப் பின்னும் வேண்டிய மக்கள், அது பட்டுப் போகும்படி அதன் பாலுள்ள மருந்து முற்றும் கொள்ளார்; மக்கள் தவம் செய்தற்கு நிலைக்களனாய தம் உடல்வலி அனைத்தும் கெடுந்துணையும் தவத்தினைச்

செய்யவும் மாட்டார்; அரசர், தம் கோல் உயர்தற்கு ஏதுவாய குடிமக்களின் வளப்பம் எல்லாம் கெடுமாறு, அவர்தம் இடத்து இருந்து வரிகளைக் கொள்ளுதலும் இலர். இவற்றையெல்லாம் அறிந்தும் நம் தலைவர், நம்மை ஈண்டே விட்டுப் பிரிந்தார் ஆதலின், அவர், தாம் பிரியாது உறைதலினாலேயே எம்முடைய உயிர் நிற்கின்றது என்ற உண்மையைப் அறிந்தவர் அல்லர். இதுவே ஆடவர் இயற்கை என்பர் ஆன்றோர்.' (நற். 226) என்று கூறி வருந்துகின்றாள். வருந்திய தலைவி இறுதியாக, "இவ்வாறு, தம்மால் அன்பு செய்யப்பட்டாரது உயிர் நீங்கவும் பொருள் கருதிப் பிரிதல் ஆடவர்க்கு இயல்பு எனின், அரிதுமன் றம்ம, அறத்தினும் பொருளே" (நற். 243) என்று கூறி உளம் சலித்து உரையடங்குகின்றாள்.

இவ்வாறு, தலைவி ஆற்றாளாயினது கண்ட தோழி, தலைவியை நோக்கி, "தோழி! நீ நெடிது வாழ்வாயாக. முகிலும், நொச்சியும், முல்லையும் மலருமாறு கார்ப் பருவம் செய்யத் தொடங்கிவிட்டது. ஆதலின், தலைவர் மிகச் சேய்மைக்கண் உள்ள நாட்டினராயினும், நின்பால் பேரன்பினர் ஆதலின் நில்லாது வருவர்; அவர், தாம் கருதிய வினையை முடித்தலினால் நிறைந்த புகழைப் பெறுவதாயினும், இனி நில்லார்" (நற். 115) எனவும், "தலைவர் சிறந்த அன்பினர்; அன்றியும் மெல்லிய இயல்பும் உடையவர்; ஆதலின், பிரிந்துறையும் நம்மைக் காட்டிலும் மிக வருந்தித் தாம் கருதிச் சென்ற அளவு பொருள் கைவரப் பெறாது ஒழியினும் நில்லாது வருவர்; அத்துடன் இம்மேகத்தின் இடியோசை இன்துணைப் பிரிந்தாரைத் தேடிக் கொணர்வதுபோல் உளது. ஆதலின் நீ வருந்தற்க" (நற். 208) எனவும், "செறிந்த இருள் சூழ்ந்த நடு யாமத்தில், நம் தலைவரை உள்ளுந்தோறும், நன்மை தரும் குரலையுடைய பல்லி

சுவரிலே பொருந்தி நின்று ஒலிக்கும்" (நற். 333) எனவும் கூறித் தேற்றுகின்றாள்.

இவ்வாறு, தோழி, பலப்பல கூறித் தேற்றுவது கண்ட தலைவி, தோழியை நோக்கித் "தோழி தலைவன் குறித்த காலத்து வாரானாயினமையின், என் தோள்களும் மெலிந்து பொலிவு குன்றின; அவன் வரும் வழியைப் பல்காலும் நோக்கி நோக்கி என் கண்களும் காணும் இயல்பை இழந்தன. நினைப்பு மிகுதியால் என் அறிவும் மயங்கி வேறுபட்டு விட்டது; உயிர் போம் வழி, நோயையும் உடன்கொண்டு போவதல்லது அதைத் தனித்துவிட்டுச் சேறல் இல்லையாதலின், இறக்கும் நிலையிலுள்ள என்னைப் பற்றியுள்ள நோயும் என்னைவிட்டுப் பெயர்ந்து விட்டது; பிரிந்தார்க்குத் துன்பத்தைச் செய்யும் மாலையும் வந்துவிட்டது. இனி என் நிலை என்னாம்?—நான் இவ்வாறு கொண்டு தோழி! யான் இறப்பைக் கண்டு அஞ்சுகின்றேன் என்று நினையல்; சாதல் அஞ்சேன்; ஆனால், இறந்து மறு பிறப்படைந்தால், அப்பிறப்பில், இப்பிறப்பில் என்னால் அன்பு செய்யப்பட்ட என் தலைவனை மறந்துவிடுவேன்கொல்? என்றே அஞ்சுகின்றேன்" என்று தன் அன்பின் முதிர்ச்சியைக் காட்டுகின்றாள்.

"தோளும் அழியும் நாளும் சென்றன;
நீளிடை அத்தம் நோக்கி வாளற்றுக்
கண்ணும் காட்சி தெளவின; என்நீத்து
அறிவும் மயங்கிப் பிறிதா கின்றே;
நோயும் பேரும்; மாலையும் வந்தன்று;
யாங்கா குவென் கொல் யானே? யீங்கோ
சாதல் அஞ்சேன்; அஞ்சுவல், சாவின்

பிறப்புப்பிறி தாகுவ தாயின்
மறக்குவேன் கொல்? என் காதலன் எனவே."
(நற். 367)

இவ்வாறு கூறும் தலைவி கூற்று,

"துறக்கப் படாத உடலைத் துறந்துவெந் தூதுவரோடு
இறப்பன்; இறந்தால், இருவிசும்பு ஏறுவன்; ஏறிவந்து
பிறப்பன்; பிறந்தால், பிறையணி வார்சடைப்
பிஞ்ஞகன்பேர்
மறப்பன்கொ லோ? என்றுஎன் உள்ளம் கிடந்து
மறுகிடுமே."

என்ற **நாவரசர்** வாக்கை நினைப்பூட்டி நினைக்குந் தோறும் கழிபெருங் களிப்பைத் தருவதாய் உளது.

இவ்வாறு, தன் அன்பின் முதிர்ச்சி காட்டி ஆற்றாளாய தலைவி, தலைவனும் அன்புடையன் என்பது நினைத்து, "என் தொல்காவின் தொலையவும் தோள் நலம் சாயவும் என்னை அளிக்காது சென்றார் ஆயினும் அவர் என்பால் அன்புடையர் ஆதலின், விரைந்து மீண்டு வந்து என்னை அளிப்பர்" (நற். 14) என்று கூறி ஆற்றியிருக்கின்றாள்.

இவ்வாறு ஆற்றியிருக்கும் தலைவி மகிழத் தலைவன் வந்தானாக, அச்செய்தியைத் தலைவிக்கு அறிவிக்க விரும்பிய தோழி தலைவிபால் சென்று, "தோழி! கழன்று விழும் நின்தொடியைக் கண்டு நம் மகன் அழ, அவனுடைய அழுகுரலைக் கேட்டு உளம் மகிழ்ந்து அவனை அணைத்துக் கொள்ளும் நம்முடைய மனம் மகிழத் தலைவரும் வந்து விட்டார்; இனி நீவிர் இருவீரும் இல்லறமாற்றி இனிது வாழ்வீராக"! (நற்.212) எனக் கூறுகின்றாள்.

பெரியோர்களே!

இதுகாறும் பாலை ஒழுக்கமாய்; கொண்டு தலைக் கழித்தல் முதல் பிரிவுவரையிலும் நிகழும் நிகழ்ச்சிகளை ஒரு கோவைப்படுத்திக் கூறினேன். இனி, இதிற் காணப் பெறும் பண்டை வழக்காறு, உவமநயம், செய்யுளின் சிறப்பு இயல்புகள் போன்ற இன்னோரன்ன பகுதிகளை யும் கூறிச் செல்லின் விரியுமென்றஞ்சி விடுத்துச் செல்லு கின்றேன். அறிவுடைப் பெருமக்கள், இன்னோரன்ன பல பகுதிகளை ஆராய்ந்து வெளியிட்டுத் தமிழ்நாட்டைப் பண்டை உயர்நிலையில் நிறுத்த முயல்வார்களாக!

1942பிப்ரவரி, 2 ஆம் நாள், சென்னையில் பேராசிரியர் தெ.பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் தலைமை யில் நடைபெற்ற, நற்றிணை மாநாட்டில் நிகழ்த்திய சொற்பொழிவு.

# துறவு

"ஓரில் நெய்தல் கறங்க, ஓரில்
ஈர்ந்தண் முழவின் பாணி ததும்ப,
புணர்ந்தோர் பூவணி அணிய, பிரிந்தோர்
பைதல் உண்கண் பனிவார்பு உறைப்ப,
படைத்தோன் மன்றஅப் பண்பி லாளன்;
இன்னாது அம்ம! இவ்வுலகம்;
இனிய காண்க இதன் இயல்பு உணர்ந்தோரே."

— பக்குடுக்கை நன்கணியார்

இல்லற வாழ்க்கையினை மேற்கொண்ட தலைமக்கள் இருவரும், இல்லற நெறியில் தத்தமக்கு ஓதிய அறநெறியில் ஒரு சிறிதும் பிறழாது நின்றுபேணி, மனக்கினிய மக்களையும் பெற்று வாழ்ந்த அந்நிலையோடு அமையாமல், உயிர், உடல், உடைமை முதலாயின தாம் கண்ட நிலையிலேயே நில்லாது நாளும் அழியும் இயல்புடையனவாய் இருத்தலைக்கண்டு, அவற்றிடத்தே வெறுப்புற்று, என்றும் அழியாததாய், இன்பமே நிறைந்ததாய் உள்ள ஒரு நிலையைப்பெற விரும்பி மேற்கொண்ட நெறியே துறவு நெறியாம்.

இத்துறவு நெறி, உலகில் உள்ள யாவரானும் விரும்பி மேற்கொள்ளப்படுகின்றது எனினும், அதை மேற்

கொள்ளும் முறைக்கண் வேறுபாடுகள் பல தோன்றுகின்றன; சிலர் இல்லறத்தை இனிதாற்றிய பின்னர், உலகப் பொருள்களிடத்தே வெறுப்புற்று, இயல்பாகவே, துறவிடத்தே தம் உள்ளம் செல்ல, அதை மேற்கொள்ளுகின்றனர்; வேறு சிலர், உலகப் பொருள்களின் இயல்பினைத் தாம் ஓராதே, 'உலகமும், உலகப் பொருள்களும் நிலையற்றன' எனத் தம் முன்னுள்ளோர் கூறியதையே உட்கொண்டு அவ்வுலகப் பொருள்களின் நீங்கி, துறவினை மேற் கொள்ளுகின்றனர். இவ்விரண்டனுள், உலகமும், உலகப் பொருள்களும் ஆய இவற்றின் உண்மை இயல்புகளை, அவற்றோடு கூடி வாழ்ந்த முறையால், தம் அறிவின் துணையால், தாமே உள்ளவாறு உணர்ந்து, அதன் காரணமாக, இயல்பாகவே அவற்றிடத்தே பற்று ஒழிய மேற்கொண்ட துறவே வள்ளுவர் போற்றிய துறவாம். இத்துறவு நெறியே, சாலச் சிறந்த நெறியாதலையும், இயற்கையோடியைந்த இன்ப நெறியாதலையும் விளக்கி மேலே செல்வாம்.

உலகில் வாழும் மக்கள் அனைவரும், ஒத்த நிலையினராக, ஒத்த கருத்தினராக இருத்தல் இல்லை. உலகின் இயற்கைத் தோற்றங்களைக் கண்டு மகிழும் கண்களைப் பெற்று வாழும் மக்களிடையே அக்கண்களையும் பெறாத மக்களும் வாழ்கின்றனர்; இயற்கைப் பொருள்களின் இன்னோசையைக் கேட்டு மகிழும் காதினைப் பெற்று வாழும் மக்களிடையே, கேளாக் காதைப் பெற்று விளங்கும் மக்களும் உளர்; பல்வகை முயற்சியால், பயன்பல பெற்று வாழ்தற்கேதுவாய கால்களைப் பெற்று வாழும் மக்களிடையே முடம்பட்ட மக்களும் நின்று காட்சி அளிக்கின்றனர். இவ்வாறு உலகை ஒருமுறை நோக்குவார் ஒவ்வொருவரும், உலகம், "காணார், கேளார், கான்முடப்பட்டோர், பேணுநர் இல்லோர், பிணி நடுக்குற்றோர்"

முதலாய பல்வேறு மக்களையும் கொண்டு விளங்குவதைக் காண்பர். தாங்களே முயற்சி செய்து பொருள்பெற்று, உண்டு வாழ்தற்கியலாத நிலையில் உள்ள இவர்களும், இவர்தம் உயிர், உடலைவிட்டு நீங்கும் வரை பேணப்பட வேண்டியவராகவே உள்ளனர். உயிர் நின்ற உடல் பேணப்படுதல் வேண்டுமாயின், அதற்கு உண்டி இன்றி யமையாததாகும்; "உண்டி முதற்றேஉணவின் பிண்டம்."² தாமே முயற்சி செய்து உயிரைப் பேணிக்கொள்ள இயலாத நிலையில் உள்ள இவர்தம் உயிரை, உண்டி கொடுத்துப் பேணுவார், இல்லற நெறியில் நிற்பவரே யாவர். "துறந்தார்க்கும், துவ்வாதவர்க்கும், இறந் தார்க்கும் இல்வாழ்வான் என்பான் துணை" என்பது திருக்குறள். இவ்வாறு, தாம் மட்டில் உயர்நிலை உலகம் எய்தி இன்புற முயலாது, பிறரையும் பேணி உட னழைத்துச் செல்லும் இவ்வில்லறத்தார் செயல் போற்று தற்குரியதேயாம்; இந்நெறியே, தம் தொண்டினைத் தவறாது செய்து வருவார், பிறர் அரிதிலே முயன்று பெறும் உயர்நிலை உலக இன்பத்தை எளிதில் அடைவர் என்பது உறுதி. "தன் கடன் அடியேனையும் தாங்குதல், என் கடன் பணி செய்து கிடப்பதே" என்பர் நாவரசர். இவ்வாறு, தம் உடன் வாழும் மக்களுக்கும் நன்மை பல செய்து அவரையும் தாம் பெறும் உயர்நிலை உலகத்தைப் பெறச் செய்யாது தாம் மட்டில் தனித்துப் பெற விழைவது அறமல்ல செயலாம் என்பதை,

"துயர்நிலை உலகம் காத்தல் இன்றி, நீ
உயர்நிலை உலகம் வேட்டனை ஆயின்,
இறுதி உயிர்கள் எய்தவும், இறைவ!
பெறுதி விரும்பினை ஆகுவை அன்றே?
தன் உயிர்க்கு இரங்கான், பிறஉயிர் ஓம்பும்,
மன்உயிர் முதல்வன் அறமுமா தன்றால்
மதிமாறு ஓர்ந்தனை; மன்னவ!"

என்று துறவு மேற்கொள்ள விரும்பிய அரசன் ஒருவனை நோக்கி அவன் அமைச்சன் கூறுவனவற்றானும் அறிக. இதனால், உலகில் வாழும் மக்கள் அனைவரையும், உயர்நிலை உலகம் அடையச் செய்த பின்னர், தாம் அவ்வுலகை அடைதலே நேரிய முறையாம் என்பதும், அஃது இல்வாழ்வார்க்கே இயலுவதொன்றாம் என்பதும் பெறப்படும். படவே, அவ்வில்லற வாழ்க்கையினை மேற்கொள்ளாது, துறவினை மேற்கொள்ளுதல் நெறியல்லா நெறியாம் என்பது தெளிவாம்.

இளமையில் இன்பத்தை ஊட்டிய உடல் உறுப்புக்கள், முதுமையில் வெறுப்பினை விளைத்தலையும், உரமும், உறுதியும் உடையதாகக் கருதப்பட்ட உடல், உயிர் நீக்கியபின் அழிந்தொழிவதையும், நிலைபேறுடையதாகக் கருதப்பட்ட பொருள், நிலைகலங்கிக் கெடுவதையும் கண்டாலொழிய, அவற்றிடத்தே வெறுப்பு இயல்பாகத் தோன்றுவதில்லை. காண்பதற்கு இன்பத்தைத் தரும் விளக்கொளியினைக் குழந்தை, தொட முயலுந்தோறும், நாம் அதைத் தடை செய்யின் குழந்தைகளுக்கு அதைத் தொடுதல் வேண்டும் என்று தோன்றிய விருப்பம், குறைவதேயில்லை. மாறாகப் பெருகி வளர்கின்றது; ஒரு முறை அவ்விளக்கினைத் தொட்டு, அதன் வெம்மையால் துன்புற்ற காலத்தேதான் அதன்பால் வெறுப்பு உண்டாகின்றது. இதுபோன்றே, இன்பம் தருவன போன்று தோன்றும் உலகப் பொருள்களைப் பெற்று, அவற்றோடு கூடிவாழ்ந்த காலத்தேதான், அவற்றின் உண்மை இயல்பு—இன்பம் விளைப்பன போன்று, துன்பம் விளைக்கும் இயல்பு — தோன்றி அப்பொருள்களிடத்தே கொண்டிருந்த பற்று ஒழிய வெறுப்புத் தோன்றுமேயல்லாது, அப்பொருள்களைப் பெற்று அவற்றோடு கூடி வாழாத காலத்தே, அப்பொருளிடத்தில் உண்மையிலேயே வெறுப்புத் தோன்றுவது இல்லை; பற்று அற்று இருக்க

வலிதில் முயற்சி செய்தால், உண்மையில் பற்று அறுவதும் இல்லை; மாறாக மிக்கு விளங்குகின்றது.

இயற்கையோடு இயைந்து இன்பம் செறிந்த வாழ்க்கையினையே வள்ளுவர் விழைகின்றார். ஆதலின், அவர் இல்லறத்தின் வழித்தாகிய துறவறமே சாலச் சிறந்தது என்ற நோக்குடையராய், இல்லறத்தின் பின்னரே துறவினைக் கூறுவதோடு அமையாது,

"அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின், புறத்தாற்றில்
போஒய்ப் பெறுவது எவன்?

"இயல்பினால் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்,
முயல்வாருள் எல்லாம் தலை."

"ஆற்றின் ஒழுக்கி, அறன்இழுக்கா இல்வாழ்க்கை,
நோற்பாரின் நோன்மை உடைத்து."

"துறந்தாரின் தூய்மை உடையர்; இறந்தார்வாய்
இன்னாச்சொல் நோற்கிற் பவர்."

"உண்ணாது நோற்பார் பெரியர்; பிறர்சொல்லும்
இன்னாச்சொல் நோற்பாரின் பின்."

"ஆற்றுவார் ஆற்றல் பசிஆற்றல்; அப்பசியை
மாற்றுவார் ஆற்றலின் பின்."

என்ற தம் அழகிய குறள்வெண்பாக்களினால் அவ்வில்லறத்தின் பெருமையினை வாயார வாழ்த்துவாராயினர்.

—செந்தமிழ்ச் செல்வி: [1942-43] பக்கம்: 298:—301

# காட்சியும் கருத்தும்

உலகில் நிலவும் உயிர்கள் அனைத்தும் பிறப்பால் ஒத்தனவே எனினும், அவை தம்முள் வேறுபடுவது அவை மேற்கொண்டொழுகும் தொழில் வேற்றுமையான் ஆம் என்று வள்ளுவர் கூறுகின்றனர். ஊன்றி நோக்கின் அவ்வேறுபாடு, அவர் தம் தொழில் வேறுபாட்டான் ஆகிறது என்பதினும், அவர் தம் மன வேறுபட்டான் ஆகிறது என்று கோடலே பொருத்தமாதல் விளங்கும். மன வேறுபாடே சொல் வேறுபாடு தொழில் வேறுபாடுகளுக்குக் காரணமாம்; "உள்ளத்தில் உண்மையொளி உண்டாயின் வாக்கினிலே ஒளி உண்டாகும்." "மனத்துக்கண் மாசிலனாதலே அறமாம்" எனவும், "நினைத்தலும் செய்தலோடு ஒக்கும்" எனவும் கூறப்படுதலும் நோக்காற்பாலதாம். "மனம் வேறு, சொல்வேறு, மன்னு தொழில் வேறு" என இவ்வேறுபாட்டு முறைமையைக் காரண காரிய வரிசையில் வைத்து வழங்குவதும் காண்க. மக்கள் தம்முள் ஒத்த உள்ளத்தினராய் இல்லாது, வேறுபட்ட உள்ளத்தினராய் இருத்தலான் அன்றே, பிறப்பு, சாதி, சமயம், மொழி, நாடு, இவை காரணமாகத் தம்முள் பொருது கெட்டழிகின்றனர்.

இவ்வாறு மக்கள் ஒத்த உள்ளத்தினராய் இல்லாது இருத்தலின், அவரால் காணப்படும் பொருள் ஒன்றே ஆகவும், காணும் அவர் தம் உள்ளத்தே பல்வேறு கருத்துக்

கள் நிகழுகின்றன; நிலவொளி வீசி எழும் முழுத்திங்கள், உலகில் உள்ள எல்லா உயிர்க்கும், ஒத்த காட்சியையே அளிக்கின்றது என்றாலும், அதைக் காணும் அரசன் உள்ளம், பகைவர் நாடுமீது படையெடுத்துச் செல்ல இக் காலம் எத்துணை நல்லகாலம் என எண்ணுகிறது; உழவன் உள்ளம், பயிர்களுக்கு இளைப்பின்றி நீர்பாய்ச்ச இன்பம் அளிக்குமே இக்காலம் என எண்ணுகிறது; கள்ளர் உள்ளம், தம் தொழிலைத் தடை செய்கின்றதே இந்நிலவொளி எனத் திங்கள் மீது காய்கின்றது; இளைஞர் உள்ளம், மணல் வீடு கட்டி விளையாடத் துள்ளுகின்றது; ஆடியும், பாடியும் இன்பம் துய்ப்பதற் குரிய இன்பக்காலம் இக்காலம் எனக் களிப்பெய்தும் பிரி யாது கூடி உறையும் தலைமக்கள் உள்ளம்; "உங்கள் இளம்பிறையால் எங்கள் இளங்கொடிதான் எத்தனை கோடியிரா இப்படி வாடுவதே" எனத் துயருறும், பிரிந்துறையும் தலைவியின் தோழி உள்ளம். மேலும். அறிவு, உருவு ஆய எல்லா நலனும் அமையப் பெற்ற இளம்பெண் ஒருத்தியைக் காணும், காவியப் புலவன் உள் ளமும். ஓவியப் புலவன் உள்ளமும், காமுகன் உள்ளமும் ஒன்றாக இருக்கமுடியுமா? மணமகனைப்பற்றி ஆராயுங் கால், மணமகள் தந்தை, அவன் கல்வியின் பெருமையை எண்ணுகின்றான்; அவள் தாய் அவன் செல்வப்பெருக்கை எண்ணுகிறாள்; அவள் சுற்றம், அவன் குலநலனை எண்ணுகிறது; மணமகள் உள்ளம் அவன் வடிவழகை எண்ணுகின்றது. இவ்வேறுபாடு அவர்தம் மனவேறு பாட்டை அன்றோ அறிவிக்கின்றது; ஒருவர்பால் குணம் உண்டு எனினும்,கீழ் மக்கள் அவர்பால் உள்ள அவர்தம் சிறு குற்றத்தைக் கொண்டு புகல்வது, அக்கீழோர் தம் கருத்துக் கீழ்மையால் அன்றோ?

இனி, இவ்வாறு காணப்படும் ஒரே பொருள், காண் பார் தம் தகுதிக்கேற்ப, அவர்தம் உள்ளத்தே பல்வேறு

வகைப்பட்ட கருத்துக்களைத் தோற்றுவிப்பதே அன்றி, காணுகின்ற ஒருவர் உள்ளத்திலேயே கால வேறுபாட்டான், வேறுபட்ட கருத்துக்களை தோற்றுவிப்பதும் உண்டு. ஞாயிற்றின் தோற்றம் என்றும் ஒன்றாகவே இருப்பினும், அதை இளமையில் காணுங்கால் எழுந்த உள்ளக் கிளர்ச்சி, அவர்க்கு, முதுமையிலும் அதைக் காணுங்கால் உண்டாதல் இல்லை. மணப்பருவம் எய்தா நிலையில், காமநோய் என்பது இத்தன்மைத்து என அறியாளாய்க், காம நோயால் வருந்தும் வாணியை நோக்கி,

> "காதலென் பதுவென்? பூதமோ? பேயோ?
> வெருட்டினால் நாய்போல் ஓடிடும்; வெருவில்,
> துரத்தும்; குரைக்கும்; தொடரும் வெகுதொலை."

என வீண் வீரம் பேசிய மனோன்மணி, பின்னர்க் காம நோயுற்று வருந்துங்காலை, "போதம் கரைந்து மேற் பொங்கிடும் அன்பை, பூதயாக்கையோ தடுத்திடும்." என இரங்கி உரைத்தல், கால வேறுபாட்டான் நிகழ்ந்த அவள் மனவேறுபாட்டை அன்றோ அறிவிக்கின்றது.

அமைச்சன் குடிலன், சூழ்ச்சியால், சேரநாட்டரசன், புருடோத்தமன், பாண்டிநாட்டு மன்னன், சீவகனுடன் போர் தொடுத்து விட்டான். முதல்நாட் போரில் பாண்டிப் படைகள் தோற்று மீண்டன; சீவகனும், பகைவரால் கொல்லப்படும் நிலையில் உயிர் மீட்கப்பட்டான்; அரணும் அழிந்துவிட்டது. இந்நிலையால், உளத்துயர் மிக்கான் எனினும்; மறுநாட் போரில் வெற்றி பெற்றோ, அன்றிக் களத்தில் உயிர்விட்டோ, பழி நீங்கிப் புகழ் பெறத் துணிந்துவிட்டான் அரசன். அந்நிலையில் அவன் ஆசிரியர் சுந்தரர் அவண் வருகின்றார். வந்த அவர் அரசனை நோக்கி, "கொக்கொக்க கூம்பும் பருவத்து

மற்றதன், குத்தொக்க சீர்த்த விடத்து'' என்ற முது மொழிப்படி, தமக்குக் காலமும் இடனும் கருவியும் நன்கு வாயாவழி அடங்கியிருந்து, அவை வாய்த்தவழி வினை யாற்றலே அறிவுடையார் செயல்; ஆதலின், அரணும் ஆற்றல் அற்று, வீரரும் வீறு இழந்து நிற்கும் இக்காலை, ஆண்மையானும், ஆற்றலானும், நின்னினும் சிறந்த நின் பகைவனுடன் போரிடல் நீத்து, அவனுடன் அமைதி பேசிப் பணிந்தொழுகலே நன்று; இவ்வாறு இன்று பணிந் தொழுகுவையேல், பின்னர் உயர்வைப் பெறுவாய்,'' என்று கூறுகின்றார். இவ்வாறு அறிவுரை கூறும் அவர் உள்ளத்தே, தான் கூறிய அறிவுரைக்குச் சிறந்த எடுத்துக் காட்டாக விளங்கும் ஒரு காட்சி தோன்றுகிறது. ''பெரு வெள்ளம் பாயும் பேராறு ஒன்று; அதன் கரையில் மூங் கிலும் மரமும் நிறைந்துள்ளன; பெருவெள்ளம் பாயினும், பெருங்காற்று வீசினும், தம்நிலையில் சிறிதும் தாழாது நிற்கின்றன மரங்கள்; ஆனால் மூங்கில்களோ எனின், சிறு வெள்ளம் பாயினும், சிறு காற்று வீசினும், அவற்றிற்கு ஏற்ப வளைந்து கொடுக்கின்றன; இறுதியில், மரங்கள் ஆணிவேரும் அற்று வீழ்ந்து விடுகின்றன; மூங்கில்கள் மட்டும், காற்றும் மழையும் ஓய்ந்த பின்னர்த் தம்நிலை யில் நிமிர்ந்து நிற்கின்றன; இவ்வாறு தான் கண்ட இக் காட்சியை எடுத்துக் கூறித் தாம் கூறவிரும்பிய கருத் தைக் கூறுகின்றார். ''புயல்போல் வந்துளது போர்; இக் காலை நீ மரம் போல் பணியாது செருக்குற்று நிற்பையேல் நீ நின் கிளையுடன் அழிவது உறுதி. அவ் வாறன்றி, மூங்கில்போல் பணிந்து செல்வையேல் பின்னர் ஒருகால் சிறந்த வாழ்தலும் கூடும்,'' என்றனர்.

''வளையும் வேய்நிமிரும்; வளையா நெடுமரம்
கிளையுடன் கெடுமே கிளர்காற் றதனால்.''

இனி, இதை அமைதியுடன் கேட்ட அரசன் உள்ளம் அக்காட்சியைக் காணும் முறையினைச் சற்று நோக்கு

வாம்; மூங்கிலை நோக்குகின்றான்; உள்ளே வயிரம் அற்று, வெற்றிடம் பெற்றுள்ளது; மரத்தை நோக்குகின்றான், இடைப்பகுதி வயிரம் முற்றிச் சிவந்து தோன்றுகின்றது. அன்றியும் மூங்கிலைப் பலரும் வேருடன் களைந்து எடுத்துச் செல்கின்றனர். ஆனால், மரத்தைக் களைய மனத்தாலும் நினைக்கிலர்; அன்றியும், காற்றாலும் மழையாலும் வீழ்ந்துகிடக்கும் மரத்தின் சிறுசிறு பகுதிகளையும், பொன்போற் பேணி எடுத்துச் செல்கின்றனரே அன்றி, அம் மூங்கில்களை ஒரு பொருளாக மதித்தலும் செய்கிலர். இக்காட்சியைக் கண்ட அவன் உள்ளம், அதை அப்படியே ஆசிரியனுக்கு எடுத்துக்கூறி, அதனால் தான் அறிந்த உண்மைகளையும் விளக்குகின்றது.

"மூங்கில்போல் உள்ளத்தே உரம் அற்றவரே பகைவரைப் பணிந்து ஒழுகுவர்; மரம்போல் உரம் மிகப் பெற்றோர், துன்பம் உற்ற இடத்தில் உயிர்விடுவரேயல்லால் பற்றலரைக் கண்டு பணிந்தொழுகார்; "ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலின் அந்நிலையே கெட்டான் எனப்படுதல் நன்று," காற்றாலும் மழையாலும் அழியாது நிற்பினும், அம்மூங்கிலைப் போற்றுவார் ஒருவரும் இலராதல் போல, துன்பம் கண்டு அஞ்சிப் பகைவரைப் பணிந்து ஒழுகுவாரை உலகம் போற்றாது; அவரை அறிவதும் இல்லை. "கணம் கணம் தோன்றிக் கணம் கணம் மறையும் பிணம்பல; இவரெல்லாம் பிறந்தார் என்பவோ?" ஆணிவேரும் அற்று விழுந்துவிடினும், மரத்தின் சிறுபகுதியும் பயன்படுதல் குறித்து அறிந்தோர் அதனைப் பெரிதும் பேணுதல் போல, உரனுடைக் கொள்கையால் உயிரிழக்கப்பெற்றோர் அறிவுடையோர் உள்ளத்தே பொன்போல் பொதித்து வைக்கப்படுவர்; ஆதலின், உள்ளத்தே உரம் மிகப் பெற்றுள்ளேன்;

நாளைப் போரிட்டு, வெற்றியோ, அன்றி, இறப்போ பெறுதலே என் கடனாம் எனக் கூறினான்.

"முளையும் ஓர் மரமோ? முனிவ! புல்லினம்!!
களைகுவர்: களைகிலர் காழ்பெறுந் தருக்கள்;
சேணுயர் தேக்கு திசையெறி சூறையில்
ஆணிவேருடன் எழுந்துஅதிர்ந்து அசைந்து இறினும்,
பேணுவர் அதனைப் பெரியோர்! யாரே,
காணுவர் காழறு நாணமில் நாணலை?"

ஈண்டு ஆசிரியர் சுந்தரரும், அரசன் சீவகனும் கண்ட காட்சி ஒன்றே ஆகவும், அவர்தம் கருத்துக்கேற்ப, வேறுபட்டு விளங்குவது காண்க. காலமும், கருத்தும் இன்மை குறித்துக் கட்டுரையை இம்மட்டில் முடிக்கின்றேன்.

—செந்தமிழ்ச் செல்வி 1952-53 [பக்கம் : 229 - 232]

# எம்மனோர் இல் செம்மலும் உடைத்தே.

பேரொலி செய்யும் பெருங்கடற் கரையில், பால் ஒளி செய்யும் பருமணற் பரப்பு; அம்மணற் பரப்பு முற்றிலும் புன்னை மரங்கள் நன் மலர் மலர்ந்து நீழல் செய்து நிற்கின்றன; அப் புன்னை மரங்களின் நீழல் தோறும், பரதவர் மகளிர் பலர் கூடித், தம் தந்தை, தன்னையர் கொணர்ந்த மீன்களுக்கு உப்பிட்டு உலர்த்தி, அவற்றினை உண்ண வரும் கடற் காக்கைகளை ஓட்டு வதற்கிடையே, மணல் வீடு கட்டியும், கடல் நண்டாட்டு யும், கழங்காடியும் விளையாடல் புரிந்து வாழுகின்றனர். அம்மகளிர் பலருள், கையில் வளையும், காலிற் சிலம்பும் அணிந்து, எழில்மிக்கு, அம் மகளிர் தமக்கு இறைவி யென உள்ளாள் ஒருத்தி மட்டில், முகப் பொலிவு குன்றி, புள்ளோப் புதலாகிய தம் தொழிலையும் செய்யாது, மகளிருடன் கூடி ஆடலும் புரியாது, தன் உயிர்த் தோழி யுடன், அம்மகளிரை விட்டுப் பிரிந்து சென்று தனியே ஒரு மரத்தடியில் வந்து தங்குகின்றாள். தங்கிய அத் தலை மகளின் ஆற்றாமையைக் கண்ட அவள் தோழி, அவள் ஆற்றாமைக்குரிய காரணத்தை அறிய விரும்பு கின்றாள். தலைவி, தனக்கும், அரசன் மகன் ஒருவனுக் கும் உண்டாய அன்பின் பிணைப்பையும், 'பிரியேன்' என்று கூறிய அவன், பிரிந்து சென்றதோடு நில்லாது, நாள் பல வாகியும் வாராதிருப்பதையும் கூறி அறத்தொடு நிற்கின்

றாள். அது கேட்ட தோழி, பிரிந்து சென்ற தலைவர், விரைவில் வருவார் எனவும். வந்து, தமர் அறிய மணம் புரிந்து தலையளி செய்வர் எனவும், கூறி அவள் ஆற்றா மையைப் போக்கிக் கொண்டு இருக்கின்றாள்.

நாட்டில் உள்ள கடவுளருக்குப் பல்வேறு காலங்களில் விழா எடுப்பது குறித்துக் கட்டப்பெற்ற கொடிகள், அங்காடிகளின் இருமருங்கும் விளங்குகின்றன; நெல் முதலாய பல்வேறு கூலங்களுள் இன்ன பொருள் இன்ன இடத்தே உளது; அதன் விலை இவ்வளவு என விற்பார் கூறாமல், வாங்குவார் தாமே, அறிந்து கொள்வதற் கேற்ற குறியீடுகளைக் கொண்ட கொடிகள் ஒருபால் நின்று அசைகின்றன; கல்வி, கேள்விகளில் சிறந்த பெரியோர்கள் பலரும் கூடி, ஆராய்ச்சிகளும், சொற் போர்களும் நடத்தும் இடங்களை அறிவிப்பதற்குக் கட்டப் பெற்ற கொடிகள் மற்றொரு பால் தோன்றி விளங்கு கின்றன; தங்கள் அரசன் பகை வேந்தரை வென்று, அவர் தம் அரணைக் கைப்பற்றிய, வெற்றிச் சிறப்பினைக் கொண்டாடுவதற்குக் கட்டப்பெற்ற கொடிகள் நக ரெங்கும் நின்று காட்சி அளிக்கின்றன; கடல் துறைகளில் நிற்கும் நாவாய்களின் பாய் மரங்களின் மீது கட்டப் பெற்று விளங்கும் பல்வேறு நாட்டுக் கொடிகள் கடற்கரை எங்கும் தோன்றி, கடற் காற்றால் அசை கின்றன.

இத்தகைய பெருஞ் சிறப்பு வாய்ந்த மாநகர் அரசன் ஒருவனுடைய காதல் மகன், மாலைக் காலத்தே மணித்தேர் ஏறி, கடற்கரையை அடைகின்றான்; அடைந் தவன், பரதவர் மகளிர் கூடி விளையாடும் இடத்திற்கு மிகச் சேய்மைக் கண்ணே, தேர் விட்டு இழிந்து, அம் மகளிரை நடை கொண்டு நாடிச் செல்லுகின்றான். அவன் வருவது கண்ட மகளிர், நாணத்தால் ஒருவர்

மெய்யில் ஒருவராக ஒளிந்து கொள்ளுகின்றனர். அம் மகளிர் குழாத்தைக் கூர்ந்து நோக்கிய அரசிளங் குமரன், ஆண்டுத் தலைவி இல்லாமையை அறிந்து, மேலும் நடக்கத் தொடங்கி, இறுதியில் தலைவியும், அவள் காதல் தோழியும் கூடியிருக்கும் இடத்தை அடைகின் றான். இதுகாறும் தலைவியைத் தனித்துக் கூடியது போன்று இனி இயலாது என்பதையும், மகளிர் பலரும் போன்று ஆண்டே கூடி ஆடல் புரியாது, தலைவியைச் சேர்ந்து வாழும் இயல்பால், தலைவியோடு இருப்பவளே அவள் உயிர்த்தோழி ஆவாள் என்பதையும், இனி, அவள் துணையிருந்தால் அன்றித் தலைவியைப் பெறுதல் இயலாது என்பதையும் அறிந்தவனாய்த் தோழிபால் சென்று, தனக்கும், தலைவிக்கும் உளவாய, நட்புண்மை கூறி, அவளைப் பெறுதற்குத் துணைபுரியுமாறு வேண்டு கின்றான். தோழி, அங்கு மகளிர் பலர் கூடியிருப்பதை யும், கூட்டம் இடையிடையே வாய்க்கப்பெறின், அவன் வரையாது களவிலேயே ஒழுக விரும்புவான் என்பதையும் பிரிந்து நாள் பல சென்று வருதலால், தலைவியின் வருத்தம் மிகுவதையும், மனத்திடை கொண்டு, தலைவனை நோக்கி,

"ஏ அரசன் மகனே! நின்னால் விரும்பப்பட்டவளாய் எம் தலைவி, கடற்கரைச் சோலையிடையே அமைந்த அழகிய சிறு குடில்களில் வாழ்பவரும், நீல நிறம் பொருந்திய பெரிய கடல் கலங்குமாறு கலத்தின் மீது சென்று வலைவீசி, மீன் பிடிப்பவரும் ஆய பரதவருடைய மகளாவாள்; நீயோ, நீண்ட கொடிகள் பல அசையும் அங்காடிகள் நிறைந்த பழமையான ஊரினையும் விரைந்து செல்லும் தேரினையும் உடைய அரசனுடைய காதல் மகன் ஆவை; ஆதலின், நின் செயல், எம் குலத் திற்கே பொருந்துமாறு இல்லை; மேலும், புலால் நாறும்

சுறாமீன்களின் துண்டுகளை உலர்த்திவிட்டு, அவற்றை உண்ண வேண்டி, கூட்டம் கூட்டமாக வரும் கடற் காக்கை முதலாய புள்ளினத்தை ஓட்டும் இழிந்த இயல்பினேமாய எமக்கு, நின்னை ஒத்த அரசரால் செய்யப் படும் நலந்தான் யாது பயன் அளிக்கவல்லது? புலால் நாறும் மீன் உணக்கும் தொழில் உடைய யாங்களும் புலால் நாறுகின்றேம் ஆதலின், எம் அருகே வராது, சற்று விலகி நிற்பீராக; கடலையே விளை நிலமாகக் கொண்ட எம் சிறிய நல்ல வாழ்க்கை, உம்முடைய உயர்ந்த அரச வாழ்க்கையோடு ஒத்த உயர்வுடையது அன்று; எனினும், எம்போன்ற பரதவர் குடியுள்ளும், நும் போன்ற செல்வ மக்கள் பலர் உளர்.'' என்று கூறுகின்றாள்.

''இவளே, கானல் நண்ணிய காமர் சிறுகுடி
நீனிறப் பெருங்கடல் கலங்க உள்புக்கு
மீனெறி பரதவர் மகளே!
நீயே, நெடுங்கொடி நுடங்கும் நியமமூதூர்க்
கடுந்தேர்ச் செல்வன் காதல் மகனே;
நிணச்சுறா வறுத்த வுணக்கல் வேண்டி
இனப்புள் ஒப்பும் எமக்கு நலன் எவனோ?
புலவு நாறுதும்; செலநின் றீமோ;
பெருநீர் விளையுள் எம் சிறுநல் வாழ்க்கை,
நும்மொடு புரைவதோ அன்றே;
**எம்மனோர் இல் செம்மலும் உடைத்தே.''**

நின் களவொழுக்கத்தை எமர் அறியின் நினக்கு ஏதப் பல இழைப்பர் என அச்சுறுத்திக் களவொழுக்கத்தைக் கடிய விரும்புவாள், 'எமர், கடலையும் கலக்கும் பெரு வன்மையர்' எனவும், நீ இவ்வாறு எங்கள் தலைவியின் நலத்தைக் களவொழுக்கில் நுகர விடாமல் நின்னைத் தடை செய்து அப்புறப் படுத்துவேம் என்பாள், 'மீன்

உணக்கலைக் களவிலே உண்ணவரும் புள்ளோப்பும் தொழில் உடையேம்' எனவும், இவ்வாறு களவொழுக்கில் ஒழுகுவதற்குத் தடையுண்டாவது கண்டு நீ வருந்தினும் நாங்கள் நின்பால் இரக்கம் ஒருசிறிதும் காட்டேம் என்பாள், 'நாங்கள், இரக்கம் இன்றிச் சுறாமீன்களைத் தூண்டித்து உணக்கும் இயல்புடையேம்' எனவும், இவ்வாறு கூறுவது கண்டு, தலைவன் வருந்திச் செல்வன் என்று அஞ்சி, நீ இவ்வாறு அரசன் மகன் போன்று வருவதை விட்டுப் புலால் நாறும் எம்மவர் போலவரின் நலமாம் எனவும், அவ்வாறு வரின், எம்மவரும், தம் குலமாதல் அறிந்து நினக்கு எம் தலைவியை மணம் செய்து தருவர் எனவும் கூறுவாள், 'புலவு நாறுதும்.' 'எம்மனோர் இல் செம்மலும் உடைத்தே' எனவும் ஈண்டு மகளிர் பலர் கூடியுள்ளார் ஆதலின், இவ்விடம் கூட்டத்திற்கு ஏற்ற இடம் அன்று என்பாள். 'செல நின்றீமோ' எனவும் கூறிய தோழியின் அறிவாற்றல் அறிந்து மகிழ்தற்குரியதாம்.

—தமிழ்ப் பொழில் : 1945-46 பக்கம் : 276—278

# கோசர்

"தன் ஆட்சிக்குக் கீழ்ப்படியாத, தன் அரசோடு ஒத்த பெருமைவாய்ந்த பேரரசுகளாம்" என மௌரியப் பேரரசன் அசோகனால் சிறப்பித்துக் கூறப்பெற்ற தென்னிந்திய அரச இனங்கள் நான்கனுள் **சத்யபுத்ரர்** என்னும் இனமும் ஒன்று. இச்சத்யபுத்ரரே கோசராவர் என்று வரலாற்று நூலாசிரியர் பலரும் கருதுவர்,[1] "நாலூர்க் கோசர் நன்மொழிபோல" எனவும்,[2] "வாய்மொழி நிலைஇய சேண்விளங்கு நல்லிசை வளங்கெழு கோசர்" எனவும்,[3] கோசர் வாய்மொழி வழுவாதவர் என்று சங்கநூல்களிலும் அறிவிக்கப்பட்டுள்ளமையால் போலும் அவர்கள் சத்யபுத்ரர் என அழைக்கப்படலாயினர்.

கோசர்க்குரிய நாடு துளுநாடு என்று பழந்தமிழ் இலக்கியம் பகருகிறது.[4] மங்களூரை நடுவிடமாகக் கொண்ட, துளுமொழி வழங்கும் நாடே துளுநாடாம் என்றும், கேரளநாட்டிற்கும், துளுநாட்டிற்கும் எல்லை

---

1. K.A.N. Sastri. Cholas: 28; V,A. Smith, Early History: 174.
2. குறுந் : 15. 3. அகம்: 205
4. மெய்ம்மலி பெரும்பூட் செம்மற் கோசர்....
தோகைக்காவின் துளுநாடு—அகம் : 15.

யாகச் சந்திரகிரி அமைந்துளது என்றும், அந்நாடே அசோகனால் சத்யபுத்ரர் என அழைக்கப்பெற்ற கோசர் நாடாம் என்றும் வரலாற்று ஆசிரியர் பலரும் முடிவு செய்வர்.[5] கோசர், 'கொங்கிளங் கோசர்' (சிலம்பு : உரை பெறு கட்டுரை) என்றும் அழைக்கப்பெறுவதால், அவர்கள் ஆட்சி கொங்கர் நாட்டிலும் பரவியிருந்தது என்று கொள்ளலாம்;"கொங்குநாடு, மேல்கொங்குநாடும், குடகு மைசூர் பகுதிகளும் அடங்கிய கங்கதேசம்" என்பர் திரு. மு. ராகவையங்காரவர்கள்;[6] "கோவை, தென்சேலம் மாவட்டங்களைக் கொண்ட நாடு" என்பர் பேராசிரியர் சிமித் அவர்கள்.[7] "நான் மொழிக் கோசர் என்றும் இன்னோர் வழங்கப்பெறுவர்; நான்மொழி என்பதற்கு வேறு பொருள் உரைகாரரால் கூறப்படுவ தாயினும், நாமக்கல் சாசனமொன்றால் (Ep. Rep. 11. 1906) **நாமொழிநாடு** எனத் திரிந்து புதியதாக நாடொன்று அறியப்படுகின்றது; அதனால், பண்டு அந்நாடு இக் கோசராட்சிக் குரியதாக யிருந்ததோ என்று கருதக்கூடியதே"[1] என்ற மு. இராகவையங்கார் கூற்றும் ஈண்டு நினைவுகூரற்பாலது.

இவ்வாறு, கோசர், விந்தியமலைக்குத் தெற்கே மேற்குக் கடற்கரையை அடுத்து உள்ள துளுநாட்டினர் என்பது வரலாற்றுப் பேராசிரியர்களாலும், பழந்தமிழ் இலக்கியங்களாலும் உறுதி செய்யப்பட்டிருப்பவும், "நம் முன்னோர், வடநாட்டவரை வேறு வேறாகவே பிரித்து

5. K.A.N. Sastri, Cholas: 218, V.A. Smith, Early History 396, 402.
6. சேரன் செங்குட்டுவன்: 110
7. V.A. Smith, Early History:112
1. சேரன் செங்குட்டுவன். 111.

வழங்கினர்; வேங்கடத் தும்பர் மொழிப்பெயர் தேயம் என்பதை அவர்களேகூறி, ஆண்டு உறைந்தவரை வடுகர் என்றும், அதற்கு அப்பாற்பட்டவரை (விந்தமலைக்கு அப்பாற்பட்டவரை) வடவடுகர் (அக்கால மகத நாட்டினர்) என்றும் குறித்துள்ளனர்; கோசராவார் வடவடுகர் எனப்படுவர்; இவர் கிழக்கு வங்காளத்தைச்சேர்ந்தவராகலாம் என டாக்டர் கிருஷ்ணசாமி ஐயங்காரவர்கள் கருதுதல் பொருத்தமுடையதே ஆகும்"[2] என்று கூறுவர், திருவாளர் மா. இராசமாணிக்கம் பிள்ளைவர்கள்.

வடநாட்டவரை வேறு வேறாகவே பிரித்து வழங்கினர் நம் முன்னையோர் என்ற அவர் கூற்றை ஏற்றுக் கொள்வதாயின், தங்களுக்கு மிக மிகச் சேய்மைக்கண் உள்ள மோரியரை, அவர் இனப்பெயர் அறிந்து வழங்கிய புலவர்கள், மோரியரை நோக்கத் தமக்கு அண்மையில் வாழ்ந்த கோசரையும் அவர் இனப்பெயர் கொடுத்தே அழைத்திருத்தல் வேண்டும். ஆனால், அவர்களை, அவர்கள் இனப்பெயரால் அழைக்காது, தங்களுக்கு மிக அண்மையில், வடக்கே வாழும் தெலுங்கு கன்னடியரினும் அவர்கள் சேய்மைக்கண் வாழ்வதால், **வடுகடர்** என்று மட்டும் அழைக்காது, **வடவடுகர்** என்று அழைத்தனர் என்று கொள்வது, வடநாட்டவரை வேறு வேறாகவே பிரித்து வழங்கினர் என்பதனோடு முரண்படுவதாம். விந்தமலைக்கு அப்பாற்பட்டாரை, வடவடுகர் என வழங்கினர் என்பதற்குச் சான்றாகக் காட்டும் புறநானூற்றுச் செய்யுளில்,[3] அச்சொல் மேல்வரிக்கண், 'தென்பரதவர்' என வந்ததற்கு ஏற்ப, எதுகை நோக்கி 'வடவடுகர்' எனக் கூறப்பட்டுளதேயன்றி, திருவாளர் பிள்ளையவர்கள்

---

2. சோழர் வரலாறு: 33, 34.
3. தென்பரதவர் மிடல்சாய வடவடுகர் வாளோட்டிய—புறம்: 378.

கொள்ளும் கருத்தில் கூறப்பட்டிலது. மேலும், வடக்கிற்கும் வடக்கு என்று பொருள்படுமாறு 'வடவடக்கு' என்ற தொடர் ஆளப்படுதல் வழக்காறன்று.

கோசர் கிழக்கு வங்காளத்தைச் சேர்ந்தவர் என்று கூறுவர் திரு பிள்ளையவர்கள், இஃது உண்மையாயின், அவர்கள் தமிழ்நாட்டில் நுழைய விரும்பினர் என்றால், அவர்கள் தமிழகத்தின் வடகிழக்கு வழியாகவே நுழைந்திருத்தல் வேண்டும்; ஆனால், அவர்கள் தமிழகத்தின் வடமேற்கு வழியாக நுழைந்தனர் என்றே திரு. பிள்ளையவர்கள் கூறுகின்றார்கள்.[1] இம்முரண்பாட்டையும்அவர் நோக்கிலர் போலும்! விந்தியமலைக்குத் தெற்கே, சேர நாட்டின் வடஎல்லைக்கண் மேற்குக் கடற்கரையைச் சார்ந்த நாட்டினராக, வரலாற்று ஆசிரியர்களாலும், பழந்தமிழ்ப் புலவர்களாலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட கோசரை, விந்தியமலைக்கு வடக்கே துரத்தி, கிழக்கு வங்காளத்தில் வாழச் செய்தமையினாலேயே இத்தகைய முரண்பட்ட முடிவுகளை வெளியிடலாயினர் திரு. பிள்ளையவர்கள்.

மோரியர் தென்னாட்டின் மீது படையெடுத்து வந்த காலை அவரோடு கோசர்படையும் வடுகர்படையும் இருந்தன எனவும், அப்படை மூன்றனுள் கோசர்படையே தமிழ்நாட்டினுள் முதற்கண் நுழைந்தது எனவும் கூறுவர் திரு. பிள்ளையவர்கள்.[2] திருவாளர் பிள்ளையவர்கள் கொள்கைப்படி, மோரியர் வடகோடியினர், கோசர் இடைப்பட்டவர், வடுகர் தெற்குத் திசைக்கண் உள்ளவர் என்பது முடிபாம்; அஃதாவது, தமிழகத்தின் வடஎல்லையை ஒட்டி முதற்கண் வடுகரும், அவரை அடுத்து வடவடுகராகிய கோசரும், அவருக்கும் அப்பால் மோரிய

1. 2. சோழ வரலாறு: 35.

ரும் வாழ்ந்தனர் என்பதாம். இஃது உண்மையாயின் இம்மூவரும் தமிழகத்தின் மீது படையெடுக்கின்றனர் என்றால், தமிழ்நாட்டினுள் முதற்கண் படையொடு நுழைவோர், தமிழகத்திற்கு அண்மையில், தமிழக எல்லைக்கண் இருக்கும் வடுகராக இருத்தல் வேண்டுமே ஒழிய, அவரைக் கடந்து, அவர்க்கும் அப்பால், அவருக்கும் வடக்கில் வாழ்வோராகிய கோசராக இருத்தல்இயலாது; அது போர்முறையும் ஆகாது; ஆனால், தமிழ்நாட்டினுள் முதற்கண் நுழைந்த படை கோசர் படையே என்று கூறுகிறார் திரு. பிள்ளையவர்கள். இஃது எவ்வாறு பொருந்துமோ அறியோம். மோரியர் தென்னாட்டுப் படையெடுப்பை உரைக்கும் சங்க இலக்கியங்கள், அப் படையெடுப்பில் தூசிப் படையாகச் சென்றது வடுகர் படையே என்று குறிப்பிடுகின்றனவேயன்றி, கோசர் படையைக் குறிப்பிடவில்லை,[3] என்பதையும் நினைவு கூர்ந்து நோக்குக.

துளுநாட்டைத் தமக்குத் தாய்நாடாகக் கொண்டு வாழ்ந்த கோசர், காலம் செல்லச் செல்ல, தாயகத்தின் நீங்கி கிழக்கு நோக்கிச் சென்று வாழத் தொடங்கினர் என்பதற்கான சான்றுகள் சங்க இலக்கியங்களில் காணப் படுகின்றன; ஆதனெழினி என்பானுக்குரிய செல்லூர்க்குக் கிழக்கேயுள்ள நியமம் என்ற ஊர் கோசர்க்கு உரியது என்ற செய்தி அகநானூற்றுச் செய்யுட்களால் அறியப் படுகிறது.[1]

---

3. முரண்மிகு வடுகர் முன்னுற, மோரியர்
தென்திசை மாதிரம் முன்னிய வரற்கு
—அகம் : 281

1. அகம் : 90, 216.

"அவர் (கோசர்) இடம் நெய்தலஞ்செறு எனச் சில அடிகள் குறிக்கின்றன" என்று கூறி, அதற்கு ஆதாரமாக, "கோசர் இளங்கள் கமழும் நெய்தலஞ் செறுவின் வளங்கெழு நன்னாடு"[2] என்ற செய்யுளைக் காட்டுவர் திரு. பிள்ளையவர்கள்.[3] வயல்களில் நெய்தல் மலர்ந்திருக்கும் காட்சிகள் பல சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன; "செறுவில் கள்நாறு நெய்தல்" (குறுந் : 296) "செறுவில் பூக்கும் நின்னூர் நெய்தல்" (குறுந் : 309); கரந்தைக் கொடி விளைந்த வயல் "கரந்தையஞ்செறு" (அகம் : 226) என அழைக்கப்படுவதுபோல், நெய்தல் மலர்ந்த வயல் "நெய்தலஞ்செறு" என அழைக்கப்படுதல் சங்க இலக்கிய மரபு. ஆதலின், கோசர் இளங்கள் கமழும் நெய்தலம் செறுவின் வளங்கெழு நன்னாடு" என்ற அப் பகுதி, "புதிய தேன் மணக்கும் நெய்தல் மலர்கள் மலர்ந்த அழகிய வயல்களையுடைய கோசர் நாடு" எனப் பொருள்படுமே ஒழிய, "நெய்தலஞ்செறு என்ற பெயரால் ஒரு இடம் உளது; அது கோசர்க்குரியது" என்று பொருள் கொள்ள இடந்தராது.

"வாட்டாறு என்ற ஊரையும், செல்லூர் என்பதனையும் ஆண்ட எழினி ஆதன் என்பவனைக் கோசர் எதிர்த்தனர்; அவன் செல்லூர்க்குக் கிழக்கே கோசரோடு போரிட்டு வேல் மார்பில் தைக்கப்பெற்று இறந்தான்" என்று கூறி, அதற்கு ஆதாரமாக,

"அருந்திறற் கடவுள் செல்லூர்க் குணாஅது
பெருங்கடல் முழக்கிற்றாகி, யாணர்
இருப்பிடம் படுத்த வடுவுடை முகத்தர்
கடுங்கண் கோசர் நியமம்." —அகம் : 90

"கடலாடு மகளிர் கொய்த ஞாழலும்
கழனி உழவர் குற்ற குவளையும்

கடிமிளைப் புறவிற் பூத்த முல்லையொடு
பல்லிளங் கோசர் கண்ணி யயரும்
மல்லல் யாணர்ச் செல்லிக் கோமான்
எறிவிடத் துலையாச் செறிபுரை வெள்வேல்
ஆதனெழினி அருநிறத் தழுத்திய
பெருங் களிற்று எவ்வம் போல." —அகம்: 216

என்ற அறநானூற்றுச் செய்யுட்களைக் காட்டுகின்றார் திரு. பிள்ளையவர்கள்.

கோசர் வாழும் நியமம் என்ற ஊர், செல்லூர்க்குக் கிழக்கே உளது. அக்கோசர் போரில் பட்ட வீரப் புண்ணாலாய வடுநிறை முகத்தினர்; அச்செல்லூர்க்கு அருகே இளங்கோசர் பலர் ஒன்றுகூடி கடலாடு மகளிர் கொய்துதந்த புலிநகக் கொன்றையினையும், கழனி யுழவர் பறித்துப் போட்ட குவளையினையும், காவற் காட்டில் மலர்ந்த முல்லையோடு கலந்து கட்டிய கண்ணி யணிந்து விளையாடுவர்; அச்செல்லூர் ஆதனெழினி என் பானுக்கு உரியது; அவன் களிற்றின்மீதும் வேல் எறியும் வீரம்மிக்கோன்; அவன் எறிந்த வேலேற்ற களிறுகள் பெரிதும் துன்புறும் என்ற இவையே அவ்விருசெய்யுட்கள் அறிவிக்கும் செய்திகளாம்; வேண்டுமானால், கோசர் ஆதனெழினியின் செல்லூர்க்கு அண்மையில் வாழ்ந்தவர் என்றும், ஒருகால், அவர்கள் அவன் அவைக்கள வீரர் களாக இருந்திருத்தலும் கூடும் என்றும் கொள்ளலாமே யன்றி, திரு. பிள்ளையவர்கள் கூறுமாறு, ஆதனெழினி கோசரோடு போரிட்டு இறந்தான் என்று கொள்வதற் குச் சிறிதும் இடமின்மையினை இப்பாக்களை ஒருமுறை உணர்ந்தாரும் உணர்வர்.

---

2. அகம் : 113. 3. சோழர்வரலாறு : 35.

நாடோடி வாழ்க்கையைக் கைவிட்டு நிலைத்த குடி யினராய் வாழத்தொடங்கிய கோசர், உழவுத் தொழி லைத் தமக்குரிய தொழிலாக மேற்கொண்டிருந்தனர்; காட்டை அழித்துப் பண்படுத்தி உழுது பயறு விளைத் திருந்தனர் கோசர். அந்நிலத்தில் அன்னிமிஞிலி என்பாளு டைய தந்தை மேய்த்துவந்த பசு புகுந்து மேய்ந்து விட்டது; அச்சிறு குற்றத்திற்காகக் கோசர், அவள் தந்தை யின் கண்களை அழித்துச் சிறுமை செய்தனர்; அவர் கொடுஞ்செயல் கண்டு சினம்கொண்ட அன்னிமிஞிலி, "தந்தையின் கண்களைப் போக்கிய கோசரை அழித்துப் பழி வாங்குவதற்கு முன், கலத்தும் உண்ணேன்; தூய ஆடையும் உடேன்" என்று வஞ்சினம் கூறி, அக்கோசரை அழிக்க வல்லோன், அழுந்தூர்க்குடையோனாகிய திதியனே என்பதறிந்து அவனிடம் தன்குறையுரைப்ப, அவ னும், அவள் பொருட்டுக் கோசரை வென்று, அத்தவறுக் குக் காரணமாய் இருந்தாரைக் கொன்றான். அதுகண்டு அவள் அகமகிழ்ந்தாள் என்ற வரலாற்றைப் பரணர் அறிவிக்கின்றார்.[1]

கோசர் நிலத்தில் விளைந்த பயிரைப் பசு மேய்ந்த சிறு குற்றத்திற்கு அவர்கள் அளித்த தண்டனைக்

---

1. "பயறு ஆபுக்கென
வாய்மொழித் தந்தையைக் கண்களைந்தருளாது
ஊர்முது கோசர் நவைத்த சிறுமையிற்
கலத்து முண்ணாள்; வாலிது முடாஅள்;
சினத்திற் கொண்ட படிவ மாறாள்;
மறங்கெழு தானைக் கொற்றக் குறும்பியன்
செருவியல் நன்மான் திதியற் குறைத்தவர்
இன்னுயிர் செகுப்பக் கண்டு சினமாறிய
அன்னி மிஞிலி." —அகம் : 262

கொடுமைக்குப் பழிவாங்குதற் பொருட்டே, திதியன் கோசரை அழித்தான் என்று தெளிவாகக் கூறப்பட்டிருப்பவும், "கோசர் சோழ நாட்டை அடைந்து அழுந்தூர் வேளான திதியனைத் தாக்கினர்" எனப் பிள்ளையவர்கள் கூறுவது[2] சிறிதும் பொருந்தாது.

கோசர் பெருவீரராய் விளங்கினர் என்பதை அறிவிக்கும் பழந்தமிழ்ப் பாக்களே, அவர்கள் போர்ப்பயிற்சி பெறும் முறையையும் விளக்கிக் கூறுகின்றன. இளங்கோசர் பலர் கூடிப் படைக்கலம் பயிலுங்கால், தம் பயிற்சிக்குத் துணையாக, முருக்க மரத்தான் இயன்ற இலக்கை வைத்து, அதன்மீது படைக்கலம் எறிந்து அழிக்க முயல்வர் என்ற செய்தியைக் காவிரிப் பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் என்ற புலவர் அறிவிக்கின்றார். இச்செய்தியை அறிவிக்கும் புறநானூற்றுச் செய்யுளையே ஆதாரமாகக் கொண்டு, "சேரன் தானைத்தலைவனும், முதிரமலைத் தலைவனுமான பிட்டங்கொற்றன் என்பானைக் கோசர் தாக்கினர்; போர் நடந்தது; முடிவு தெரியவில்லை"[3] என்று முடிப்பர் திரு. பிள்ளையவர்கள். அப்பாட்டைப் பாடிய புலவர், அப்பாட்டுடைத் தலைவனாகிய பிட்டங்கொற்றனின் போர்ச் சிறப்பைப் பாராட்ட, "இளங்கோசர் படைக்கலம் பயிலுங்கால், பலமுறை தம் படைக்கலத்தை, முருங்கை மரத்தானியன்ற இலக்கின் மீது எறியினும், அம்மரம் அழியாது நிற்பதைப்போல, நீயும் நின்னொடு பொருவார் நின்மீது படைக்கலம் பல எறியினும் அவற்றால் தொலையாது வெற்றி பெறுகின்றனை" என்று கூறுவதல்லது, பிட்டங்கொற்றனுக்கும் கோசர்க்கும் பகை உண்டு என்பதையோ, கோசர் அவனோடு போரிட்டனர் என்ற செய்தியையோ அறிவிக்க

---

2. சோழர் வரலாறு : 36.
3. சோழர் வரலாறு: 35.

வில்லை என்பதை அச்செய்யுளை ஒருமுறை நோக்கினாரும் உணர்வர். ஆதலின் திரு. பிள்ளையவர்கள் கூறுவது பொருந்தாமை உணர்க. இதோ அச்செய்யுள்:

"வெள்வேல்
இளம்பல் கோசர் விளங்குபடை கன்மார்;
இகலினர் எறிந்த அகலிலை முருக்கின்
பெருமாக் கம்பம் போலப்
பொருநர்க்கு உலையா நின்வலன்வாழியவே."[1]

கோசர், சேரர்க்குப் பகைவனும், வேளிர் பலர் பெரும் பொருள் சேர்த்துவைத்துப் பாதுகாத்து வரும் பாழிக்குரியோனுமாகிய நன்னன் என்பானுடைய மாமரத்தை வெட்டித் தம் நாட்டிற்குக் கொண்டு சென்றனர் என்பர் பரணர்.[2] நன்னன் தன் தோட்டத்துப் புனல்தந்த பசுங்காய் ஒன்றைத் தின்றதன் தப்பிற்காக ஒரு பெண்ணைக் கொலைபுரிந்தான் என்றகொடுஞ் செயலைப் பொறாதுபோலும் அப் பெண் கொலைக்குக் காரணமாய அவன் மாமரத்தை வெட்டினர் கோசர்!

நன்னனுக்குரிய பாழிப்பறந்தலையில்,அவன் நண்பன் மிஞிலி என்பானோடு போரிட்டு, வெளியன் வேண்மான் ஆஅய் எயினன் என்பான் இறந்தானாக, அதுகண்டு ஆற்றாது அழுத அவன் உரிமை மகளிர் துயரைப் போக்கியோனும்[3] தன்னைப் பாடிவரும்பாணர் முதலாயினோர்க்குப் பரிசாக யானை பல அளிக்கும் இயல்புடை

---

1. புறம்: 169.
2. "நன்னன்
   நறுமாகொன்ற நாட்டிற் போக்கிய
   ஒன்று மொழிக் கோசர்" —குறுந்: 73
3. அகம்: 203.

யோனும்,[4] மதுரை நகர்க்கண் வாழ்வோனும்,[5] ஆகிய அகுதை என்பானைக் காவல்செறிந்த இடத்தே வைத்துப் பாதுகாத்தனர் கோசர்.[6] கோசர் நன்னனோடுபோரிட்டு அவன் படைவலி அறிந்துள்ளனராதலின், அவனால் அழிவுறாவண்ணம் தடுக்கவே, அகுதையைத் தாம் பாதுகாத்தனர் எனக் கொள்ளுதல்கூடும்; நன்னன் மாமரத்தை வெட்டியது, தனக்கும், தன் நண்பன் மிஞிலிக்கும் பகைவனாகிய வெளியன் வேண்மான் ஆஅய் எயினனோடு நட்புப்பூண்டு அவன் உரிமைமகளிர் துயர் போக்கியமையால், தனக்குப் பகைவனாகிய அகுதை என்பானுக்கு அடைக்கலம் அளித்தமையால் நன்னன் தம்பால்கொண்ட பகை காரணமாதலும் கூடும்.

தமக்குப் பகையாவர் எனக் கருதியோரையெல்லாம் அழிப்பதையே தொழிலாகக்கொண்ட கோசர், தமக்குப் பணியாது நின்ற மோகூரைத் தாக்கினர்; மோகூர் பணிந்திலது; ஆகவே கோசர்க்குத் துணையாக மோரியர் என்பார் வந்தனர்; போரின் முடிவுதெரிந்திலது.[1] இம்மோகூர்

4. அகம்: 76, 113: புறம்: 233: குறுந்: 298.
5. புறம்: 347.
6. "புன்தலை மடப்பிடி அகவுநர் பெருமகன்
அமர்வீசு வண்மகிழ் அஃதைப் போற்றிக்
காப்புக்கை நிறுத்த பல்வேற் கோசர்"
—அகம்: 113.

1. "வெல்கொடித்
துனைகாலன்ன புனைதேர்க் கோசர்
தொன்மூதாலத்து அரும்பணைப் பொதியில்
இன்னிசை முரசங் கடிப்பிகுத் திரங்கத்
தெம்முனை சிதைத்த ஞான்றை மோகூர்
பணியாமையிற் பகைதலைவந்த
மாகெழுதானை வம்ப மோரியர்" —அகம்:251

தென் ஆர்க்காட்டுக் கோட்டத்தில், ஆத்தூர்க் கணவாய்க்கு அண்மையில் உள்ள மோகூராக இருக்கலாம் என்று அறிஞர்கள் கருதுகின்றனர்.[2] என்று திரு. பிள்ளையவர்கள் கூறுகின்றனர். கோசர்களாலும், பின்னர்ச் சேரன் செங்குட்டுவனாலும் தாக்கப்பெற்ற மோகூர் மன்னனாகிய பழையன், பாண்டியர் படைத்தலைவனாகிய பழையன் மாறனே ஆதலின், அவன் மோகூர் பாண்டி நாட்டில் யாண்டேனும்; இருத்தல்வேண்டும்; ஆகவே, அம்மோகூர், மதுரைக்கு வடகிழக்கில் உள்ள திருமோகூர் என்ற ஊராக இருக்குமேயன்றிச் சோழர் ஆட்சிக்குட்பட்ட தென் ஆர்க்காடு மாவட்டத்தில்உள்ள மோகூர் அன்று. கோசர் தாக்கிய மோகூரைத் தென் ஆர்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்த மோகூரைத் தென் ஆர்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்த மோகூராகக் கொள்ளலாம் என்ற அறிஞர்களோ, "மோகூர் என்றபெயரில் பல ஊர்கள் இருப்பதால் கோசர் தாக்கிய மோகூர் எது என்பதை முடிவு செய்வதில் விழிப்பாக இருத்தல்வேண்டும்" என்று எச்சரிப்பதும் காண்க.[3]

பாண்டியன் மறவனாகிய மோகூர்ப் பழையன் என்பானைக் கோசர் தாக்கியதன் முடிவு யாது என்பது அறியப்படவில்லை எனினும் கோசர், பாண்டியமன்னன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் ஏவல்கேட்கும் வீரராய், அவன் அவைக்களத்தின்கண் விளங்கினர் என்று மதுரைக் காஞ்சி கூறுகிறது; (771-774) தன் படைத்தலைவனோடு போரிட்ட கோசர்தம் போர் வன்மையினை நேரில் கண்டறிந்த பாண்டிய மன்னன், அக் கோசர் தன் படையில் இருப்பது தனக்குப்

2. சோழர் வரலாறு: 36.
3. K.A.N. Sastri Cholas 28.

பெருமையும் சிறப்பும் அளிக்கும் செயலாம் என்று கருதி அவ்வாறு கொண்டான் போலும்!

தமிழரசுகளை அழித்துத் தமிழகத்தில் குழப்ப நிலையைத் தோற்றுவிக்க முயன்ற, தமிழகத்திற்குப் புதியராய கோசரை வென்று, அவர் நாட்டையும் கைப்பற்ற எண்ணினான் கிள்ளி வளவன் என்ற செய்தியை நக்கீரர் அறிவிக்கின்றார்;[1] இவ்வாறு எதிர்ப்பட்டார் எவரையும் தமக்குப் பணியவைத்தன்றி மீள்வதில்லை என்று வஞ்சினம் கூறித் தாக்கும் கோசரை எதிர்த்து ஓட்ட முயற்சித்தவன் கிள்ளி வளவன் ஒருவனே என்று சங்கச் செய்யுட்கள் அறிவிப்பவும், "வடவடுகரான கோசரை இளஞ்சேட் சென்னி என்னும் சோழன் எதிர்த்து வாகை புனைந்தான்; மேலும் இவன் குறைவினையை முடிப்பதற்காகப் பாழிநகர் வரை பகைவரைத் தொடர்ந்து சென்று வடுகர் தங்கியிருந்த பாழியை எறிந்து, வம்பவடுகர் தலைகளை அறுத்து அழித்தான்"[2] என்பர் திரு. பிள்ளையவர்கள்.

அவ்விளஞ்சேட் சென்னி, வடுகரை வென்று, அவர் கைப்பற்றியிருந்த பாழியை எறிந்து சேரநாட்டில் பெரு

---

1. "வளங்கெழு கோசர் விளங்குபடை நூறி
நிலங்கொள வெஃகிய பொலம்பூட் கிள்ளி"
—அகம்: 205.

2 "சோழர் பெருமகன்
விளங்குபுகழ் நிறுத்த இளம்பெரும் சென்னி
குடிக்கடன் ஆகலின் குறைவினை முடிமார்
செம்புறழ் புரிசைப் பாழி நூறி
வம்ப வடுகர் பைந்தலை சவட்டிக்
கொன்ற யானை"
—அகம்: 375.

வெற்றி பெற்றான் என்பது உண்மையே என்றாலும்,[3] அவன், கோசரையும், அவர்க்குத் தலைமைபூண்டு வந்த மோரியரையும் வென்றான் என்று கொள்வதற்குரிய சான்று ஒன்றும் கிடைக்கப்பெறவில்லை; இளஞ்சேட் சென்னி இவ்வாறு முறியடித்த படையெடுப்பு, மோரியர் படையெடுப்பாயின், புலவர்கள், அவன் மோரியரை முறியடித்ததுபற்றி ஒன்றுமே கூறாது, அம்மோரியர்க்குத் துணையாகவந்த வடுகர், கோசர் இவர்களை முறியடித் ததை மட்டும் கூறினார் எனல் பொருந்தாது. இளஞ்சேட் சென்னி மோரியரை எதிர்க்கவுமில்லை; அவர்க்குத் துணையாக வந்த கோசரை அழிக்கவுமில்லை; அவர் அவ்வாறு பொருள்கொள்வதற்குக் காரணமாகிய "வட வடுகர்" என்ற தொடர் வடக்கே வாழும் வடுகர் என்றல்லது வடுகர்க்கும் வடக்கே வாழ்வோராகிய கோசர் என்று பொருள் தாராது என்று முன்னரே கூறி யுள்ளோம்.

வடுகரை வென்று பாழியைக் கைப்பற்றினான் இளம் பெருஞ்சென்னி என்று கூறும் அவ்வகநானூற்றுச் செய்யுளில், வரும் "குறைவினை" என்ற தொடருக்கு அரைகுறையாகப் பகைவரை முறியடிப்பது என்று பொருள் கொள்கின்றார் திரு. பிள்ளையவர்கள். "குறைவினை" என்பதை அறிவிக்கும், அதே செய்யுள் முதற்கண் "குடிக்கடன் ஆகலின்" என்ற தொடரையும் அறிவிக்கிறது. அத்தொடரையும் இணைத்து நோக்கிய வழிப்பெறப்படும் பொருள்: வேளிர் பெரும் பொருள் சேர்த்து வைத்த பாழியைக் கைப்பற்றுவதைச் சேரரும், வடுகரும் தம் குடிக்கடனாகக் கொண்டதைப்போன்றே, சோழரும், பல தலைமுறையாகத் தம் குடிக்கடனாகக்

3. " தென்பரதவர் மிடல்சாய
வட வடுகர் வாளோட்டிய " —புறம் : 378.

கொண்டிருந்தனர்; இளம் பெரும் சென்னி காலம்வரை, பாழி சோழரால் கைப்பற்றப் பெறவில்லை; ஆகவே, பாழியைக் கைப்பற்றுவதாகிய தம் குடிக்கடன், குறை வினையாக இருப்பதைப் போக்க, இளம்பெருஞ்சென்னி பாழியை எறிந்தான்; அப்பொழுது அதைக் கைப்பற்றி ஆங்கிருந்த வடுகர் பைந்தலைகளைச் சவட்டினான் என்பதே.

பழந்தமிழ் இலக்கியங்களில், மோரியர் தென்னாட்டு படையெடுப்பைப்பற்றிய குறிப்புக்கள் நான்கு இடங் களில் காணப்படுகின்றன எனினும், அவற்றால் பெறப் படும் விளக்கம்; வடுகர் முன்னுற மோரியர் தெற்கே வந்தனர், கோசர்க்கு மோகூர் பணியாமையின் மோரியர் துணை வந்தனர் என்ற இரண்டே ஆகும். பிற நிகழ்ச்சிகள் பற்றிய குறிப்பே காணப்படவில்லை; மோரியர் செயல் எனத் திரு. பிள்ளையவர்கள் கருதும் கோசர் செயல் களுள்ளும், சேரநாட்டுப் பிட்டங்கொற்றனையும், செல்லூர் வாட்டாறு இவற்றிற்குரிய ஆதன் எழினியையும் வென்றனர் என்பதும், சோழன் இளஞ்சேட் சென்னியால் முறியடிக்கப் பட்டனர் என்பதும் எங்கும், எப்போதும் நிகழாத செயல்களாம் என்பது முன்னரே கூறப் பட்டுளது. இவை நீங்கிய ஏனைய கோசர் செயல்களுள்—நன்னன் நறுமாவைக் கொன்றது—அகுதையைக் காத்தது—அழுந்தூர்த் திதியனால் தண்டிக் கப்பெற்றது—மோகூரைத் தாக்கியது—ஆகிய இச்செயல் களை, இது முடிந்தபின் இது முடிந்தது என்று நிரல் படுத்துக் கூறும் சான்று ஒன்றும் கிடைக்கப்பெறவில்லை. மோரியர் தமிழகத்திற்கு மிகச் சேய்மைக்கண் உள்ளவரே எனினும், அவர்கள் அந்நாட்டின்மீது படையெடுக்க தேர்ப்படையோடு கூடிய பெரும் படையுடன் வருகின்றனர் என்றால், போகுமிடத்தின் இயற்கை யறியாது போகார். தம்மால் அறிய இயலாது போயின்

தமக்குத் துணையாக வரும் தமிழகத்தின் அண்டை நாட்டினராகிய வடுகர் வழியாகவேனும் அறிந்தே போவர் ஆக இவற்றையெல்லாம் நோக்காது, கோசர் செயல் எல்லாம், மோரியர் ஏவலின்படி நிகழ்ந்தன என்று கொண்டு, "மோரியர் தமிழகத்தின் படைவலிமையையும் இயற்கையமைப்பையும், பிறவற்றையும் அறியாத வடநாட்டினராதலின், மோரியர் துளுவநாட்டை முதலில் வென்று, சேரநாடு சென்று, பிறகு வாட்டாறு சென்று, பின்னர்ச் சோணாடு அடைந்து, திதியனிடம் தோல்வியுற்று, பல இடங்களில் வழி தெரியாது திரிந்து, மீண்டும் சோணாடு புக்குமுறியடிக்கப்பட்டனர்" என்று திரு' பிள்ளையவர்கள் முடிவு கட்டிக் கூறுவது ஏற்கத் தக்கதன்று.

இதுகாறும் கூறியவாற்றான், அசோகனால் சத்ய புத்ரர் என அழைக்கப்பட்டவரே கோசர்; அவர் நாடு துளுநாடு; அவர்கள் தமிழகத்தில் புகுந்து, சோழநாட்டில் குடியேறி, உழுதொழில் மேற்கொண்டு வாழ்ந்தனர். ஆதன்எழினி என்பானுக்குரிய செல்லூர்க்குக் கிழக்கே உள்ள நியமம் என்ற ஊர் அவர்க்கு உரியதாக இருந்தது; நன்னன் நறுமாவைக் கொன்று, அவன் பகைவன் அகுதை என்பானைப் பாதுகாத்தனர். தாம் விளைத்த பயிரை மேய்ந்தது பசு என்பதற்காக, அப்பசுவுக்குரியோன் கண்களைப் போக்கியதனால், அழுந்தூர்த் திதியனால் அழிக்கப் பெற்றனர்; தமக்குப் பணியாத மோகூர் மன்னனை மோரியர் துணைகொண்டு தாக்கினர்; இறுதியில் பாண்டியன் படைவீரராகத் தொழிலாற்றினர்; இவை கோசர் வரலாறாம் என்பதும், அவர்கள் வாய்மை வழுவாத பெருவீரர்களாம் என்பதும் உரைக்கப்பட்டன.

— செந்தமிழ்ச் செல்வி : 1952-53 பக்கம் : 457

# தமிழகத்தில் உழவு

இன்றைய உலகம் பலவகையானும் வளர்ந்துளது; புதிய புதிய கண்டுபிடிப்புக்கள், உலக வளர்ச்சிக்குப் பெரிதும் துணைபுரிந்தன துணைபுரிகின்றன. கற்காலத்தில் இருந்த மனிதன், அணுவாற்றல் காலத்திற்கு முன்னேறிவிட்டான்; எண்ணெய், நீராவி, மின்ஆற்றல் முதலியன, அவன் உழைப்பைப் பெரிதும் குறைத்துவிட்டன; தொழில்வளர்ச்சிக்குப் பெரிதும் துணை புரிகின்றன; என்றாலும், உலகத்தின் அடிப்படைத் தத்துவம் என்றும்போல் ஒன்றாகவே உளது; புத்தம் புதிய கண்டுபிடிப்புக்கள், 'மக்கள் யாக்கை உணவின் பிண்டம்' என்ற கொள்கையை மாற்றி அமைத்து விடவில்லை; ஒருநாள் உணவை ஒழி என்றால் ஒழியாய்; இருநாளைக்கு ஏல்என்றால், ஏலாய்; ஒரு நாளும் என் நோவு அறியாய்; இடும்பை கூர் என்வயிறே! உன்னோடு வாழ்தல் அரிது' என்ற பாட்டிற்கு எதிர்ப்பாட்டுப் பாடும் நிலைமையை உண்டாக்கி விடவில்லை; 'கல்லைத்தான், மண்ணைத்தான், காய்ச்சித்தான் குடிக்கத்தான் கற்பித்தானா?' என்றவர் வேட்கையை நிறைவேற்றவுமில்லை.

இடைக்கால மனிதன், உணவையும், அதற்குக் காரணமாய உழவையும் குறைத்தே மதிப்பிட்டான். ஏன், அறவே மறந்தும் விட்டான். ஆனால், அண்மையில் நிகழ்ந்த உலகப் பெரும்போர்களும், அவற்றின் பின் விளைவுகளும்,

மனிதனை, உணவு, உழவு இவற்றின் இன்றியமையாமை யினை நன்கு உணரச் செய்துவிட்டன; மக்கள் இன்று பெற்ற இவ்வுணர்வைத் தமிழர்கள், பலநூறு ஆண்டு களுக்கு முன்னரே உணர்ந்திருந்தனர்; அக்காலத்திய நிலத்தின்தன்மை, அதன் அளவு, 'உழவுமுறை, அதற்கு இன்றியமையா நீர்தருவழி வகைகள், அந்நிலத்தின் விளைவாற்றல் ஆகியவற்றைப்பற்றித் தெளிவான குறிப்புக்கள் காணப்படாது போயினும், அவர்கள், உழவைப்பற்றி அறிய வேண்டுவனவற்றை, மிகவும் தெளி வாக அறிந்தே இருந்தனர் என்பதற்கு வேண்டிய அகச் சான்றுகள் பல, சங்கநூல்களிலும் பிறநூல்களிலும் பரந்து கிடக்கின்றன.

இந்த உடலைப்பற்றிப் பேசும்போதெல்லாம், 'சோற்றாலடித்த சுவர்,' 'உணவின் பிண்டம்' என்றே அதற்குப் பெயரிட்டு அழைத்து, உணவு, உடலும் உயிரும் கூடிவாழ உறுதுணை புரிகின்றது என்ற உண்மையை உலகறியக் கூறினர்; "மண்திணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம் உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே" என்று உணவின் சிறப்பினை எடுத்து விளக்கினார் மணிமேகலை நூலாசிரியர்; நாட்டின் இயல்பைப் பற்றிக் கூறவந்த திருவள்ளுவர், 'தள்ளா விளையுளும்' என முதற்கண், என்றும் குறையாத விளையுள் இருப்பதே நல்ல நாட்டிற்குப் பண்பாகும் என்று கூறினார். பிற நாடு களானும் விரும்பத்தக்க பெருவளம் உடையதே நாடு; அவ்வாறு விரும்பிய நாடுகள், தன்பால் வந்தால், அவற் றிற்கு வேண்டும் உணவு முதலியவற்றைத் தந்து தாங்கும் வளம்மிக வுடையதே நாடு; வளம் குறைந்தால் பசி மிகும்; பசி மிகுந்தால் பிணி மிகும்; ஆதலின், பிணியும், அதற்குக் காரணமாய பசியும் இல்லாமல் நீங்கவேண்டின், அந்நாட் டில் வளம் பெருகுதல் வேண்டும்; அத்தகைய பெரு வளத்தை, அந்நாடு பெற வேண்டுமாயின், அந்நாட்டின்

நிலம் ஆற்ற விளைய வேண்டும்; நிலம் ஆற்ற விளைய வேண்டுமாயின், இயற்கையாலோ அன்றிச் செயற்கை யாலோ உண்டாம் கேடுகள், ஆண்டு இல்லாதிருத்தல் வேண்டும்; நாட்டைப்பற்றித் திருவள்ளுவர் கொண்ட முடிபுகள் இவை; இதில், உணவிற்கு எத்துணை உயர்வு கொடுக்கப்பட்டுளது என்பதை நோக்குங்கள்.

நாட்டில், விளைவு மிகுந்திருக்க வேண்டும் என்பதை உணர்ந்த அவர்கள், பயிரிடத்தக்க நிலம் மிகுதியாக வேண்டும் என்பதையும் உணர்ந்தேயிருந்தனர்; அது குறித்து, அக்காலத்தே பரந்து கிடந்த காடுகளை அழித்து நாடாக்குவதை அரசர்கள் தங்களுடைய இன்றி யமையாக் கடமையாகக் கருதினர்; கருதியதோடு நில்லாது, அவ்வாறு காடுவெட்டி நாடாக்கிய அரசர் களைப் பாராட்டியும் வந்தனர். காடுவெட்டி நாடாக்கி விட்டதினாலேயே நிலம் விளைந்துவிடும் என்ற குருட்டு நம்பிக்கை இல்லாதவராய், நிலம் வளமாதற்கு வேண்டிய நீரின் இன்றியாமையை உணர்ந்து, இயற்கை நீர்வளம் உள்ள இடங்களில் அவற்றின் துணை கொண்டும், அவை அற்ற இடங்களில், குளம்வெட்டி அவற்றின் துணை கொண்டும், அந்நிலங்களின் வளத்தைப் பெருக்கினர். "காடுகொன்று நாடாக்கித், குளம்தொட்டு வளம் பெருக்கி" என்பது அவ்வாறு நாடுகண்டு வளமாக்கிய பேரரசன் ஒருவனைப் பாராட்டிய பட்டினப்பாலைப் பகுதியாகும். "உணவெனப்படுவது நிலத்தோடு நீரே; நீரும், நிலனும் புணரியோர், ஈண்டு உடம்பும், உயிரும் படைத்திசினோரே" இஃது உடம்பையும், உயிரையும் வளர்க்க வேண்டின், நிலவளமும், நீர்வளமும் பெருகச் செய்தல்வேண்டும் என அரசன் ஒருவனை நோக்கிக் கூறிய அறவுரை.

பலதுறையினும் வளர்ச்சியுற்றிருக்கும் இந்தக் காலத்திலும், மக்கள் தங்கள் நிலத்திற்கு வேண்டிய

நீருக்குப் பெரிதும் மழையையே எதிர்நோக்கி நிற்கின் றனர் என்றால், அத்தகைய வளர்ச்சியொன்றும் காணாத பண்டைக்கால மக்கள், மழையின் பெருமை உணர்ந்து பாராட்டியதில் வியப்பொன்றும் இல்லை. "மழையின்றி மாநிலத்தார்க்கில்லை;" "மாரி வறங்கூறின் மன்னுயிர் இல்லை" என்பன அறிஞர் கண்ட வான்சிறப்பு. மழை பெய்து விளைவு மிகுதலால் இன்பம் உண்டாதலை, "வான் நின்று உலகம் வழங்கி வருதலால், தான் அமிழ்தம் என்று உணரற்பாற்று" எனவும் "துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித், துப்பார்க்குத் துப்பாய தூஉம் மழை" (எனவும் வள்ளுவர் விளக்கினர்; பெயலும் அதனால் உண்டாகும் விளையுளும் மிகுதியாக இருக்கும் நாட்டில், அரசனும் இயல்புளிக் கோலோச்சுவன் எனச் செங்கோலுக்கும் மழையே இன்றியமையாதது என்று அறிந்திருந்தனர்; மழை பெய்யாது பொய்ப்பதால் உண்டாகும் கேட்டினை, "விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியன் உலகத்து உள்நின்று உடற்றும் பசி" எனவும், "புயல் என்னும் வாரி வளம் குன்றியக்கால், உழவர், ஏரின் உழார்" எனவும் வானம் பெயல் மறப்பின் அந்நாட்டு அரசனும் முறைகோடுவன்; ஆண்டவற்கு நடைபெறும் விழாவும், வழிபாடும் நடைபெறா; தானமும், தவமும் தங்கா எனவும் அறிந்திருந்தனர்.

வானோக்கி வாழ்ந்தனரே எனினும், தமக்கு வேண்டிய நீருக்கு, அவ்வானம் ஒன்றையே எதிர்நோக்கி வாழ்வது பாழ்படு வாழ்வாகவே முடியும் என்பதையும் அவர்கள் உணர்ந்திருந்தனர். வானம் ஒன்றையே எதிர் நோக்கிப் பயிர்செய்யும் நிலம், வயல்வயலாகப் பரந்து கிடப்பினும், பயனில்லை என்பதையும் உணர்ந்திருந் தனர். "வித்திவானோக்கும் புன்புலம் கண்ணகன் வைப் பிற்றாயினும், நண்ணி ஆளும் இறைவன் தாட்கு உத வாது." ஆதலின், அந்நிலத்திற்கு வேண்டிய நீரைப் பிற

வழிகளில் காணத் தொடங்கினர்; காண முற்பட்டார், அந் நீருணவு, ஆறு, ஊற்று, குளம், கிணறு ஆகிய இவ் விடங்களில் கிடைக்கும் என்பதையும், அவ் ஆறு, நீர் அறாமல் ஓடவேண்டுமாயின், அவ்வாற்றின் தோற்றம், பெருமலைக் கண்ணதாதல் வேண்டும் என்பதையும் உணர்ந்து, "இருபுனலும், வாய்ந்த மலையும், வருபுனலும்" ஒரு நாட்டிற்கு இன்றியமையா உறுப்புக்களாம் என்றும் கூறினர். ஆறு, ஊற்று, குளம், கிணறு ஆகியவற்றுள்ளும், தோண்டிய குளம், கிணறுகளே பெரிதும் குறையாது நின்று பயனளிக்கும் என்பதையும் உணர்ந்து, குளம் தோண்டுவதை வரவேற்றனர்; தோண்டியவரை வாழ்த்தினர்; "குளம் தொட்டு வளம் பெருக்கி" "வல்லே, நிலனெளி மருங்கின் நீர்நிலை பெருகத் தட்டோர் அம்ம! இவண் தட்டோரே; தள்ளாதோர், இவண் தள்ளாதோரே;" இவை அவ் வாழ்த்துரைகளுள் சில.

நிலவளமும், நீர்வளமும் பெற்றிருந்தாலும், அவ் விரண்டையும் பயன்படுத்தித் தொழிலாற்றும் குடிவளம் இல்லையாயின், அவற்றால் பயனில்லை என்பதை உணர்ந்து, உழவுத் தொழிலையும், அத்தொழிலை மேற்கொள்ளும் உழவரையும் இழித்துக் கூறும் இன்று போலாது, அத்தொழிலையும், அத்தொழில் மேற்கொண்டாரையும் பெரிதும் புகழ்ந்து வந்தனர்; "மேழிச் செல்வம் கோழைபடாது;" "தொழுதுஉண் சுவையின், உழுதுஉண் இனிது;" "சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம்;" "உழுவார் உலகத்தார்க்கு ஆணி;" "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்;" இரப்போர் சுற்றமும், புரப்போர் கொற்றமும், உழவிடை விளைப்போர்;" இவை, அத் தொழிலையும், அஃதுடையாரையும் பாராட்டிய பாராட்டுரைகள்.

உழவுத் தொழிலைப் பேணி வளர்த்து, அதனால் பெருவளம் பெற்றநாடு, மற்றெல்லா நாடுகளையும்,

தன் ஆணைவழி அடங்கி யிருக்கச் செய்து, ஆட்சிபுரிவது இன்றும் காணக்கூடியதே; இதைத் தமிழர்கள், அன்றே உணர்ந்து, அக்கால அரசர்க்கு உணர்த்தி வந்தனர்; "பகடு புறந்தருநர் பாரம் ஓம்பிக் குடிபிறந்தருகுவையாயின், நின் அடிபுறம் தருகுவர் நின் அடங்காதோரே," இது, சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை நோக்கி, வெள்ளைக்குடி நாகனார் என்ற உழவர் உரைத்த அறிவுரை. "பலகுடை நீழலும், தம் குடைக் கீழ்க் காண்பர்; அலகுடை நீழலவர்" இஃது வள்ளுவர் வழங்கிய அறிவுரை.

ஒரு நாட்டைப் போரிட்டுக் கைப்பற்ற விரும்புவோர் முதற்கண் அந்நாட்டில் வாழும் மக்களுக்கு வேண்டிய உணவுப் பொருள்கள், பிற நாடுகளிலிருந்து, உட்புகா வாறு, அந்நாட்டைச் சூழ உணவு முற்றுகையிடுவர்; இதனால், தன் நாட்டு மக்களுக்கு உணவு இல்லாமை யுணர்ந்து, அந் நாட்டரசன் பகைவர்க்குப் பணிந்து போவன்; ஒருநாடு போரில் தோலாது நின்று வெற்றி பெற விரும்புமாயின், அது, உணவிற்காகப் பிறநாட்டை எதிர்நோக்காது, தனக்கு வேண்டிய உணவைத் தானே விளைத்துக் கொள்ளும் பெருவளம் உடையதாதல் வேண்டும்; அந்நிலையிருந்தால், அந்நாடு, பகைவர் உணவு முற்றுகை மேற்கொள்ளினும், அவர்க்குப் பணி யாது நின்று வெற்றி பெறல் கூடும். இந்த உண்மையினை யும், அன்றைய தமிழர்கள் உணர்ந்திருந்தனர்.

பாரி ஒரு குறுநிலத் தலைவன்;சிறந்த கொடையாளி; பறம்பு என்ற மலையையும், அதைச் சூழ உள்ள முந் நூறு ஊர்களையும் ஆண்டுவந்தவன்; இவன் புகழ் பரவ வாழ்வதைக்கண்ட மூவேந்தர், இவனை வென்று அழிக்க ஆசைகொண்டனர்; நால் வகைப் படையும் கொண்டு; அவன் மலையை முற்றுகையிட்டனர்; பலநாள் ஆகியும்

அவன் பணிந்திலன்; அவன் பணியாமைக்குரிய காரணத்தைப் புலவர், அவன் நண்பர், கபிலர் விளக்குகிறார்: பாரியின் பறம்பு மலை, உழவர் உழாமலே, விளையும் நால்வகை உணவுப் பொருள்களையும் உடையது; ஒன்று மூங்கில் நெல்; இரண்டு, தீஞ்சுளைப் பலா போன்ற பழவகைகள்; மூன்று, வள்ளிபோன்ற கிழங்கு வகைகள்; நான்கு, இயற்கையில் பெறும் தேன் வகைகள்; இவற்றுடன், வற்றாத நீர்நிறைந்த சுனைகள் பல; அம்மலை நிறைய உள்ளன; பெருபடை உடையராயினும், பாரியை வெல்லுதல் இயலாது என்று கூறினார்:

அளிதோ தானே பாரியது பறம்பே!
நளிகொள் முரசின் மூவிரும் முற்றினும்,
உழவர் உழாதன நான்குபயன் உடைத்தே;
ஒன்றே, சிறியிலை வெதிரின் நெல்விளையும் மே;
இரண்டே, தீஞ்சுளைப்பலவின் பழம் ஊழ்க்கும் மே:
மூன்றே, கொழுங்கொடி வள்ளிக்கிழங்கு வீழ்க்கும்மே
நான்கே அணிநிற ஓரிபாய்தலின், மீதழிந்து
திணிநெடுங் குன்றம் தேன் சொரியும் மே;
........ ........................................ ..
தாளிர் கொள்ளலிர்; வாளிற் றாரவன்;

இவ்வாறு, உழவின் பெருமை யுணர்ந்த முன்னோர், "அகல வுழுவதினும் ஆழ உழவேண்டும்"; காற்று உட்புகும் அளவு, உழுத புழுதி உலற வேண்டும்; நிலத்தின் உரம் பெருக நிறைய எருப் போடுதல் வேண்டும்; உழுது, எருவிட்டு விதைத்தபின், குறையாமல் நீர்பாய்ச்சுதல் வேண்டும்; விளையும் பயிருக்கு ஊறு செய்யும் களைகளைக் கண்டிப்பாக அகற்றவேண்டும்; வளரும் பயிரைப் பிறவுயிர்வகைகள் அழிக்காவண்ணம் காத்தல் வேண்டும் என்பனபோன்ற உழவுத் தொழில்பற்றிய அடிப்படை

அறிவுகளையும் அறிந்து வாழ்ந்தனர். "தொடிப்புழுதி, கஃசா உணக்கின், பிடித்தெருவும் வேண்டாது சாலப் படும்," "ஏரினும் நன்றால் எருவிடுதல்;" "கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல், பைங்கூழ் களைகட் டதனொடு நேர்," "கட்டபின் நீரினும் நன்றதன் காப்பு," "செல்லான் கிழவன் இருப்பின், நிலம்புலந்து இல்லாளின் ஊடிவிடும்;" என்பன, உழவுத் தொழில் நுணுக்கம்பற்றி வள்ளுவர் உரைத்தவை.

—செந்தமிழ்ச் செல்வி 1953-54 பக்கம் : 22

# ஒருமைப்பாட்டின் அடிப்படை

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே உலகஅரங்கில் தலையாய இடம் பெற்றுத் திகழ்ந்தது தமிழ்நாடு. மேற்கே உரோம் முதலாம் நாட்டவரும், கிழக்கே சீனம் முதலாம் நாட்டவரும் வளங்கொழிக்கும் தமிழ்நாட்டின் அகில், ஆரம், முத்து முதலாம் விளைபொருள்கள், உறையூர்ப் பூந்துகில் போலும் செய்பொருள்களின் விலையாகத் தங்கள் நாட்டுப் பொற்காசுகளைக் கப்பல் கப்பலாக கொண்டு வந்து கொட்டிச் சென்றனர். அக் காட்சியைப் "பொன்னோடு வந்து கறியோடு பெயரும் யவனர் இயற்றிய வினைமாண் நன்கலம்" எனப் படம் பிடித்துக் காட்டிப் பாராட்டுகிறது பழந்தமிழ்ப்பா ஒன்று.

## போர் வெறியின் விளைவு

தமிழ் நாட்டின் அப்பீடும் பெருமையும் இன்று இல்லை.மாறாகத் தமிழகம் நனிமிகத் தாழ்ந்து விட்டது. தமிழ் நாடு, வயல் வளத்திலும் வாணிக வளத்திலும் சிறந்து, உலக அரங்கின் அவ்வுயர்ந்த இடத்தில் அமரப் பெருந்துணை புரிந்தவர், தமிழ் நாட்டை அன்று ஆண்டிருந்த சேர, சோழ, பாண்டியராம் முடியுடைய மூவேந்தர்களே என்றாலும், அத்தமிழ்நாடு, பிற் காலத்தே நிலைகுலைந்து போனதற்கும் அவர்களே முழு

முதற்காரணமானவர்; அம்மூவேந்தர்கள், மொழியை முன்னிறுத்தி, ஒற்றுமை உள்ளம் கொண்டு, உலகாள்வதற்கு மாறாகச் சேரர், சோழர், பாண்டியர் என்ற குலப் பெருமையே குறிக்கோளாய் நின்று, ஒற்றுமையைக் குலைத்து வேற்றுமையை வளர்த்து வந்தனர். மூவேந்தர் குலத்தில் பிறந்த ஒவ்வொருவரும் பிறரை அடக்கி, ஆள வேண்டும் என்ற எண்ணத்தோடு பிறந்தனர். ஒரு குலத்தில் ஒரு காலத்தில் ஆற்றல் மிக்க அரசன் ஒருவன் பிறந்து விட்டால், அவன் பிற இரு குலத்து அரசர்களையும் வென்று அடக்கி, அரசர்க்கு அரசனாய் வாழ, ஆசை கொள்வதும், அவன் பெருமை கண்டு மனம் பொறுக்க மாட்டாத பிற இரு குலத்து அரசர்களும் ஒன்றுபட்டுப் பிற குறுநிலத் தலைவர்களின் துணையையும் பெற்று, அவனை அழிக்க முனைவதும், அக்கால அரசியலின் அழிக்க முடியாத வழங்கங்களாகி விட்டன! அம்மட்டோ? ஒரு குலத்தவர் பிற குலத்தவரோடு போரிட்ட நிலையோடு நின்றுவிட வில்லை. ஒரு குலத்தில் பிறந்தவர்களுக்குள்ளேயே ஒருவர், ஒருவரோடு போரிட்டுக் கொள்ளவும், மகன் தன்னைப் பெற்ற தந்தை மீது போருக்கு எழவும், தந்தை தான் பெற்ற மகனையே போரிட்டு அழிக்கவும். அக்காலத் தமிழ் அரசர்கள்—போர் வெறிப் பிடித்துத் திரிந்தனர். அப்போர் வெறியின் விளைவே, தமிழகத்தின் சீர்குலைவு.

அச்சீர்குலைவைத் தடுத்து நிறுத்தும் முயற்சி அன்றே மேற்கொள்ளப்பட்டது; நாடழிவு தடுக்கப்படவேண்டுமாயின், போர் தடுக்கப்பட வேண்டும்; போர் தடுக்கப் படவேண்டுமாயின், வேந்தர்களிடையே நிலவும் அவ்வேறு பாட்டுணர்வு அகன்று, ஒற்றுமை உணர்வு உயிர்ப் பெறல் வேண்டும் என்பதை உணர்ந்த அக்கால ஆன்றோர் பலரும், அவ்வேந்தர்களுக்கு ஒருமைப் பாட்டுணர்வை, வாய்க்கும் போதெல்லாம் எடுத்துக் கூறிவந்துள்ளனர்.

## காரிக்கண்ணனார் ஒருமைப்பாட்டுக்கு வகுத்த வழி

தமிழகம் தான் பெற்றிருந்த பெருநிலை இழந்து இன்று தாழ்ந்து கிடப்பதற்குக் காரணம் தமிழ் வேந்தர்கள் தம்முள் ஒற்றுமையின்றி ஒருவரோடொருவர் பகை கொண்டு, ஒருவரை ஒருவர் கொன்றும் ஒருவர் நாட்டை ஒருவர் அழித்தும் வாழ்ந்த அறிவிழந்த வாழ்க்கையினாலேயே ஆம் என்பதை உணர்ந்த காரிக் கண்ணனார் என்ற புலவர், தம் காலத்தில் சோழ நாடாண்டிருந்த குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமா வளவனும் பாண்டிய நாடாண்டிருந்த வெள்ளியம் பலத்துத்துஞ்சிய பெருவழுதியும் ஒருவரோடொருவர் பகை கொண்டு போரிட விரும்பாது, நட்பு பூண்டு கலந்து வாழக் கண்டு களிமகிழ்வெய்தினார்; அவர்கள் எப் போதும் அவ்வாறே ஒருமைப் பாடுடையராய் வாழின், அவரையோ, அவர் நாட்டையே, அழிப்பார் எவரும் இரார்; மாறாக, அவர்கள் விரும்பினால் விரும்பும் நாடு களிலெல்லாம் அவர்கள் வெற்றிக் கொடியே பறக்கும்.

ஆகவே, அவ்வொருமைப்பாடு நெடிது வாழ விரும் பினார். அதே நிலையில், அவர்களிடையே நிலவும், அவ்வொருமைப்பாடு பொறாத சிலர், அவ்வேந்தர்களின் அவ்வொருமைப் பாட்டுணர்வை அழித்து மீளவும் பகையுணர்வை மூட்டி விடுவரோ என்ற அச்சமும் உடன் எழவே, அவ்வேந்தர்களை அணுகி, "வேந்தர்காள்! உங்கள் நண்பர்களைப் போலவும், உங்களுக்கு நல்லனவே செய்வார் போலவும், உங்கள் முன்னோர் நடந்து காட்டிய நல்வழியைக் காட்டுவார் போலவும், உம்மோடு கலந்து உரையாடி, உங்களிடையே நிலவும் இந்நட்புணர்வை அழித்து, உங்களிடையே மீளவும் பகை வரப் பண்ணி விடுவரோ நும் பகைவர் என்று அஞ்சுகிறது என் உள்ளம்! அன்னார்—உரைகளை உம் செவியுட் புகவிடாது இன்றே

போல இணைந்து வாழ்வீர்களாக" என்று வாழ்த்தி ஒருமைப் பாட்டிற்கு அன்றே வழி வகுத்துள்ளார்—

"இன்னீ ராகலின் இனியவும் உளவோ?
இன்னுங்கேண் மினும் இசை வாழியவே
ஒருவீர் ஒருவீர்க்கு ஆற்றுதி; ிருவிரும்
உடனிலை திரியீ ராயின், இமிழ்திரைப
பௌவம் உடுத்துஇப் பயங்கெழு மாநிலம்
கையகப் படுவது பொய்யா காதே;
அதனால், நல்ல போலவும், நயவ போலவும்
தொல்லோர் சென்ற நெறிய போலவும்
காதல் நெஞ்சின்நும் இடைபுகற்கு அலமரும்
ஏதின் மாக்கள் பொது மொழிகொள்ளது
இன்றே போல் கநும் "புணர்ச்சி."

ஒருவர்க்கு ஒருவர் துணையாக இன்றே போல் என்றும் ஒன்றி வாழுங்கள் என்று அன்று கூறிய அறவுரை; இன்றும் இன்றியமையாது தேவைப்படுவதாக உளது, வடவேங்கடம் தென்குமரி ஆகிய அவ்வெல்லைக்குட்பட்ட தமிழகத்தில் வாழ்ந்திருந்த, தமிழரசர்கள் எவ்வாறு ஒற்றுமை உணர்வு இழந்து வேற்றுமையுணர்வில் திளைத்துத் தமிழக வாழ்வில் தாழ் நிலையை உண்டாக்கி விட்டார்களோ, அதைப் போலவே, இமயம் முதல் குமரி வரையான, இந்தியப் பெருநாட்டில் வாழ்ந்திருந்த அரசர்களும் மொழியாலும் இனத்தாலும், சாதியாலும் சமயத்தாலும் வேறுபட்டு, காலமெல்லாம் போர் செய்து வந்த காரணத்தால் நாடு, பல அந்நியப் படையெடுப்புகளுக்கு உள்ளாகிப் பல நூறு ஆண்டுகள் அடிமை நாடாகி அழிவுற்றது.

## வேற்றுமைகளுக்கிடையே ஒற்றுமை

ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக அந்நியர் ஆட்சியால் அவல நிலைக்குள்ளாகி கிடந்த நாட்டிற்கு அண்ணல் காந்தியார் அறப்போர் ஆற்றி உரிமை பெற்றுத் தந்து விட்டுப் பெற்ற உரிமையைப் பேணிக் காக்கும் பொறுப்பைப் பின் வந்தார்க்கு ஒப்படைத்து மறைந்து விட்டார். இப்போது மன்னர்கள் இல்லை; ஆட்சிப் பீடத்தில் மக்கள் தலைவர்கள் உள்ளனர். அம்மக்கள் ஒரு மொழி பேசுவோர் அல்லவர், ஓர் இனத்தைச் சேர்ந்தவர் அல்லர்! ஒரு சமயத்தவர் அல்லர்; மொழியாலும், இனத்தாலும், சாதியாலும் சமயத்தாலும், உணவு, உடை, உறையுள் ஆகிய பழக்கவழக்கங்களாலும் ஒருவர்க்கு ஒருவர் முற்றிலும் வேறுபட்டவராவர்.

இவ்வேறுபாடுகள் உள்ளவரை, அவர்களிடையே, ஒற்றுமை—ஒருமைபாடு—எங்கே தோன்ற போகிறது என்றே எவரும் எண்ணி மலைப்பர்.

ஆனால் அண்ணல் காந்தியார் அவ்வாறு எண்ணி மலைத்தாரல்லர்.

ஒரே இனத் தொடர்புடையவரும், ஒரே மொழி பேசுவோரும், ஒரே கடவுளைவணங்குவோரும் ஆகிய அம் மக்களிடையே மட்டும் ஒருமைப்பாட்டினைக் காணலாம்! இனத்தால் வேறுபட்டவரும், மொழியில் வேறுபட்டவரும் வணங்கும் கடவுள் நெறியால் வேறுபட்டவரும் ஆகிய அம்மக்களிடையே ஒருமைப் பாட்டினைக் காண்பது இயலாது என்ற தத்துவத்தைத் தகர்த்து எறிந்தார்.

ஆரியர், திராவிடர் என்றும், ஆந்திரர் தமிழர் என்றும், இந்து முஸ்லீம் என்றும், வேறுபட்டிருந்த நம்

மிடையேதான் ஒருமைப் பாட்டினைக் கண்டார் காந்தியார்;

## வேற்றுமைக்கு வித்தாக அமைந்தது எது?

ஒரே இனத்தவர் பகைக்கின்றனர். வேறுபட்ட இனத்தவர் கூடி வாழ்கின்றனர். ஒரே மொழி பேசுவோரில் வேறுபடுகின்றனர். பல மொழி பேசுவோர் ஒன்றுபடுகின்றனர். ஒரே கடவுளை வணங்குவோர் பகைக்கின்றனர்—பல சமயத்தவர் கலந்து வாழ்கின்றனர்.

மக்களிடையே ஒற்றுமையை உண்டாக்க, இனம், மொழி, மதம் இவற்றின் ஒற்றுமை மட்டும் போதாது. உண்மையான ஒற்றுமையை உண்டாக்க, இவற்றின் ஒற்றுமையால் மட்டும் ஆகாது; உண்மையான ஒற்றுமையை உண்டாக்குவனவும் அவை அல்ல, அதை உண்டாக்குவதே வேறு ஒன்றே; அது எது?

அது போலவே, இன வேற்றுமை, மொழி வேற்றுமை, மத வேற்றுமை இருப்பதினாலேயே அவற்றை மேற்கொண்ட மக்களிடையே வேற்றுமை வளர்ந்து விடும் என்பதும் உண்மையாகாது; அவ்வேற்றுமை இருக்கும் மக்கள் இடையேயும் ஒற்றுமையை உண்டாக்கும் ஆற்றல் ஒன்றிற்கு உண்டு. அது எது?

அண்ணனும், தம்பியும், ஒரே தாயிடத்தில் பிறக்கின்றனர்; ஒரே மொழி பேசுகின்றனர்; ஒரே கடவுளை வணங்குகின்றனர். இன ஒற்றுமை, மொழி ஒற்றுமை, மதவொற்றுமை, அவ்வளவும் அவர்களிடத்தில் உள என்றாலும், அண்ணன் தம்பிகள் சண்டை அன்றாட நிகழ்ச்சியாகி விடக் காண்கிறோம். இன ஒற்றுமை அவர்களிடையே ஒருமைப் பாட்டினை உண்டாக்கவில்லை.

அவர்கள் பேசும் ஒரே மொழி, ஒற்றுமை குலைவதைத் தடுக்கவில்லை; அவர்கள் வணங்கும் ஒரே கடவுள், அவர்கள் பகைத்துக் கொள்வதைப் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறார்; தடுக்க முடியவில்லை அவராலும்.

இந்தியாவில் எத்தனையோ இனம்; எத்தனையோ மொழிகள்; எண்ணித் தொலையாத மதங்கள் இருந்தும் விடுதலைப் போராட்டக் காலத்தில் அவ்வளவு பேரும் ஒன்றுபட்டிருந்தனர்; இன வேற்றுமையோ, மொழி வேற்றுமையோ, மதவேற்றுமையோ, அவர்கள் ஒன்று பட்டதைத் தடுக்கவில்லை.

அண்ணன் தம்பிகளுக்கிடையே வேற்றுமை ஏன் உண்டாகிறது? பகை ஏன் வளருகிறது? ஒருவரை யொருவர் ஏமாற்றி விட்டமை; ஒருவன் உழைப்பது; ஒருவன் ஊர் சுற்றி வருவது; ஒருவன் பொருள் ஈட்டுவது; ஒருவன் அதை அழிப்பது என்ற இதுதானே காரணம். அண்ணன் தம்பிகளுக்கிடையே பொருளில் ஏற்றத் தாழ்வு ஏற்பட்டுவிட்டது. ஒற்றுமை இல்லை. இது தவிர்த்து, வேறு என்ன காரணம்? இருவருக்கிடையே பொருள் அளவில் ஒற்றுமை இல்லை; அவ்வொற்றுமை யின்மை, அவர்களிடையே ஒற்றுமைக்கான காரணங்கள் எவ்வளவோ இருப்பினும், அவர்களை வேறுபடுத்தி விட்டது. அவ்வளவு ஆற்றல் படைத்தது அந்த பொருள் வேற்றுமை.

## மக்களிடையே ஒற்றுமையை உருவாக்குவது...!

ஆரியர்—திராவிடர் என்றும் ஆந்திரர்—தமிழர் என்றும் இந்து-முஸ்லீம் என்றும் வேறுபட்டிருந்தோம் நாம். இருந்தும் ஒன்றுபட்டோம், அந்நியன் ஆட்சிக் காலத்தில். ஆரியர்—திராவிடர் இன வேற்றுமையோ, ஆந்திரர்—தமிழர் என்ற மொழிவேற்றுமையோ, இந்து—

முஸ்லீம் என்ற மத வேற்றுமையோ, நாம் ஒன்று படடதைத் தடுத்து நிறுத்த முடியவில்லை. வேறுபாடு களையெல்லாம் மறந்து நம்மை ஒன்றுபடச் செய்தது எது?

அந்நியன் ஆளுகிறான். நாம் அடிமை, இனத்தால், மொழியால், மதத்தால் நாம் வேறு வேறு என்றாலும் பொருள்நிலையில்—அரசியலால் அடிமைப்பட்டுள்ளோம். பொருள் நிலையால் வறுமைப் பட்டிருக்கிறோம் என்ப தில் நம்மிடையே ஒருமைப்பாடு இருந்தது. அந்த ஒருமைப் பாடு நம்மிடையே இருந்த வேறுபாடுகளையெல்லாம், மறக்கப்பண்ணி ஒன்றுபடச் செய்தது. பொருள், ஒருமைப் பாட்டிற்குக் காரணமாக இருந்தது.

## ஒருமைப்பாட்டின் அடிப்படை

ஆகவே, மக்களிடைடுய ஒற்றுமைகளை உருவாக்குவது உண்மையில், இனமோ, மொழியோ, மதமோ அன்று மாறாகப் பொருள், பொருள், பொருள் ஒன்றே.

பொருளால் ஒரே நிலையில் உள்ளவர்கள் ஒன்று படுவர். அப்பொருள் நிலையால் ஏற்றத் தாழ்வு உள்ள மக்கள் வேறுபடுவர். இதுதான் உண்மை.

இந்தியா உரிமை பெற்றுவிட்டது. ஆனால் பெற்றது அரசியல் உரிமை ஒன்றே. வெறும் அரசியல் உரிமையால் மட்டும் ஒரு நாட்டிற்கு வாழ்வு வந்துவிடாது. அரசியல் உரிமையை அடுத்துப் பொருளாதார உரிமையையும் பெற்றால்தான், நாட்டில் வளம் பெருகும். அந்த உரிமையை இந்தியா இன்னமும் அடையவில்லை. அதை அடைய, நாட்டு மக்கள் ஆற்ற வேண்டிய பணிகள் எவ்வளவோ உள்ளன.

அவற்றை ஆற்றும் நிலையில் அவர்களிடையே, மொழி பற்றிய வேறுபாடோ, இனம் பற்றி வேறுபாடோ, மதம் பற்றி வேறுபாடோ ஒரு சிறிதும் தலை தூக்க விடக் கூடாது; அது சிறிது தலை தூக்கினாலும், மக்கள் அவ் வேறுபாட்டுணர்ச்சிக்கு அடிமையாகி, ஆக்கப் பணிகளை அறவே மறந்துவிடுவர்.

## உலக ஒருமைப்பாடு உருவாகிட!

ஆகவே, ஆட்சிப் பீடத்தில் அமர்ந்திருப்போர் எந்த ஒரு மொழிக்கோ, எந்த ஒரு இனத்திற்கோ, எந்த ஒரு மதத்திற்கோ, தனி ஆதிக்கம் உண்டாக்கக்கூடிய சூழ் நிலையை, எக்காரணத்தை முன்னிட்டும் உருவாக்காது, அனைத்து மொழிக்கும் சமவாய்ப்பும், எல்லா இனத்த வர்க்கும் சமநிலையும், எல்லா மதத்திற்கும் சம உரிமை யும் வழங்குதல் வேண்டும் என்பதில் விழிப்பாயிருந்து விழுமிய ஆட்சி மேற்கொள்வாராயின் "யாதும் ஊரே, யாவரும் கேளிர்" என்ற உலக ஒருமைப்பாட்டு நிலை யினை எளிதில் எய்து விடலாம். வாழ்க அவ்வுலக ஒருமைப்பாடு!

வளர்க அவ்வொருமைப்பாடு!

—வானொலியில் பேச்சு.